ஸ்ரீ:

ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானங்கள்



பதிப்பாசிரியர்:-

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீஸூக்திமாலா மலர்-17

ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானங்கள்

[நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப்பெருமாள் நாயனர், ஆகிய பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்களும், தம்பிரான்படியும், பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டும் கூடியது.]

∴ ∴ ∴

பதிப்பாசிரியர்:-

**S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
**அட்வகேட்,**

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

∵ ∵ ∵

ஸ்ரீநிவாஸம் அச்சுக்கூடம், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை 2-12-0] 1956 [தபாற்கூலி 0-6-0.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ★ முகவுரை ★

"ஆசார்யதேவோ பவ" [ஆசாரியனைப் பரதெய்வமாகக் கொள்வாயாக] "தேவமிவாசார்யமுபாஸீத" [ஆசாரியனைப் பரதெய்வத்தைப்போலே உபாஸிக்கக்கடவன்.]

**"யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ।**
**தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:॥"**

[எவனுக்குப் பரதெய்வத்திடம் மேலான பக்தியுள்ளதோ, தேவனிடத்திற்போலே குருவினிடத்தில் பக்தியுள்ளதோ அந்த மஹாபுருஷனுக்குச் சொல்லப்பட்டால்தான் இவ்வர்த்தங்கள் பொருள்படும்] என்று வேதங்கள் ஆசார்யனிடத்திலே பரதத்வபுத்திபண்ணச் சொல்லின. **"தேவுமற்யறியேன்"** என்று இவ்வர்த்தத்தைக் கண்ணிநுண்சிறுத்தாம்பிலே அனுஷ்டித்துக் காட்டினார் ஸ்ரீமதுரகவியாழ்வார். ஈச்வரனைப் பற்றுவது, கையைப்பிடித்துக் காரியங்கொள்ளுவதுபோலே, பலனைத் தருமென்னும் நிச்சயமில்லை. ஆசாரியனைப் பற்றுவது, காலைப்பிடித்துக் காரியங்கொள்ளுவதுபோலே பலனை நிஸ்ஸம்சயமாகத்தரும். சேதநேச்வரர்கள் இருவர்க்கும் உபகரிப்பவன் ஆசாரியன்; ஈச்வரனும் ஆசாரியனாக ஆசைப்படுகிறான். பகவான் சேதனனுக்கு ஆசார்யனை உதவுகிறான்; ஆசாரியன் இவனுக்கு பகவானை உதவுகிறான். ஆசார்ய ஸம்பந்தம் பரமபுருஷனுக்கு ஸ்திரீப்ராயனான சேதனனுக்குத் தாலிபோன்றதாகும்; ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தாலே பக்தியும் நழுவப்பெற்று, பகவத் ஸ்வாதந்த்ர்ய பயத்தாலே ப்ரபத்தியும் நழுவப்பெற்ற சேதனனுக்கு ஆசார்யாபிமானமே உத்தாரகமாகும். ப்ராப்யத்தைப் பார்த்தாலும், பரமபுருஷனை ப்ராப்யமாகப் பற்றினார்க்கு இவ்வுலகிலிருக்கும்வரையில் ஸுகதுக்கங்கள் மாறி மாறி வரும்; ஆசாரியனைப் பற்றினார்க்கு ஸுகமேயொழிய து:க்கமில்லை. "உண்டபோது ஒருவார்த்தையும் உண்ணாதபோது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே; அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது; அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவருண்டிறே; அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக்கடவோம்" என்றார் பரமஜ்ஞானநிதியான பிள்ளைலோகாசாரியர். **"இன்பத்தி லிறைஞ்சுதலில் இசையும் பேற்றில் இகழாத பல்லுறவில் இராகமாற்றில், தன்பற்றில் வினைவிலக்கில் தகவோக்கத்தில் தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மையாக்கில், அன்பர்க்கேயவதரிக்கு மாயன்நிற்க அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே."** என்றார் ஸ்ரீவேதாந்த தேசிகன்.

இப்படிப்பட்ட ஆசார்யவைபவத்தை இப்பிரபந்தத்திலே வெளியிட்டருளின ஸ்ரீமதுரகவியாழ்வார் திருக்கோளூர் என்னும் திவ்யதேசத்திலே த்வாபரயுகக்கடைசியிலே பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணோத்தம குலத்திலே அவதரித்தருளியவர். நம்மாழ்வாரையொழிய வேறொன்றறியாதவர். திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களின் அவதாரத்துக்கும் ப்ரசாரத்துக்கும் காரணபூதராயிருந்தவர். அவருடைய இப்பிரபந்தமும், ப்ராப்யப்ராபகங்களில் சரமமான ஆசாரியனின் பெருமையைப் பேசுவதாகையாலே ஒப்பற்றதாகும். நாலாயிரம் பாசுரங்களில் மற்றுள்ள எல்லாப்பாசுரங்களும் சேர்ந்தாலும் இப்பத்துப் பாசுரங்களுக்கு ஒப்பாக மாட்டா. இப்பத்துப் பாசுரங்களை உபாஸித்ததன் மூலமே நாதமுனிகள் மறைந்துபோன நாலாயிரத்தையும் நமக்குக் கண்டெடுத்துக்கொடுத்தார். இப்பத்திலே நாலாயிரமுமுண்டு; இதில்லையேல் நாலாயிரமுமில்லை.

இப்படிப்பட்ட பெருமையையுடைய இவ்வாழ்வார் அருளிச்செய்த இப்பிரபந்தம் இப்படி ஒப்பதும் மிக்கதும் இல்லாததாயிருக்கையாலே இதற்குப்பல பேராசிரியர்கள் வியாக்கியானமிட்டருளினார்கள்; கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டரையல்லது வேறொன்றறியாத நஞ்சீயருடைய சுருக்கமான வியாக்கியானமும், அவரையே தெய்வமாகக் கொண்ட நம்பிள்ளையின் வியாக்கியையும், அவருக்கு வலதுகைபோன்ற பெரியவாச்சான் பிள்ளையின் அரிய பெரிய பேருரையும், ஆசார்யஹ்ருதயகாரரின் அதிவிஸ்தாரமாய், அதிகம்பீரமானதான அற்புதவ்யாக்யானமும் அமையப்பெற்றது இப்பிரபந்தம் ஒன்றுக்கேயாகும். இதுதவிர, பூர்வர்கள் ப்ரஸாதித்தருளிய தம்பிரான்படியென்னும் உரையும் இப்பிரபந்தத்திற்கு அணிசெய்கிறது. நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியான திருவாய் மொழிக்கும், அவருடைய பெருமையைப்பேசும் இக்கண்ணிநுண் சிறுத்தாம்புக்குமே இப்படி பல பரமாசாரியர்களால் விவரிக்கப்பெற்ற பெருமை ஏற்பட்டுளது. இவ்வியாக்கியானங்கள்அனைத்தும்,பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு அச்சிடப்பட்டு ஸ்ரீஸூக்திமாலையின் பதினோழாவது மலராக வெளியிடப்படுகிறது. ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் ஹஸ்தபூஷணமாயிருக்கத்தக்கது இக்கிரந்தம்.

கார்த்திகை 29,
கோயில் வைகுண்ட ஏகாதசி,
துர்முகி—ஸூ

இங்ஙனம்,
தொண்டர் தாள்தூளி,
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி தாஸன்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# கண்ணிநுண்சிறுத்தாம்பு

## வ்யாக்யானங்கள்

### ஸ்ரீநாதமுனிகள் அருளிய தனியன்கள்

१. अविदितविषयान्तरः शठारेरुपनिषदामुपगानमात्रभोगः।
अपि च गुणवशात्तदेकशेषी मधुरकविर्हृदये ममाविरस्तु॥

1. அவிதிதவிஷயாந்தரச்ஶடாரே ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:।
அபி ச குணவஶாத்ததேகஶேஷீ மதுரகவிர்ஹ்ருதயே மமாவிரஸ்து॥

பதவுரை:-அவிதிதவிஷயாந்தர:-(நம்மாழ்வாரைத் தவிர)வேறொரு விஷயத்தையுமறியாதவரும், ஶடாரே:—நம்மாழ்வாருடைய (திவ்ய ஸூக்திகளாகிய,) உபநிஷதாம்—திவ்யப்ரபந்தங்களை, உபகாநமாத்ர போக:—இசைபாடுவது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டவரும், குணவஶாதபிச—குணமடியாகவும், ததேகஶேஷீ–அந்த நம்மாழ்வாரொருவரையே தமக்கு ஶேஷியாகக்கொண்டவருமான, மதுரகவி:- மதுரகவியாழ்வார், மம ஹ்ருதயே—என் நெஞ்சில், ஆவிரஸ்து— ஆவிர்ப்பவிக்கக்கடவர்.

---

### பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த தனியன் வ்யாக்யானம்

அவதாரிகை:— (அவிதிதவிஷயாந்தரச்ஶடாரே ரித்யாதி) இதில் "வேறொன்றும் நானறியேன்" என்று ஆழ்வாரையொழிந்த விஷயங்களில் அவிதிதராயிருப்பாராய், சடகோபரென்னும் திருநாமத்தையுடையரான நம்மாழ்வாருடைய அநுபவ பரீவாஹரூபமான திருவாய்மொழியின் கானமே போகமாயிருக்குமவ

ராய், அவ்வளவிலும் நில்லாதே அதுக்குமேலும் வாத்ஸல்ய குணத்தாலும் தோற்று, அவரையே தம்மையடிமைகொள்ளும் சேஷியென்றறுதியிட்ட மதுரகவிகள்தாம் நிலையுண்டாம்படி என் ஹ்ருதயத்திலே ஸுப்ரதிஷ்டிதராகக் கடவரென்கிறது.

(அவிதிதவிஷயாந்தர:) ஆழ்வாரையொழிந்த விஷயங்களிலே வ்யுத்பத்திபண்ணி அறியாரென்கிறது. ‡ "சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லா" § "மற்றொன்றினைக்காணாவே" 1"भावो नान्यत्र गच्छति" (பாவோ நாந்யத்ர கச்சதி) என்னக்கடவதிறே. இங்கு விஷயாந்தரங்களாகிறது பாட்டுக்கேட்கு மிடமான பரவிஷயம், கூப்பீடுகேட்கு மிடமான வ்யூஹவிஷயம், குதித்தவிடமான விபவவிஷயம், வளைத்தவிடமான அர்ச்சாவதாரவிஷயம்; எல்லாம் வகுத்தவிடமான ஆழ்வாரேயாகையாலே மற்றொரு விஷயங்களையும் அறியாதேயிருப்பர்.

2"माता पिता"(மாதாபிதா) /"அன்னையாயத்தனாய்" 2"सर्वं यदेव" (ஸர்வம்யதேவ) ஸமஸ்தஸாம்ஸாரிகவிஷய ஸுகங்களும் சடகோபாசார்ய ரென்றறுதியிட்டு ததந்யங்களை அறியாதவரென்றுமாம். ஆழ்வார், || "எல்லாம் கண்ணன்" என்றிருக்குமாபோலே.

§ "கோயில்கொள் தெய்வமெல்லாம் தொழவைகுந்தம் கோயில் கொண்ட குடக்கூத்தவம்மான்—கோயில் கொண்டானதனோடு மென்னெஞ்சகம்" என்றும், ‡ "மொய்த்தேதிரைமோது தண் பாற்கடலுளான், பைத்தேய் சுடர்ப்பாம்பணைநம்பரனை வைத்தேன் மதியால்" என்கையாலே. † "அவன் கிடந்தும் என்னெஞ்சகலான்" என்றும், / உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்தான் என்று மெப்போது மென்னெஞ்சம் துதிப்பவுள்ளே யிருக்கின்ற பிரான்" என்றும், * கண்கள் சிவந்தில்படியே, r "ஒருவனடியேனுள்ளான்" என்றும், s "திருப்பேர் நகரான் திருமாலிருஞ்சோலை பொருப்பேயுறைகின்ற பிரானின்றுவந்து

† திருவாய் 7-10-10. § அமல-10. / கண்ணி-4. || திருவாய் 6-7-1.
§ திருவாய் 8-6-5. ‡ திருவாய் 8-7-10. † பெரியதிருவ-35.
/ திருவாய் 7-10-4. r திருவாய் 8-8-1. s 6-10-8.

இருப்பேனென்றென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், §"விண்மீதிருப்பாய்" என்கிறவைந்தும் "எனதாவியுள்மீதாடி" என்றும், ‡"தேவர்கோலத் தொடுமானன்" என்கிற தெய்வ வுருவிலே இவர்க்கு எல்லா முண்டாகையாலேயாய்த்து. கரிய கோலத்திருவுருக் காண்பனென்றதும்.

"அவிதிதவிஷயாந்தரச்ஶடாரே:" என்கையாலே சடாரியைக் காட்டிலும் அறியாமலிருப்பதான அந்யவிஷயங்களை யுடையவரென்கிறது. அதாவது ஆழ்வார்கழிக்குமது இளந்தெய்வத்தையாய்த்து; இவர்கழிக்குமது கழிபெருந்தெய்வமாய், கருந்தேவனெம்மான் கண்ணனை பெருந்தேவனையாய்த்து. "கட்டுண்ணப்பண்ணிய பெருமாய னென்னப்பனில் நண்ணி" என்றாரிறே †"உன்னித்து மற்றொருதெய்வம் தொழாள்" ||"ஒருமாதெய்வம் மற்றுடைய மோயாமே" "தேவுமற்றறியேன்" என்றாய்த்து இவர்கள் பேச்சிருப்பது. இப்படி ஆழ்வாரில் வ்யாவ்ருத்தராயிருக்கிறவர்.

"ஶடாரேருபநிஷதாமுபகாந மாத்ரபோக:" என்கையாகிறவது நாட்டியல்வொழிந்து சடரையோட்டின சடகோபன் *மொழிபட்டோடும் கவியமுதமான *யாழினிசைவேதத்தின், *பண்ணார் பாடலின் அநுபவரஸஜ்ஞராய், "பாவினின்னிசை பாடித்திரிவனே" நாவினால் நவிற்றின்பமெய்தினேன் மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே" என்றிருக்கை யென்றபடி. இத்தால், அவரோபாதி அவர்ஸம்பந்தமுடையதும் உத்தேச்ய மென்றாய்த்து இவர்விருப்புவது.

"அவிதிதவிஷயாந்தரச்ஶடாரே:" என்று ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யம்சொல்லிற்று. "அபிசகுணவஶாத்ததேகஶேஷீ" என்று குணக்ருததாஸ்யமும் உண்டென்கிறது. (அபிச) கீழ்ச் சொன்ன வளவன்றிக்கே, பின்னையும், குணவஶாத் தம்மை யெழுதிக் கொள்ளுகையாலே "ததேகஶேஷீ" என்கிறது "குணவஶாத்" என்று த்ருதீயார்த்தேபஞ்சமியாய்க் கிடக்கிறது.

§ திருவாய் 4-9-5. ‡ திருவாய் 5-1-9. † திருவாய் 4-6-10.
|| திருவாசி-7.

"ஆதலில், அன்னையாயத்தனுயென்னையாண்டிடும் தன்மையான் சடகோபனென்னம்பியே" என்றும், "பயனன்றாகிலும் பாங்கல ராகிலும் செயல் நன்றாகத்திருத்திப்பணிகொள்வான், குயில் நின்றார் *பொழில்சூழ் குருகூர்நம்பி" என்று அநுஸந்தித்த வாத்ஸல்யாதிகுண பூர்த்தியாலும், * குணைர்த்தாஸ்யமுபாகத ராய் ததேகசேஷியா யிருப்பாராய்த்து.

ஏவம்பூதரான மதுரகவிகள் "அண்ணிக்குமமுதூறுமென்னு வுக்கே" என்னும்படியான வாங்மாதுர்யத்தை யுடையவர். (மமஹ்ருதயே) மதுரகவிகள் நிஷ்டையை அபேக்ஷிக்கிற வென் மநஸ்ஸிலே, அன்றிருந்து பட்டோலைகொண்ட நிலையோடே (ஆவிரஸ்து) ஆவிர்ப்பவிக்கக்கடவர்; ஸந்நிதாநம் பண்ணக்கடவர். இத்தால் அநுகூலரான ஆசார்யபரதந்த்ரர் ஆதரணீயரென்னு மர்த்தம் சொல்லிற்றாய்த்து.

2. வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யாரேம்மை
ஆள்வா ரவரே யரண்.

பதவுரை:—வேறு ஒன்றும் நான் அறியேன்—"(நம்மாழ்வார் தவிர) வேறொருபொருளும் நான் அறியமாட்டேன்; வேதம் தமிழ் செய்த—வேதார்த்தங்களைத் தமிழாக அருளிச்செய்த, மாறன்-மாறனென்னும் நாமத்தையுடையவரும், வண் குருகூர் ஏறு—அழகிய திருக்குருகூர் நகர்க்குத்தலைவருமான, சடகோபன்—நம்மாழ்வார், எங்கள் வாழ்வு ஆம் என்று—எமக்கு உஜ்ஜீவநராவர்" என்று, ஏத்தும்—தோத்திரஞ் செய்தருளின, மதுரகவியார் — மதுரகவியாழ்வார், எம்மை ஆள்வார்—நம்மை ஆள்பவர்; அவரே—அந்த மதுரகவிகளே, அரண்—(ப்ரபந்நகுலத்துக்கு) காவலாயிருப்பவர்.

அவ:—(வேறொன்றும் நானறியேன்) ஆழ்வாரையொழியத் தேவுமற்றறியாத மதுரகவிகள் நமக்கு ஸ்வாமியும் ரக்ஷகரு மென்கிறது.

வ்யா:—"வேறொன்றும் நானறியேன், வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன் வண்குருகூரேறெங்கள் வாழ்வாமென்றேத்தும் மதுரகவியா ரெம்மையாள்வார்" என்னுமளவும் மதுரகவி சொல்லை யநுஸரித்துச் சொல்லியபடி; மேல் ஏவம்வித்ரானவர் நமக்கு ஶேஷியும் ஶரண்யருமென்கிறது.

"தேவுமற்றறியேன்" என்றதை "வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்றது. "காரிமாறப்பிரான்" "சடகோபனென்னம்பி" என்றத்தை "மாறன் சடகோபன்" என்றது. "பெரியவண் குருகூர் நகர்நம்பிக்காளுரியனாயடியேன் பெற்றநன்மையே" என்றத்தை "வண்குருகூரேறெங்கள்வாழ்வாம்" என்றது. "எழுமையுமெம்பிரான் நின்று தன்புகழேத்த வருளினான்" என்றத்தை "ஏறெங்கள் வாழ்வா மென்றேத்தும் மதுரகவியார்" என்றது. "என்னையாண்டிடும் தன்மையான்" என்றத்தை "எம்மையாள்வார்" என்கிறது. அவரை யாளுகிறவர் ஆழ்வார்; நம்மையாளுகிறவர் இவர். அவரே, அரண் - ரக்ஷை. "சரண்" என்று பாடமான போதும் ரக்ஷையென்றே அர்த்தம். மதுரகவிகளுக்கு எல்லாம் ஆழ்வாரேயானப்போலே நமக்கு எல்லாம் மதுரகவிகளென்கிறது.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த
தனியன் வ்யாக்யாநம் முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நஞ்சீயர் அருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம்

## அவதாரிகை

ஆத்மாவுக்கு உத்தமம் மத்யமம் அதமமென்ற புருஷார்த்தங்களாவன சிதசிதீச்வர தத்வத்ரயங்கள். அவற்றில் அல்பாஸ்திரத்வாதி தோஷங்களாலே ப்ரக்ருதிதத்வம் அதமபுருஷார்த்தம். ஜந்மமரணாதிஷட்பாவவிகாரரஹிதமாய் நிரதிசயஸுகரூபமாயிருந்ததேயாகிலும் பகவதேகாந்தமான கல்யாணகுணவைதுர்யத்தாலே தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பமான ஆத்மாநுபவம் மத்யமபுருஷார்த்தம்.

ஸர்வேச்வரன் புருஷார்த்த மென்னுமிடத்தில் கரும்பு தின்பார் வேர்ப்பற்றையும் நுனியையும் கழித்து நடுவைக் கொள்ளுமாபோலே ஸ்ரீவைகுண்டநாதனை யொழிய க்ருஷ்ணவதாரமே புருஷார்த்தமாகவும், அதிலே கம்ஸவதத்துக்குப் பின்பாகக்கழித்து முன்பு வெண்ணெய் களவு கண்டு யசோதைப்பிராட்டியார்கையாலே கட்டுண்டு அவளுக்கஞ்சிநின்ற அவஸ்த்தையையுடைய க்ருஷ்ணனே உபாயமும் உபேயமும் விரோதி நிரஸநம் பண்ணுவானும் மற்றுமெல்லாமென்றும் அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகளிலே அகப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களே இவ்வாத்மாவுக்கு நாதபூதரும் நிரதிசய புருஷார்த்த பூதருமென்றும் ஆழ்வார் நிர்ணயித்தார்.

ஸ்ரீமதுரகவியாழ்வார் ஸ்ரீசத்ருக்நாழ்வானைப்போலே அத்தைப்பூர்வபக்ஷமாக்கி, எம்பெருமான் பக்கலிலும், ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலிலும் ஆழ்வார் பண்ணினதடைய ஆழ்வார் திருவடிகளிலேயாக்கி அதுருசித்து அத்தைப்பேசி அநுபவிக்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு நம்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானம்

## அவதாரிகை

ஐச்வர்யம் முதலாக ஸகலபுருஷார்த்தங்களையும் விதிக்கிற ஶாஸ்த்ரமர்யாதையிலே நின்றார்கள் ருஷிகள். ஶாஸ்த்ர தாத்பர்யமாய் உத்தமபுருஷார்த்த லக்ஷணமான பகவத்ப்ராப்தியிலே நின்றார்கள் ஆழ்வார்கள். இப்புருஷார்த்தத்தினெல்லைநிலமான ததீயஶேஷத்வத்திலே நின்றார் ச்ரீமதுரகவிகள். இதுதான் இவர்க்கு வந்தவழியென்னென்னில்; ஆழ்வாரை, பொய்ந்நின்ற ஞானம் துடங்கி அவாவற்று வீடுபெற்றவளவும் செல்ல அநுவர்த்தித்தவிடத்தில், அவர் தமக்கு உத்தேச்யமாகத் திருவாய்மொழியிலே பயிலுஞ்சுடரொளி, நெடுமாற்கடிமையிலே புருஷார்த்த காஷ்ட்டையாக ததீயஶேஷத்வத்தையே அறுதியிடுகையாலே அவருடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தையே பற்றுகிறார் இவர்.

இதுதான் ஸ்ரீராமாயண புருஷர்களில் ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பக்கலிலே காணலாம். 3 "**वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः**" (வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயதப்ரபு:) என்கிறபடியே வேதோபப்ரும்ஹணார்த்தமாகப் பிறந்த ஸ்ரீராமாயணத்தில் தர்ம ஸம்ஸ்தாபநார்த்தமாக அவதரிக்கையாலே ஸ்ரீராமாயண புருஷர்கள் நால்வரும் நாலுதர்மத்தை யநுஷ்டித்துக் காட்டினார்கள்.

"ஒருவன் சொல்லிற்று ஒருவன் செய்யக்கடவன்" என்கிற தர்மம் நேராக அழிந்து கிடக்கையாலே பித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மத்தை அநுஷ்டித்தார் பெருமாள். 4 "**पितुर्वचननिर्देशात्**" (பிதுர்வசந நிர்த்தேஶாத்) 5 "**अगस्त्यवचनात्**" (அகஸ்த்யவசநாத்) 6 "**सुग्रीववचनात्**" (ஸுக்ரீவவசநாத்) 7 "**समुद्रवचनात्**" (ஸமுத்ரவசநாத்) என்றிறே இவருடைய அநுஷ்டாநங்கள்.

"ஶேஷபூதன் ஶேஷியைக்குறித்து கிஞ்சித்கரிக்கக்கடவன்" என்கிற விசேஷதர்மத்தை யநுஷ்டித்தார் இளையபெருமாள் 8 "**कुरुष्व मामनुचरं**" (குருஷ்வமாமநுசரம்) 9 "**अहं सर्वं करिष्यामि**" (அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்றிறே இவருடைய அநுஷ்டாநம்.

10 **"राज्यं च तव रक्षेयमहं वेलेव सागरं। प्रतिजानामि ते वीर माभूवं वीरलोकभाक्"** (ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம் ப்ரதிஜாநாமிதேவீர மாபூவம்வீரலோகபாக்) [*ராஜ்யஞ்சதவரக்ஷேயம்*] 11 **"रक्ष धर्मेण बलेन"** (ரக்ஷ தர்மேண பலேந) *என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்குத் தாதர்த்யம் ஸ்வரூபமானாலும், உம்மால் என்னை மீறவொண்ணாதுகாணும் [அஹம்வேலேவ ஸாகரம்] கடலுக்குக்கரை சேஷமாயிருக்கச்செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல். அப்படியே நீர்பெரியீரென்னு, உம்மால் என்னை விஞ்சவொண்ணாது காணும். [ப்ரதிஜாநாமி] நான் இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். [தேவீர] ஒருகோழை முன்னேயோ ப்ரதிஜ்ஞை பண்ணுகிறது. ப்ரதிஜ்ஞை பண்ணினால் அத்தைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத் தனமுடைய உம்முடைய திருமுன்பேயன்றோ? [மாபூவம்] இப்படி செய்திலேனாகில் உம்முடைய ஸந்நிதியில் வர்த்திக்கப் பெறுதொழிகை யன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப்பெறாதவனாகிறேன். [வீரலோகபாக்] உம்மை முடிசூடி அநுபவிக்கப் பாரித்து அதுபெறாதேபோன சக்ரவர்த்திபுக்க லோகம் புகுகிறேன் என்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றிக்கே, சேஷியுகந்தவடிமை செய்யக்கடவதென்னுமிடத்தை அநுஷ்டித்தான் ஸ்ரீபரதாழ்வான்.*

*அப்படியிருக்கிற இவனையுல்ல தறியாதேயிருக்கையாலே பகவச்சேஷத்வ காஷ்டையான ததீயசேஷத்வத்தை அநுஷ்டித்தான் ஸ்ரீசத்ருக்நாழ்வான்.* 12 **"गच्छता मातुलकुलं भरतेन तदानघः। शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः॥"**(கச்சதாமாதுலகுலம் பரதேந ததாநக:। சத்ருக்நோ நித்யசத்ருக்நோ நீத:ப்ரீதிபுரஸ்க்ருத:)

*"கச்சதா" என்கிற வர்த்தமாந நிர்த்தேசத்தாலே தனக்கொரு ப்ரயோஜநமுண்டாயாதல், பூர்வக்ஷணத்தில் போகுகைக்கு நினைவுண்டாயாதலின்றியே அவனையொழிய ஜீவிக்க*

மாட்டாமையாலே போனுனென்கை. [மாதுலகுலம்] யுதாஜித்து அழைத்துவந்ததும் அவனையாகையாலே போக்கினுத்தேச்யம் அவனுக்கு; இவனுக்கு அவன்பின்போகை உத்தேச்யமாய்ப் போனுனென்கை. [பரதேந] 13 "**भरत इति राज्यस्य भरणात्**" (பரத இதி ராஜ்யஸ்ய பரணுத்) என்கிறபடியே சக்ரவர்த்தியுமஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளையபெருமாளும் தொடர்ந்தடிமை செய்யவேணும் என்றுபோய், ஸ்ரீஶத்ருக்நாழ்வானும் தன்னையல்லதறியேனென்றிருக்கிற தசையிலே ராஜ்யத்தை வஹித்துக் கொண்டிருந்தானென்கை.

[ததா] இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ரபேதமு முண்டாயிருந்தால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போகப்ராப்தமாயிக்க, அவன்போனதுவே தனக்கு முஹூர்த்தமாகப் போனுனென்கை. [அநக:] அகமில்லாதது இவனுக்கிறே. அல்லாதார்க்கு ராமபக்தியும் கலசியிருக்கையாலே பாபமிச்ரஜீவநமென்கிறது. ராம பக்தியைப்பாபமென்னப்போமோவென்னில், பாபத்தில் புண்யம் நன்ருயிருக்க மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் 14 "**पुण्यपापे विधूय**" (புண்யபாபேவிதூய) என்றுகொண்டு பாபஶப்தவாச்யமாகாநின்றது. ஆகையாலே பரதாநுவ்ருத்தியாகிற உத்தேச்யத்துக்கு விரோதியாகையாலே ராமபக்தியும் பாபமாயித்தனே.

[ஶத்ருக்ந:] பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற வஸிஷ்டபகவான் பெருமாள் கண்டாரை அழகாலே துவக்கவல்லரென்று தோற்றியிருக்கையாலே ராமனென்றும், இளையபெருமாளுக்குக் கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே லக்ஷ்மணனென்றும், 13 "**भरत इति राज्यस्य भरणात्**" (பரத இதி ராஜ்யஸ்ய பரணுத்) என்று தோற்றியிருக்கையாலே ஸ்ரீபரதாழ்வானென்றும் திருநாமஞ்சாத்தி, இவனுடைய ஸந்நிவேஶத்தைக் காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படியிருக்கக் காண்கையாலே ஶத்ருக்நனென்று திருநாமம் சாத்தினுன்.

[நித்யஶத்ருக்ந:] பாஹ்யஶத்ருக்களை யன்றிக்கே ஆந்தரஶத்ருவான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. இந்த்ரிய ஜயத்துக்கு எல்லை எவ்வளவென்னில், 15 "**पुंसां दृष्टिचित्तापहारिणं**"

(பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணுதிருக்கை. அதாவது பெருமாளைப்பற்றும்போதும் தன்னுகப்பாலன்றியே அவனுகந்த விஷயமென்று பற்றுகை.

[நீத:] ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்று கொண்டுபோமாபோலே அவன்கொண்டுபோகப் போனான். த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்கும். அதுபோலன்றியே ஜாதிகுணங்களோபாதி போனான். [ப்ரீதிபுரஸ்க்ருத:] "தமையன்பின்னே தம்பிபோகக்கடவன்" என்கிற முறையாலே போனானல்லன். 9 "अहं सर्वं करिष्यामि" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்ற இளையபெருமாளைப்போலே எல்லாவடிமைகளும் போனவிடத்திலே செய்யலாமென்று பாரித்துக்கொண்டு ப்ரீதிப்ரேரிதனாய்ப் போனான். படைவீட்டிலிருந்தால் பரதாநுவ்ருத்தி, ஓநவர்க்கிட்ட சோற்றைப் பகிர்ந்துண்பாரோபாதி ஔக(ஹ)ரியாயிறேயிருப்பது.

பாஷ்யகாரர், "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்றவிதுக்கு ப்ரமேயமாகச் சொற்கட்டிலே "ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி அவனையல்லது அறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது அறியாதபடியானான்" என்றருளிச்செய்வர். இதுவே ப்ரயோஜந(க)மானால் சொல்லும் மிகையெல்லாம் பொறுக்குமிறே. "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவனைப்பற்றினானென்னவுமாய். இப்படி இவனைப்போலே இருப்பாரொருவர் ஸ்ரீமதுரகவிகள்.

இனி ததீயர் உத்தேச்யரென்னுமிடத்தில் முதலடியிலே அஜ்ஞாதஜ்ஞாபநத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டியும், இவன் பகவத்விஷயத்திலே அவகாஹித்து, குணாநுஸந்தானத்தாலல்லது செல்லாதபடியானால் 16 "बोधयन्तः परस्परं" (போதயந்த: பரஸ்பரம்) என்கிறபடியே போதுபோக்குகைக்கு உசாத்துணையாயும், ப்ராப்திதசையில் வந்தால் 17 "यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்திதேவா:) என்கிறபடியே ஸாத்யவிவ்ருத்திரூபத்தாலும் புருஷகாரபாவத்தாலும் உத்தேச்யராவர்கள். இப்படி ஸர்வாவஸ்தையிலும் ததீயரே உத்தேச்யரென்று அத்யவஸித்துத் தமக்கு உபகாரகரான ஆழ்வார்தம்மையே பற்றுகிறார்.

நம்பிள்ளை ஈட்டின் அவதாரிகை முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கண்ணிநுண் சிறுத்தாம்புக்குப்

## பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானம்

### அவதாரிகை.

18 "**त्रैगुण्यविषया वेदाः**" (த்ரைகுண்யவிஷயா வேதா:) என்கிற படியே ஐச்வர்யாதி ஸகலபுருஷார்த்தங்களையும் யதாதிகாரம் விதிக்கிற வேதமர்யாதையிலே நின்றார்கள் ரிஷிகள்.

அதாகிறது—வேதோபப்ரும்ஹண முகத்தாலே சேதநருடைய குணாநுகூலமாக ஐச்வர்யாதி க்ஷுத்ரபுருஷார்த்தங்களையும், பரம புருஷார்த்த லக்ஷணமான மோக்ஷத்தையும் உபதேசிக்கை. 19 "**प्राजापत्यं गृहस्थानां ब्राह्मं सन्यासिनां स्मृतं**" (ப்ராஜாபத்யம்

---

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தின் அரும்பதவுரை

### அவதாரிகை

திருமந்த்ரார்த்த ப்ரதிபாதகங்களான திவ்யப்ரபந்தங்களை வ்யாக்யாநம் செய்தருளுகிற பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை தம்முடைய பரமக்ருபையாலே * வேதத்துக்கோமென்னுமது போலுள்ளதுக்கெல்லாம் சுருக்கான திருப்பல்லாண்டுக்கும் * மத்திமமாம் பதம்போல் சீர்த்த மதுரகவி செய்கலைக்கும், த்ரிதீய பதார்த்த ப்ரதிபாதகங்களான மற்றுமுள்ள திவ்யப்ரபந்தங்களுக்குமுள்ள தாத்பர்யங்களை அறிந்து எல்லாருமுஜ்ஜீவிக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றி, அதில் மத்யம பதார்த்த நிஷ்டா ப்ரதிபாதகமான கண்ணிநுண்சிறுத்தாம்பின் பொருளை அறிவிக்கக்கோலி, வக்த்ருவைலக்ஷண்யத்தையும் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்யவே ப்ரபந்த வைலக்ஷண்யம் அர்த்தஸித்தமாமாகையாலே ப்ரதமம் வக்த்ரு வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்;—(த்ரைகுண்யேத்யாதி)-(இருப்பாரொருவராய்த்து ஸ்ரீமதுரகவிகள்) என்னுமளவும். 'இனி' இத்யாதி வாக்யங்களில் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யமென்று கண்டுகொள்வது.

அதில் வக்த்ரு வைலக்ஷண்ய ஸித்த்யர்த்தமாக ருஷிகளுக்கும் ஆழ்வார்களுக்குமுள்ள நெடுவாசியை உபபாதிக்கிறார், (த்ரைகுண்யேத்யாதி),

க்ருஹஸ்தாநாம் ப்ராஹ்மம் ஸந்யாஸிநாம் ஸ்ம்ருதம்) என்று தொடங்கி கேவலாச்ரமாநுஷ்டாநங்களையே ஐச்வர்யவிசேஷங்களுக்கு ஸாதநமாக உபதேசித்து, 19 "योगिनाममृतं स्थानं स्वात्मसन्तोषकारिणाम्" (யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷ காரிணாம்) என்று கைவல்ய நிஷ்டர்க்கு ஆத்ம ப்ராப்தியை உபதேசித்து 19 "एकान्तिनस्सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये। तेषां तत्परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः॥" (ஏகாந்திநஸ்ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹி யே தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய:) என்று நித்யஸத்வஸ்தர்க்கு பகவத்ப்ராப்தியை உபதேசித்தானிறே ஸ்ரீபராசரபகவான்.

இனி ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்களுக்கு நெடுவாசியுண்டு. எங்ஙனேயென்னில், வேததாத்பர்யமாய் உத்தமபுருஷார்த்தமான பகவத் ப்ராப்தியிலே நிஷ்டராய், பிறர்க்கு உபதேசிக்குமிடத்திலும் சாஸ்த்ரஸித்தமான ஐச்வர்யாதிகளையும் த்யாஜ்யமாக உபதேசிக்குமவர்களிறே. இவ்வாழ்வார்களுக்கும் மதுரகவியாழ்வார்க்கும் நெடுவாசியுண்டு; எங்ஙனேயென்னில், இவ்விலக்ஷண புருஷார்த்தத்தினுடைய காஷ்டையான ததீயசேஷத்வத்தளவிலே வரப்புகுரநின்றார் ஸ்ரீமதுரகவிகள்.

---

20 "त्रयो गुणाः त्रैगुण्यम् सत्त्वरजस्तमांसि। सत्त्वरजस्तमःप्रचुराः पुरुषाः त्रैगुण्यशब्देनोच्यन्ते। तद्विषया वेदाः" (த்ரயோ குணா: த்ரைகுண்யம் ஸத்வரஜஸ்தமாம்ஸி। ஸத்வரஜஸ்தம:ப்ரசுரா: புருஷா: த்ரைகுண்ய சப்தேநோச்யந்தே। தத்விஷயா வேதா:) என்றிறே பாஷ்யம். இத்தை உட்கொண்டு (யதாதிகாரம் விதிக்கிற) என்கிறது.

கீழ்வாக்ய விவரணம் (அதாகிறது இத்யாதி). இப்படி உபதேசித்தார்களோவென்ன, ருஷிகளில் தலையான ஸ்ரீபராசரபகவான் தானே சொன்னானென்று காட்டுகிறார்,— (ப்ராஜாபத்யமித்யாதி) ப்ராஜாபத்யம்—ப்ரஜாபதி லோகம் (ப்ராஹ்மம்) ப்ரஹ்மலோகம்.

"ஏடுநிலம்" "அண்டக்குலம்" என்கிற பாட்டுக்களையும், 'ஒருநாயகம்' முதலான திவ்யஸூக்திகளையும் நோக்கி வாசியை உபபாதிக்கிறார். (வேத தாத்பர்யமித்யாதி). ஆழ்வார்களிலும் இவருக்குண்டான தன்னேற்றம் காட்டுகிறார் (இவ்விலக்ஷணேத்யாதி). (ததீயசேஷத்வத்தளவிலே) ததீயசேஷத்வ மாத்ரத்திலே.

இவர்க்கு இவ்வேற்றம் வந்தபடி யெங்ஙனேயென்னில், ஆழ்வார் *பொய்நின்ற ஞானம் தொடங்கி "அவாவற்று வீடு பெற்ற" என்னுமளவும் செல்லவநுபவித்த விடத்தில் ஆழ்வார் தமக்குப் புருஷார்த்த காஷ்டையாக அபிமதமான ததீய சேஷத்வத்தைப்பற்றினார். "ஆசார்யருசி பரிக்ருஹீதமான அர்த்தமே ஸாத்விகர்க்குப் பரிக்ராஹ்யம்" என்னுமிடம் மஹாபாரதஸாரமான ஸ்ரீஸஹஸ்ரநாமாத்யாயத்தில் சொல்லிற்றிறே.

ஸ்ரீபீஷ்மர்பக்கலிலே ஸகலார்த்தங்களையும் குறைவறக்கேட்ட தர்மபுத்ரன் "இவர்தமக்கு உத்தேச்யமாக ஸ்வீகரித்த தத்வஹிதங்களே நமக்கு உத்தேச்யம்" என்று நினைத்து, 21 "**को धर्मः सर्वधर्माणां भवतः परमो मतः**" (கோதர்மஸ்ஸர்வதர்மாணும் பவத: பரமோ மத:) என்றுகேட்க, 22 "**एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः**" (ஏஷ மே ஸர்வதர்மாணும் தர்மோதிகதமோமத:) என்று தன்னுடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தை உபதேசித்தாரிறே. த்ரிபுராதேவியாரை "ப்ரமாண ப்ராபல்யத்தாலேயோ 'எம்பெருமானே ஆச்ரயணீயன்' என்று நீங்கள் பற்றிற்று" என்ன, "அதுவொன்றுமன்று; எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆச்ரயணீய வஸ்துவாகக்கடவது" என்றாள். அந்த ந்யாயத்தாலே ஆழ்வார் தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்கும் ததீயசேஷத்வத்தையே இவரும் தமக்குப் புருஷார்த்தமாக அத்யவஸிக்கிறார்.

---

(ஆழ்வார்தமக்கு) முழுச்சொல். (ததீயசேஷத்வத்தை) என்ற அநந்தரம் "மதுரகவிகள்" என்று கூட்டிக்கொள்வது; ஆழ்வாருக்கு அபிமதமானால் இவர்க்கு அத்தைப்பற்ற வேணுமோவென்ன (ஆசார்யேத்யாதி).

ஸ்ரீஸஹஸ்ரநாமாத்யாயத்திலே சொன்னப்ரகாரமேதென்ன அருளிச்செய்கிறார் (ஸ்ரீபீஷ்மரித்யாதி.) "ஆசார்ய ருசிபரிக்ருஹீதமான அர்த்தமே பரிக்ராஹ்யம்" என்னுமதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (த்ரிபுரா தேவியாரித்யாதி). (த்ரிபுராதேவியார்) ராஜபத்நி (காடிச்சால்மூலை) ஈசாந்யதிக்கு; அவ்விடத்துக்கு தேவதை–ருத்ரன். அவனை இப்படிச்சொன்னது பேர்சொல்லவும் அஸஹ்யமாகையாலே. உக்தத்தை ப்ரக்ருதோபயோகியாக்குகிறார் (அந்த ந்யாயத்தாலே இத்யாதி).

இதுதான் ராமாயண புருஷர்களில் ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பக்கலிலே அநுஷ்டாநஶேஷமாகக் காணப்பட்டது. எங்ஙனே யென்னில், 3 "वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः" (வேதோப ப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:) என்கிறபடியே வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ஸ்ரீராமாயணத்தில் ராமாயண புருஷர்கள் நால்வரும் தர்மஸம்ஸ்தாபநார்த்தமாக அவதரிக்கையாலே நால்வரும் நாலர்த்தத்தை அநுஷ்டித்துக் காட்டினார்கள். 23 "कर्ता कारयिता च सः"(கர்த்தா காரயிதா ச ஸ:) என்கிறபடியே அநுஷ்டிப்பிக்கைக்காக "ஒருவன் சொல்லிற்றை ஒருவன்செய்யக்கடவன்" என்கிறமுறை நேராக அழிந்து கிடக்கை யாலேபித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மத்தை அநுஷ்டித்தார் பெருமாள். 4 "पितुर्वचननिर्देशात्" (பிதுர்வசந நிர்த்தேஶாத்) 5 "अगस्त्यवचनात्" (அகஸ்த்ய வசநாத்) 6 "सुग्रीववचनात्" (ஸுக்ரீவ வசநாத்) என்றிறே இவரநுஷ்டாநம்.

"நிருபாதிக ஶேஷியைக்குறித்து ஶேஷபூதன்கிஞ்சித்கரித்துத் தான் உளனாகக்கடவன்" என்கிற விசேஷதர்மத்தை அநுஷ்

---

கீழ் ப்ரமாணமுகத்தாலும் ஐதிஹ்யமுகத்தாலும் ஸித்தித்தஅர்த்தத்தின் அநுஷ்டாநமும் காட்டுகிறார் (இதுதானித்யாதி). அநுஷ்டாந சேஷம் என்றது பஹுவ்ரீஹி; இத்தால் செய்தற்றதென்றபடி. சத்ருக்நாழ்வான் அநுஷ்டாநந்தான் உபாதேயமானபடி என்னென்ன, (வேதோப ப்ரும்ஹ்மணேத்யாதி). தர்மஸம்ஸ்த்தாபநார்த்தம் நால்வரும் அவதரிக்கையாலே ஸ்ரீசத்ருக்நாழ்வானதுவும் உபாதேயமென்று கருத்து. [தௌ—குசலவௌ; ப்ரபு:—வால்மீகி:, அக்ராஹயத—க்ரஹிப்பித்தான்] மற்றை மூவர்படியுமன்றிக்கே ஸ்ரீ சத்ருக்நாழ்வான்படியை அநுஷ்டிக்கைக்கு நியாமகமென்னென்கிற சங்கையிலே இதுவே பரம தர்மமென்றருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றித் தாரதம்யம் காட்டுகைக்காக, ப்ரயோஜந கதநமுகேந பெருமாள் ப்ரகாசிப்பித்த அம்சம் இன்னதென்கிறார்.,– (கர்த்தாவித்யாதி). (முறை) மர்யாதை. அநுஷ்டித்தாரென்கைக்கு ப்ரமாணங்கள் (பிதுர்வசநேத்யாதி). ராமாநுஜ ஸித்தாந்தத்தை ஸப்ரமாணமாகக் காட்டுகிறார் (நிருபாதிகேத்யாதி).

இளையபெருமாள் வ்ருத்தியைக் காட்டிலும் ஸ்ரீபரதாழ்வானுடைய அநுஷ்டாநத்துக்கு வைலக்ஷண்யம் காட்டுவாராக, இளையபெருமாள் படிக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (ராஜ்யஞ் சேத்யாதி)

டித்தார் இளையபெருமாள். 8 **"कुरुष्व मामनुचरं"** (குருஷ்வமாமநுசரம்) 9 **"अहं सर्वं करिष्यामि"** (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) 25 **"स भ्रातुः"** (ஸப்ராது:) இத்யாதி.

10 **"राज्यं च तव रक्षेयमहं वेलेव सागरम्। प्रतिजानामि ते वीर माभूवं वीरलोकभाक्"** (ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம் ப்ரதிஜாநாமி தே வீர மாபூவம் வீரலோகபாக்) என்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றிக்கே, "சேஷியுகந்த அடிமையே சேஷபூதனுக்குக் கர்த்தவ்யம்" என்னுமிடத்தை அநுஷ்டித்தார் ஸ்ரீபரதாழ்வான். தன் செல்லாமையைப்பாராதே சேஷியுடைய ஹ்ருதயத்தைப் பார்த்து 25 **"आरुरोह रथं हृष्टः"** (ஆருரோஹ ரதம்ஹ்ருஷ்ட:) என்று ப்ரீதியோடே மீண்டானிறே.

[ராஜ்யஞ்சதவரக்ஷேயம்] 11 **"ररक्ष धर्मेण बलेन"** (ரரக்ஷ தர்மேண பலேந) என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே, உம்முடை ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்குத்தாதர்த்யம் ஸ்வரூபமானாலும் உம்மாலென்னை மீறவொண்ணுதாணும். [அஹம்வேலேவஸாகரம்] கடலுக்குக்கரை

---

ப்ரதீக க்ரஹணபூர்வகமாக வ்யாக்யாநம் (ராஜ்யமித்யாதி). சகாரத்தை அநுக்தஸமுச்சயமாக்கி அர்த்தமருளிச்செய்கிறார் (ரரக்ஷேத்யாதி). "தவராஜ்யஞ்சரக்ஷேயம்" என்கையாலே சேஷத்வம் தோன்றுகையாலே சேஷபூதனான நீ என்னை ரக்ஷிக்கையாவதென்னென்கிற சங்கையிலே "ரக்ஷேயம்" என்கிற லிங்கை ஆவச்யக கார்யகர ப்ரவர்த்தந நிமந்த்ரணத்திலேயாக்கி அருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி). (மீறவொண்ணுது) அதிக்ரமிக்கவொண்ணுது; ரக்ஷியாதே போகேனென்கை. இதுக்கு பக்திபரமான த்ருஷ்டாந்தகதநத்துக்கு பாவமருளிச்செய்கிறார் (கடலுக்கித்யாதி வாக்யத்வயமும்).

"ராம" என்னாதே, "வீர" என்றதுக்கு ப்ரதிஜ்ஞா நிர்வஹணம் பண்ணவல்லையோவென்கிற சங்கா பரிஹார பரமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒரு கோழையித்யாதி வாக்யத்வயத்தாலே). (கோழை) அசதுரன். இப்படி சக்ரவர்த்தியும் ப்ரதிஜ்ஞை பண்ணவில்லையோ என்கிற சங்கைக்கு உத்தரமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படி இத்யாதி வாக்யத்வயத்தாலே). இதில் "நோசேத்மாபூவம்" என்று கூட்டி அஸத்

சேஷமாயிருக்கச் செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல்; அப்படியே நீர் பெரியீரென்று உம்மாலென்னை விஞ்ச வொண்ணுதகாணும். [ப்ரதிஜாநாமி] நான் இப்படி ப்ரதிஜ்ஞை யைப் பண்ணுகிறேன். [தேவீர] ஒருகோழை முன்னேயோ ப்ரதிஜ்ஞை பண்ணிற்று? ப்ரதிஜ்ஞை பண்ணினுல் அத்தைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம்முடைய முன்னேயன்றோ? [மாபூவம்] இப்படிச் செய்திலேனுகில் உம் முடைய ஸந்நிதியில் வர்த்திக்கப் பெறுதொழிகையுமன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப் பெறுதவனுகிறேன். [வீரலோகபாக்] உம்மை முடிசூடியநுபவிக்கப் பாரித்து அது பெறுதேபோன சக்ரவர்த்தி புக்கலோகம் புகுகிறேன்" என்கிற படியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றியே "ஶேஷியுகந்த அடிமை செய்பக்கடவேன்" என்னுமிடத்தை அநுஷ்டித்தார் ஸ்ரீபரதாழ்வான.

தன் செல்லாமையைப்பாராதே ஶேஷியினுடைய ஆதரத்தையேபார்த்து 25 "आरुरोह रथं हृष्टः" (ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:) என்று ப்ரீதியோடே மீண்டானிறே.

---

தாகக் கடவனென்று பொருளாக்கி, இதுக்குத் தாத்பர்யம் (இப்படி செய்திலேனுகில் இத்யாதி). (வர்த்திக்கப்பெறுதவனுகிறேன்) என்கை யாலே அஸக்தல்பனுகிறேனென்று கருத்து. "வீரலோக பாக்பவேயம்" என்று கூட்டி, வீரபதத்துக்குச் சக்ரவர்த்தி பரமாக பாவம் (உம்மையித் யாதி). யத்வா, "வீரலோகபாக்மாபூவம்" என்று ஒருவாக்யமாய், ப்ரதிஜ்ஞையைப்பண்ணிச் செய்யாத தசரதன் லோகமடையக் கடவே னல்லேனென்று சப்தார்த்தமாகையாலே, நானும் செய்யாவிடில் அவன் லோகத்தை அடைந்து, தேவரீர் ஸந்நிதியிலும் ராஜ்யத்திலுமிராதே போகக்கடவேனென்று சபதம் பண்ணுகிறதாகத் தாத்பர்யமருளிச்செய் கிறுர் (இப்படி இத்யாதி வாக்யத்வயத்தாலே). (புக்கலோகம்) புகக் கடவலோகம். "நதேவலோகாக்ரமணம்" என்ற இளையபெருமாளுக்கு வீரஸ்வர்க்கம் அநுத்தேச்யமாகையாலே, ப்ரதிஜ்ஞை பண்ணின அர்த் தத்தைப்பண்ணுவிடில் வீரஸ்வர்க்கத்தை அடையாதவனுகக் கடவே னென்ற சபதம் இவர் ப்ரதிஜ்ஞைக்குச் சேராது; ஆகையாலே தசரதன் புக்கலோகமென்று வ்யாக்யாநம் செய்தாரென்று கண்டுகொள்வது.

இப்படியிருக்கிற இவனையல்லது அறியாதே இருக்கையாலே பகவச்சேஷத்வ காஷ்டையான ததீயசேஷத்வத்தை அநுஷ்டித்தான் ஸ்ரீஶத்ருக்நாழ்வான். 12 "गच्छता मातुलकुलं भरतेन तदानघः । शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः ॥" (கச்சதாமாதுலகுலம் பரதேந ததாநகः। ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீதः ப்ரீதிபுரஸ்க்ருதः ॥)

[கச்சதா] என்கிற வர்த்தமாந நிர்த்தேஶத்தாலே போகிற இடத்தில் தனக்கொரு ப்ரயோஜநமுண்டாயாதல், இங்கே மாதாபிதாக்களைக் கேள்விகொள்ளுதல், பூர்வஜரான பெருமாளைக் கேள்விகொள்ளுதல் செய்யுமிவ்வளவுமின்றிக்கே, அவனையொழிய ஜீவிக்கமாட்டாதபடியாலே போனனென்கை. [மாதுலகுலம்]

---

இது சேஷி உகந்தவடிமை என்கைக்கு ஸூசகமென்னென்ன (தன் செல்லாமை இத்யாதி. (தன் செல்லாமை) ராமவிச்லேஷம் ஸஹியாமை. உக்தத்தை ஹேதுவாக்கிக்கொண்டு ஸ்ரீசத்ருக்நாழ்வான் படியைக்காட்டுகிறார், (இப்படி இத்யாதி). உக்தார்த்தத்தில் ப்ரமாணம் (கச்சதேத்யாதி).

இந்த ச்லோகார்த்த விவரணம் (கச்சதாவென்கிற) என்று தொடங்கி (எம்பெருமானார் அருளிச்செய்தாரென்னுமளவும்.) வர்த்தமாந நிர்த்தேசத்தாலே இருவருடைய கமநகாலமும் ஏகமாகத் தோன்றுகையாலும், ஸ்ரீசத்ருக்நாழ்வான் கமநத்துக்கு விளம்ப நிவ்ருத்தி தோன்றுகையாலும், விளம்ப ஹேதுக்களை வ்யாவர்த்திப்பித்துக்கொண்டு தந்நிவ்ருத்தியை உபபாதித்து கமநஹேதுவையும் சொல்லுகிறார் (கச்சதா என்கிற இத்யாதி). (குலம்) க்ருஹம். யுதாஜித்குலமென்னுதே "மாதுலகுலம்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (யுதாஜித்தித்யாதி). (அவனை) பரதாழ்வானை. "ப்ருஞ்-பரணே" என்கிற தாதுவை உட்கொண்டு பரதபத தாத்பர்யம் (சக்ரவர்த்தியுமித்யாதி). (துஞ்சி) நசித்து; 'ராஜ்யத்தைப்பொகட்டுப்போய்' என்று "துஞ்சி" என்ற அநந்தரம் சொல்லுகையாலே ஸ்ரீபரதாழ்வான் "ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி" என்றுகொண்டு, மீளுவரோவென்னும் நசையாலே ஸ்ரீசித்ரகூடத்தளவும் செல்ல, பெருமாள் ராஜ்யத்தை இவர்மேல் பொகட்டுப்போன அப்போதென்றுகருத்து. (இன்னே) என்றது ஸ்ரீபரதாழ்வானை; த்ரிகாலஜ்ஞராகையாலே இப்படி திருநாமம் சாத்திரு

யுதாஜித்து அழைத்தது அவனையாகையாலே போக்கிலுத்தேச்யதை யும் அவனுக்கு; இவனும் அவனுச்தேச்யனுய்ப்போனுனென்கை.

[பாதேந] சக்ரவர்த்தியும்துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளையபெருமாளும் "அடர்ந்தடிமை செய்ய வேணும்" என்றுபோய், ஶத்ருக்நாழ்வானும் "நின்னையல்லதறி யேன்" என்றிருக்கும் தசையிலே "ராஜ்யத்தை பரிக்கக்கடவன்" என்ருய்த்து ஸ்ரீ வஸிஷ்டபகவான் திருநாமம் சாத்திற்று. 13 "**भरत इति राज्यस्य भरणात्**" (பரத இதி ராஜ்யஸ்ய பரணாத்) என்ரு ணிறே ஸ்ரீஶதாநீகன். [ததா] இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ர பேதமுமுண்டாயிருந்தால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போக ப்ராப்தமாயிருக்க, அவன்போனதுவே முஹூர்த்தமாகப்போனு னென்கை. "கச்சதா" என்றதிலே அர்த்தஸித்தமன்றே? "ததா" என்றதென்னென்னில், அங்கு மமதா நிவ்ருத்தியைச் சொல்லிற்று; இங்கு அதுக்காரணமான அஹங்கார நிவ்ருத்தி யைச்சொல்லுகிறது. ஆகையாலே புநருக்திதோஷமில்லை. மோக்ஷத்வ விரோதியிறே இரண்டும்.

---

னென்று கருத்து. இப்படி தாமருளிச்செய்ததுக்கு ஸம்வாதம் காட்டு கிருர் (பரத இத்யாதி)

ப்ரகாராந்தரேண வருகிற காலபேத சங்கையைப் பரிஹரித்துக் கொண்டு சப்தார்த்தம் (இருவருமித்யாதி). பாரதந்த்ர்யத்தாலே போனு னென்றபடி. 26"**पुष्ये जातस्तु भरतः**" (புஷ்யே ஜாதஸ்து பரத:) 27"**सार्पे जातस्तु सौमित्रिः**" (ஸார்ப்பே ஜாதஸ்து ஸௌமித்ரி:) என்ற வசநங்களை யுட்கொண்டு (நக்ஷத்ரபேதம்) என்றது. இப்பாரதந்த்ர்யம் "கச்சதா" என்கிற விடத்தில் தானே சொல்லலாமேயென்று சங்கித்து கோபலீ வர்த்தந்யாயத்தாலே பரிஹரிக்கிருர் (கச்சதேத்யாதி). அங்கு மமதா நிவ்ருத்தியும். இங்கு அஹங்கார நிவ்ருத்தியுமாகச் சொல்லுகைக்குக் கருத்து முந்துற அஹங்கார நிவ்ருத்தி சொல்லில், தத்கார்யமான மமதாநிவ்ருத்தி அர்த்த ஸித்தமாகையாலே "ததா" என்றதுக்கு ப்ரயோஜ நம் ஸித்தியாதென்று கண்டுகொள்வது. மமதாநிவ்ருத்தி சொன்னுல் போராதோ, அஹங்கார நிவ்ருத்தி சொல்லவேண்டுமோவென்ன வருளிச் செய்கிருர் (சேஷத்வேத்யாதி)

[அநக:] அகமில்லாதது இவனுக்கேயிறே. அகமாவது உத்தேச்யவிரோதியிறே. இவ்விடத்தில் அகமாவது ராமபக்தி. இத்தைப் பாபமென்னப்போமோவென்னில்; பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க, மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் 28 **"अश्व इव रोमाणि विधूय पापं"** (அச்வ இவ ரோமாணி விதூய பாபம்) என்று பாபஶப்தவாச்யமாயிற்றிறே; ஆகையாலே பரதாநுவ்ருத்தியாகிற உத்தேச்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந்தர்யத்தில் கால் தாழுமதுவும் பாபமாமித்தனையிறே. 29 **"रामे प्रमादं मा कार्षीः"** (ராமே ப்ரமாதம் மா கார்ஷீ:) என்று ராமாநுவ்ருத்திக்கும் இடைச்சுவராகச் சொல்லிற்றிறே ராமஸௌந்தர்யத்தை. பரதாநுவ்ருத்திக்கு இடைச்சுவரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே.

[ஶத்ருக்ந:] பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான், பெருமாள்கண்டாரை அழகாலே துவக்கவல்லராகத் தோற்றுகையாலே ராமனென்றும்

---

வக்ஷ்யமாணத்தைத் திருவுள்ளம்பற்றி நஞர்த்தத்தை அருளிச்செய்து கொண்டு வித்தராகிறார் (அகமில்லாததித்யாதி). அகபதார்த்தமருளிச்செய்கிறார் (அகமாவதித்யாதி). அஹங்கார மமகார நிவ்ருத்திசொன்ன போதே பாபராஹித்யம் ஸித்தமன்றோ? புந: சொல்லவேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவ்விடத்தி லித்யாதி). ராமபக்தி உத்தேச்ய மென்னலாயிருக்க, உத்தேச்ய விரோதியாக்கிச் சொல்லப்போமோ வென்கிற சங்கையை யநுவதித்து த்ருஷ்டாந்தமுகேந பரிஹரிக்கிறார். (இத்தை யித்யாதி வாக்யத்ரயத்தாலே). ஸௌந்தர்யத்தில் கால்தாழ்கையே ராமபக்தி. இது பரதாநுவ்ருத்திக்கு விரோதியென்னுமிடத்தைக் கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார் (ராமேப்ரமாதமித்யாதி). (இடைச்சுவர்) ப்ரதிபந்தகம்.

அப்ராப்த விஷயப்ராவண்யமாகிற அநிஷ்டத்தை அநாதியாக ஜநிப்பிக்கையாலே நித்யசத்ருவென்று இந்த்ரியங்களாக அருளிச்செய்கிறார். (பாஹ்யேத்யாதி) 30 **"शत्रुघ्नश्चरमाद्धे"** (ஶத்ருக்நச்சரமாததே) என்றும், 31 **"राममेवानुचिन्तयन्"** (ராமமேவாநுசிந்தயந்) என்றுமிருக்க, ஸௌந்தர்யத்தில் துவக்குண்ணுமையைச் சொல்லக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அதாகிறதித்யாதி) "பரதேகச்சதிகதவாந்" என்று சொல்லாமல், "பரதேநநீத:" என்று பரதகர்த்ருக நயநக்ரியா கர்மத்வம்

இளையபெருமாளுக்குக் கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே லக்ஷ்மணனென்றும் திருநாமம்சாத்தினாப்போலே, இவருடைய ஸந்நிவேசத்தைக்காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படி யிருக்கையாலே ஶத்ருக்நனென்று திருநாமம் சாத்தினான்.

[நித்யஶத்ருக்ந:] பாஹ்யஶத்ருக்களையே யன்றிக்கே ஆந்தர ஶத்ருக்களான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. அவ்விந்த்ரியஜயத்தினெல்லை யெவ்வளவென்னில்; 15 "पुंसां दृष्टिचित्तापहारिणं" (பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்) என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணாதிருக்கை. அதாகிறது பெருமாளைப் பற்றும்போதும், தன்னுகப்பாலே யாதல், அவருடைய வைலக்ஷண்யத்தாலே யாதலன்றிக்கே, தனக்கு உத்தேச்யனான இவனுகந்த விஷயமென்று பற்றுகை.

[நீத:] ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்றைக் கொண்டுபோமோபாதி அவன்கொடுபோகப் போனானென்கை.

---

சொல்லுகையாலே 32 "स्वतन्त्रः कर्ता" (ஸ்வதந்த்ர: கர்த்தா) என்று பரதாழ்வானுக்கு ஸ்வாதந்த்ர்யமும், ஸ்ரீசத்ருக்நாழ்வானுக்கு அசித்வத்பாரதந்த்ர்யமும் தோற்றுகிறதென்றருளிச்செய்கிறார் (ராஜாக்களித்யாதி). கீழ் அஹங்காரமமகாரநிவ்ருத்தி சொன்னபோதே பாரதந்த்ர்யம் ஸித்தமாகையாலே இப்பதத்துக்கு அசித்வத்பாரதந்த்ர்யமும் விவக்ஷிதமென்று கருத்து.

(உடைவாள்) அரைப்புடவையில் சொருகுகிற ஆயுதம். உக்த பாரதந்த்ர்யத்தின் எல்லை நிலம்காட்டுவாராக உக்தத்தை வ்யாவர்த்திப்பித்துக்கொண்டு அதிலும் அதிசயம் காட்டுகிறார் த்ரவ்யத்துக்கித்யாதி. (உபயநிஷ்ட்டம்) என்றது உபயாதீநமென்றபடி. இத்தால் அந்யதரரால் விடப்போகாதென்கை. "ப்ரீதிபுரஸ்க்ருத:" என்றதுக்கு "பரதேநப்ரீதிபுரஸ்க்ருத:" என்றாய், பரதனாலே பஹுமதனாய்ப் போனானென்று அர்த்தம் சொல்லுமளவில் கீழ்ச்சொன்ன அத்யந்த பாரதந்த்ர்யாதிகளுக்கு விருத்தமாகையாலே, 'ஸ்வப்ரீத்யாபுரஸ்க்ருத:" என்று விவக்ஷித்து ப்ரீதியாலே ப்ரேரிக்கப்பட்டானென்று அர்த்தமருளிச்செய்கிறார் (ஜ்யேஷ்டாநு வ்ருத்தீத்யாதி.) இத்தால் கீழ்ச்சொன்ன பாரதந்த்ர்யம் வைதமென்று கருத்து.

த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபய நிஷ்ட்டமாயிருக்குமிறே. அதுபோலன்றிக்கே ஜாதிகுணங்களோபாதி போனான். [ப்ரீதிபுரஸ்க்ருத:] "ஜ்யேஷ்டாநுவ்ருத்தி கர்த்தவ்யம்" என்று போனானல்லன். 9 "**अहं सर्वं करिष्यामि**" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று போன இளையபெருமாளைப்போலே, "போனவிடத்திலே ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணலாமென்று பாரித்துக்கொண்டு ப்ரீதிப்ரேரிக்கப் போனான். படைவீட்டிலிருந்தால் பலருமுண்டாகையாலே விழுக்காட்டோபாதியிறே ஸித்திப்பது.

"நீத:" என்கையாலே ஶேஷத்வத்தில் அசித்கல்பனாயிருக்கக்கடவன். "ப்ரீதிபுரஸ்க்ருத:" என்கையாலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே சைதந்ய ப்ரயுக்தமான தர்மங்களுண்டா

---

"நீத:" என்று சொல்லியிருக்க, "ப்ரீதிபுரஸ்க்ருத:" என்று சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (நீதஇத்யாதி) (இருக்கக்கடவன்) என்றவநந்தரம் "என்றபடி" என்று சேஷம். (இருக்கை) என்றவநந்தரம் "என்றபடி" என்று சேஷம். இதற்கு ப்ரமாணம் (படியாயித்யாதி) கீழ் "அநக:" என்றதுக்கு ஸௌந்தர்யத்தில் ராமபக்திரஹிதனென்றர்த்தமாக்கி, இதற்கு ஹேதுவாக "நித்யசத்ருக்ந:" என்றத்தையுட்கொண்டு இவ்விரண்டாலும் பெருமாளிடத்திற்காட்டிலும் ஸ்ரீபரதாழ்வானிடத்தில் போக்யதாதிசயம் தோற்ற வ்யாக்யாநம் செய்தருளினார். இனி இவ்விரண்டுபதத்தாலும் பாவநத்வபோக்யத்வங்கள் பெருமாளிடத்திற்காட்டிலும் ஸ்ரீபரதாழ்வானிடத்திலே தோற்ற அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (அநக இத்யாதி). அநகபதத்தால் ராமவிஷயத்தில் பாவநத்வ ப்ரயுக்தமான மஹநீயதையாலே வருகிற ப்ரீதிரஹிதனென்று தோற்றுகையாலே பரதவிஷயத்தில் பாவநத்வாதிசயம் தோற்றுகிறதென்று கருத்து. "நித்யசத்ருக்ந:" என்று ராமஸௌந்தர்யத்தில் கண்வையாரென்கையாலே இங்குக் கண்வைத்தவனுக்கு போக்யதாதிசயம் தோற்றுமென்று கருத்து.

"அநக:" என்றதுக்கு 'ராமபக்திரஹித:' என்றும் "நித்யசத்ருக்ந:" என்றதுக்கு ராமவிஷயத்தில் கண்வையானென்றும் சொல்லக்கூடுமோ? 33 "**कदान्वहं समेष्यामि भरतेन महात्मना। शत्रुघ्नेन च वीरेण त्वया च रघुनन्दन**" (கதா ந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா ஶத்ருக்நேந சவீரேண த்வயா ச ரகுநந்தந) என்கிறபடியே பெருமாளுக்கு சத்ருக்நனிடத்தில் ப்ரீதியுண்டாகையாலே இவருக்கும் அவரிடத்தில்

யிருக்கை. ‡"படியாய்க்கிடந் துன்பவளவாய் காண்பேனே" என்றிறே அபியுக்தர்வார்த்தை.

"அநக:" "நித்யஶத்ருக்ந:" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவனையே பற்றினானென்னவுமாம். "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்றதுக்கு ப்ரயோஜந(க)மென்னென்னில், "ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி அவனையல்ல தறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாதபடியானான்" என்று எம்பெருமானாரருளிச்செய்தார். இதுவே ப்ரயோஜந(க) மானால் சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே. ஆகவிப்படி ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப்போலே யிருப்பாரொருவராய்த்து ஸ்ரீமதுர கவிகள்.

இனி இவர்க்குத் ததீயருத்தேச்யராமிடத்தில் பகவத்ஸம்பந்த மாத்ரத்திலே விஷயீகரித்தும், தத்விஷயத்திலே இப்போது அவ

---

கண்வைக்கவேண்டுகையாலே இவ்விரண்டு பதத்துக்கும் பொருளில்லாமை யால் ப்ரயோஜநமில்லை யென்று முன்புள்ள முதலிகள்கேட்க, அதற்கு எம்பெருமானாரருளிச்செய்த ஸ்ரீஸூக்தியை இங்கும் அந்த சங்கையைப் பரிஹரிக்கவேண்டுகையாலே ஸம்வாதமாகஅருளிச்செய்கிறார் (அநக என்றுதொடங்கி அருளிச்செய்தாரென்னுமளவும்). இந்தப் பரிஹாரத் துக்கு இருவர்க்கும் ஸ்ரீபரதாழ்வானையிட்டு பரஸ்பர ப்ரீதியுண்டாகிலும் நேரே ராமவிஷயத்தில் பக்தியில்லையென்றும், கண்வையானென்றும் தாத்பர்யம். (சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே) என்றது பெரு மாளுக்கு நல்லனான ஸ்ரீபரதாழ்வானையல்ல தறியாதிருக்கையாலே "அநக:" "நித்யசத்ருக்ந:" என்று சொன்னமிகையெல்லாம் பொறுக்கு மென்றபடி.

இத்தால் ஈச்வரவிஷயத்தில் கண்ணழிவற்ற ருசியுடையாரபிமாநத் திலே யொதுங்கி அவர்திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றத்ய வஸித்திருந்தபேர் "திரிதந்தாகிலும்" என்கிறபடியே ஈச்வரனுக்கு மிகவும் ப்ரீதிவிஷயராவரென்றதாய்த்து. ஆக இவ்வளவும் வக்த்ருவைலக்ஷண்ய மருளிச் செய்தார்.

இனி வைலக்ஷண்யாந்தர கதநமுகேந ப்ரதிபாத்யவைபவத்தையருளிச் செய்கிறார் (இனியித்யாதி). (உத்தேச்யராமிடத்தில்) என்றதுக்கு "அத்ய

காஹிப்பித்தும், குணாநுஸந்தாநத்தாலல்லது செல்லாத தசையிலே 16 **"बोधयन्तः परस्परं"** (போதயந்த: பரஸ்பரம்) என்கிறபடியே போதுபோக்குகைக்கு உசாத்துணையாகவும், 17 **"यत्र पूर्वे साध्या-स्सन्ति देवाः"** (யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:) என்கிறபடியே ப்ராப்திதசையில் பகவதநுபவ ஸஹகாரிகளாயும், இப்படி பஹுமுகமான உபகாரத்தாலே ஸர்வாவஸ்தையிலும் ததீயரே உத்தேச்யரென்று அத்யவஸித்து, தமக்கு வைஷ்ணவ விஷயீகாரத்துக்கு முன்பே அஜ்ஞாதஜ்ஞாபந முகத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டின மஹோபகாரகரான ஆழ்வார் தம்மையே பற்றுகிறார்.

*பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாவதாரிகை முற்றிற்று.*

---

*வஸித்து" என்றதோடே ஸம்பந்தம். (பகவத்ஸம்பந்த மாத்ரத்திலே) என்றது பகவதாபிமுக்க்யமுள்ள மாத்ரங்கொண்டென்றபடி. (தத்விஷயத்திலே இப்போது) என்றது இவ்விபூதியிலிருக்கும் காலம். (ப்ராப்தி தசையில்) என்றது மோக்ஷதசையிலென்றபடி.*

*அவதாரிகை அரும்பதம் முற்றிற்று.*





ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு

## அழகியமணவாளப் பெருமாள் நாயனர் அருளிச்செய்த வ்யாக்யாநம்.

### அவதாரிகை.

ஸம்ஸாரிசேதநரிற்காட்டில் பகவத்பரராய், அந்த பகவத் வைபவத்தை அஜ்ஞரான ஸம்ஸாரிகளு மறியும்படி அவ்வவபுராண முகங்களாலே உபதேசித்த பராசராதி பரமரிஷிகளுக்கு வாசியுண்டு.

இப்படி உபதேசியாநிற்கச்செய்தேயும் 34 "निरस्तातिशय" (நிரஸ்தாதிசய) இத்யாதியாலே பரமபுருஷார்த்தரூபையான பகவத் ப்ராப்தியைச்சொல்லி, 35 "तत्प्राप्तिहेतुर्ज्ञानं च कर्म चोक्तम्" (தத்ப்ராப்திஹேதுர்ஜ்ஞாநஞ்ச கர்மசோக்தம்) என்று தொடங்கி ப்ராப்திஸாதநமான உபாஸநத்தையும் உபதேசியாநிற்கச் செய்தேயும், காமாதி புருஷார்த்தாந்தரங்களையும் கலந்த கட்டியாக உபதேசித்த அந்தரிஷிகளிற்காட்டில் பகவத் ப்ரஸாத ஹேதுக மான மயர்வற மதிநலங்களையுடையருமாய் பரோபதேசஸமயத் திலும் /"வீடாம் தெளிதருநிலைமை" என்று தொடங்கி †"வீடே பெறலாமே" என்று பரமபுருஷார்த்தத்தையே முதல் நடு இறுதி

---

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநத்தின் அரும்பதவுரை.

### அவதாரிகை.

அரும்பதம்:—வக்த்ருவைலக்ஷண்யம் அருளிச்செய்வாராய் ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கு முள்ளவாசியை அருளிச்செய்கிருர் (ஸம்ஸாரி சேதநரித்யாதி).

/ திருவாய் 1-3-2. † திவுவாய் 10-5-5.

யாகவுபதேஶித்து, அதுக்குஸாதநமும் /"வண்புகழ்நாரணன் திண்கழல்சேரே" §"திருநாரணன்தாள்காலம் பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்று அவன் திருவடிகளே யென்று முபதேஶித்து, அவ்வளவன்றிக்கே, ‡"வழுவிலாவடிமைசெய்ய வேண்டும் நாம்" ||"அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அவற்றைத்தாமநுஷ்டித்துப்போந்த நம்மாழ்வாருக்கு நெடுவாசியுண்டு. இப்படி பகவத்விஷயமே புருஷார்த்தஸாதநங்களென்று பூர்ணோபதேஶம் பண்ணின ஆழ்வாரிற்காட்டில் ஆழ்வாரே புருஷார்த்தபூதராய் அவரைப்பெறுகைக்கு ஸாதநமும் அவர் திருவடிகளே என்றிருக்கும் ஸ்ரீமதுரகவிகளுக்கு நெடுவாசியுண்டு.

s"என்னப்பனில் நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்காலண்ணிக்கு மமுதூறுமென்னாவுக்கே" என்றும் r"மேவினேனவன் பொன்னடி" என்றும் அநுஸந்தித்தவரிறே இவர். ஆழ்வார் ப்ரதமபர்வத்திலே நின்றவர்; இவர் சரமபர்வத்திலே நின்றவர்; அவர் ஸங்க்ரஹத்திலே அவதாரணத்திலே நிஷ்டர்; இவர் அதினுடைய விவரணநிஷ்டர்; அவ்வாழ்வாருக்கு அநந்ய

(பூர்ணோபதேசம்) என்றது—காமாதி புருஷார்த்தாந்தரங்கள் கலசாதே ஈச்வரனே உபாயமென்றும், அவன் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே புருஷார்த்தமென்றும் உபதேசிக்கை.

இவர் ஆழ்வாரையே ப்ராப்யப்ராபகமென்று பற்றியிருந்தாரோ வென்ன அருளிச்செய்கிறார் (என்னப்பனில் நண்ணித்தென்குருகூரென்று துடங்கி). ஆழ்வாரிற்காட்டில் மதுரகவிகளுக்கு நெடுவாசியுண்டென்னுமதை விவரிக்கிறார் (ஆழ்வார் ப்ரதமபர்வத்தில் நின்றவரென்று துடங்கி). இருவர் நிஷ்டையும் எத்தைப்பற்றிவருகிறதென்ன அருளுகிறார் (அவர் ஸங்க்ரஹேத்யாதி). (அவதாரணம்) உகாரம். (விவரணம்) நமஸ்ஸு. பகவத் விஷயத்திலே ப்ரவணராவாருடைய ஆகாரங்களெல்லாம் ஆழ்வாருக்கு உண்டானாப்போலே சரமபர்வநிஷ்டர்களுடைய ஆகாரங்களெல்லாம் இவர்க்குண்டென்று அருளிச்செய்கிறார் (ஆழ்வார்க்கு அநந்யபோகத்வத்துக்கென்று துடங்கி). இத்தால் ஆழ்வா

/ திருவாய் 1-2-10. § திருவாய் 4-1-1. ‡ திருவாய் 3-3-1.
|| திருவாய் 6-10-10. s கண்-1 r கண்-2.

போகத்வத்துக்கு i "நமக்கும் பூவின்மிசை நங்கைக்குமின்பன்" என்று நாய்ச்சிமாரில் பிராட்டி நிதர்ஶநமாமாபோலேயும், கைங்கர்யத்வரைக்கும் பாரதந்த்ர்யத்துக்கும் இளையபெருமாள் நிதர்ஶநமாமாபோலேயும், முமுக்ஷுக்களின் தூர்க்கதிகண்டு பரோபதேசம் பண்ணுகைக்கு ப்ரஹ்லாதன் நிதர்ஶநமாமாபோலேயும், இவருக்குத் ததீயபாரதந்த்ர்யத்துக்கு r "வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டும்" என்ற பெரியாழ்வார் திருமகளார் நிதர்ஶநமாதல், நித்யராய்ப்போந்தாரில் ஶ்ரீஶத்ருக்நாழ்வான் நிதர்ஶநமாதல், முமுக்ஷுக்களில் 2 "**सर्वं यदेव नियमेन मदन्वयानां**" (ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்) என்ற பெரியமுதலியார் நிதர்ஶநமாதலாமித்தனை.

ஶ்ரீஶத்ருக்நன் ராமகுணத்தில் கால்தாழ்ந்திலன்; இவர் க்ருஷ்ணகுணங்களில் கால்தாழ்ந்திலர். இதுவாசி; ஆழ்வார் பகவத்விஷயத்தைக் கவிபாடுகிற நாவாலே தம்முடைய வைபவம் சொன்னாரித்தனைபோக்கி, அமுதூறுகிற இவருடைய நாவாலே கேட்கப்பெறாத குறைதீர்க்கிறாராய்த்து இவர்; / "அவன் சின்னமும் திருநாமமும் இவள்வாயனகள் திருந்தவே" என்று அவன் குணங்கள் அவ்வாழ்வார் வாக்காலே திருந்தினாப்போலேயாய்த்து ஆழ்வாருடைய குணங்களும் இவர் வாக்காலே திருந்தினபடி.

---

ரோடே ஸாம்யம் சொல்லிற்றாயிற்று. (பெரியமுதலியார்) என்றது–ஆளவந்தாரை. (நிதர்சநம்) என்றது–இருவரும் ஆழ்வாரையே பற்றுகையாலே; இந்தப்ரபந்தத்தாலே இவர் கொண்டாடவேணுமோ? ஆழ்வார் பகவத்விஷய ப்ரவணமான தம்முடைய திருப்பவளத்தாலே தம்முடைய வைபவத்தை *துவளில் மாமணிமாடம் துடக்கமான திருவாய்மொழிகளிலே அருளிச்செய்யவில்லையோவென்ன, க்ருஷ்ணன் தன் வாயாலே சொன்ன கீதையோபாதி போக்யமாயிராத குறையுண்டு, அமுதூறுகிற இவர் திருப்பவளத்தாலே அருளிச்செய்யக் கேட்கையாலே அக்குறை தீரப்பெற்றதென்கிறார் (ஆழ்வார் பகவத்விஷயத்தைக் கவிபாடுகிறநாவாலென்று துடங்கி). அப்படி இவர் திருப்பவளத்தாலே அருளிச்செய்கையாலே திருந்தி போக்யமாயிருந்ததோவென்ன அருளிச்செய்கிறார் (அவன் சின்னமும் திருநாமமுமென்று துடங்கி).

---

i திருவாய் 4-5-8. r நா-தி 10-10. / திருவாய் 6-5-7.

அப்படியே இவரருளிச்செய்த ப்ரபந்தமும், 18 "**त्रैगुण्य-विषया वेदाः**" (த்ரைகுண்யவிஷயா வேதா:) என்று குணத்ரய வச்யர்க்கு குணாநுகுணமான பலங்களைச்சொல்லுகிற வேதங்கள் போலேயும், ||"சீர்த்தொடையாயிரம்" என்று பகவத்குணைக ப்ரதிபாதகமான திருவாய்மொழி போலேயுமன்றிக்கே, ஆழ்வாருடைய திவ்யகுணங்களையே ப்ரதிபாதிக்கையாலும், வேதம் போலே அநந்தமாயிருத்தல், திருவாய்மொழிபோலே ஆயிரம் பாட்டாயிருத்தல் செய்கையன்றிக்கே, ஸங்க்ரஹமாயிருக்கையாலும் வாசிபட்டிருக்கும்; திருவாய்மொழி வேதஸாரமாய், திருவாய்மொழியினுடைய ஸாரமாயாய்த்து இப்ரபந்தமிருப்பது.

ஒருமுமுக்ஷுவுக்கு ஆதரணீயராயிருப்பார் நாலுவ்யக்திகளாயிருப்பர்கள்; ஸர்வேச்வரனும், பிராட்டியும், ஆசார்யனும், ஸ்ரீவைஷ்ணவர்களும். அதில்ஸர்வேச்வரன், அடியிலே இழந்துகிடந்த கரணகளேபரங்களைத் தன்கருணையாலே கொடுத்து இவனைக் கரைமரம்சேர்க்கும் தேவனாகையாலும், இவனுக்கு ஆகாரபூதனாகையாலும், இவனுக்கு இஷ்டாநிஷ்ட ப்ராப்திபரிஹாரத்துக்கு உபாயபூதனாகையாலும், அகாரண ஸுஹ்ருத்தாகையாலும்,

---

(அப்படியே இவரருளிச்செய்த ப்ரபந்தமும்) என்றது—ஆழ்வாரிற் காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டானாப்போலே இவரருளிச்செய்த ப்ரபந்தமுமென்றபடி.

முமுக்ஷுவுக்கு நாலுபேர் உத்தேச்யராய் அவர்களில் வைத்துக் கொண்டு ஆசார்யன் மிகவும் உத்தேச்யனாகையாலே அந்த ஆசார்ய வைபவத்தையறிந்த இவர் ஆசார்யன்செய்த உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாதே அவனை வாயாரப்புகழ்ந்து அவனுடைய உபகாராநுஸந்தான ப்ரீதிக்குப்போக்குவீடாக இப்ரபந்தமுகத்தாலே ஆழ்வாருடைய வைபவத்தைப்பேசுகிறாரென்கிறார் (ஒரு முமுக்ஷுவுக்கு ஆதரணீயராயிருப்பார் நாலுவ்யக்திகளென்று துடங்கி). "மாதாபிதா" என்கிற ச்ருதிக்கு முன்னே ப்ரதிபததாத்பர்யம் அருளிச்செய்துகொண்டு அநந்தரம் பதங்களை எடுத்து அர்த்தமருளிச்செய்கிறார் (அதில் ஸர்வேச்வரனென்று துடங்கி).

---

|| திருவாய் 1-2-11.

ப்ராப்யபூதனாகையாலும் ஆதரணீயனாயிருக்கும். 36 "माता पिता" (மாதா பிதா) என்கையாலே ப்ரியபரத்வ ஹிதபரத்வங்களைச் சொல்லிற்று. 36 "भ्राता" (ப்ராதா) என்கையாலே அல்லாத பந்த்வந்தரங்களுக்கு முபலக்ஷணம். 36 "निवासः" (நிவாஸ:) என்கையாலே ஆதாரத்வம் சொல்லிற்று. 36 "शरणं" (ஶரணம்) என்கையாலே உபாயபாவம் சொல்லிற்று. 35 "सुहृत्" (ஸுஹ்ருத்) என்கையாலே ஶோபநாஶம்ஸி யென்னுமிடம் சொல்லிற்று. 36 "गतिः" (கதி:) "கம்யத இதி கதி" யாய், ப்ராப்யபாவம் சொல்லிற்று. 36 "नारायणः" (நாராயண:) என்று இவை யெல்லாமாகவற்றுன வஸ்துஸ்வபாவம் சொல்லிற்று. 37 "येन येन वियुज्यन्ते प्रजाः स्निग्धेन बन्धुना। स स पापादृते तासां दुष्यन्त इति घुष्यताम्॥" (யேந யேந வியுஜ்யந்தே ப்ரஜாஸ் ஸ்நிக்தேந பந்துநா। ஸ ஸ பாபத்ருதே தாஸாம் துஷ்யந்த இதி குஷ்யதாம்) என்று ஒருசேதந விசேஷத்துக்கு இது உண்டாகச்சொல்லாநின்றால் இவ்விஷயத் துக்குச் சொல்லவேண்டாவிறே. "பாபாத்ருதே" என்னவேண் டாதபடி அவர்ஜநீயமான ஸம்பந்தமும் இங்கே விநியோகம் கொள்ளும்படியாயாய்த்து இவ்விஷயமிருப்பது. 38 "गतिर्भर्ता प्रभुस्साक्षी निवासः शरणं सुहृत्" (கதிர்ப்பர்த்தா ப்ரபுஸ்ஸாக்ஷீ நிவாஸச்ஶரணம் ஸுஹ்ருத்) என்று அவன்றானே சொன்னானிறே.

பிராட்டி, இவன்பக்கலிலே மாத்ருத்வப்ரயுக்தமாக நிருபாதிக வத்ஸலையாகையாலும், இவன் பகவதாச்ரயண ஸமயத்தில் தன் னுடைய பூர்வாபராதபீதனாய், அங்கு அணுகக்கூசினால் இவன் பூர்வாபராதத்தை அவன்முகங்கொண்டு பொறுப்பித்துச் சேர்ப் பிக்குமவளாகையாலும், இவனுக்கு இவ்வுபாயவிஷயமான வ்யவஸாயத்தைக்கொடுக்குமவளாகையாலும், அவனோபாதி ஸ்வாமிநியாகையாலும், ஒருதேஶவிஶேஷத்தேறப்போனாலும் அவ னுக்கே கைங்கர்யவர்த்தகையாகையாலும், தன்னைக்கிட்டுமிடத்தில்

---

ஒருவனே ஸர்வவித பந்துவாகக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (யேநயேந வியுஜ்யந்தே) என்று துடங்கி. ஈச்வரன் தான் பர்த்தாவா யிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (கதிர்ப்பர்த்தாவென்று துடங்கி). (முகங்கொண்டு) என்றது—அபிமுகனாகப்பண்ணிக் கொண்டென்றபடி.

ஒரு புருஷகாராந்தர நிரபேக்ஷயாகையாலும் ஆதரணீயையா யிருக்கும்.

ஆசார்யன் இவனுக்கு பகவத்விஷயத்தையும் பிராட்டி வைபவத்தையும் கருந்தரையிலே உபதேசிக்குமவனாகையாலும், தானநுஷ்டித்துக்காட்டி இவனை அநுஷ்டிப்பிக்குமவனாகையாலும், இவன்குற்றம் பார்த்தவளவிலும் கைவிடாதவனாகையாலும், இவனோடே ஸஜாதீயனாகையாலே ஸுலபனாகையாலும், இவனுடைய க்ருதஜ்ஞதையடியாகப் பண்ணும் கிஞ்சித்காரங்களுக்கு சரீர ஸம்பந்த முகத்தாலே இங்கே ப்ரதிஸம்பந்தியாகையாலும், தன் கார்யத்தை மறந்தாகிலும் இவனுடைய ஹிதமே பார்த்துப் போருமவனாகையாலும் ஆதரணீயனாயிருக்கும்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் இவனுக்கு ப்ரதமத்திலே ருசிஜநகராகையாலும், ஆசார்யோபதிஷ்டமான ஜ்ஞானத்துக்கு வர்த்தகராய் உசாத்துணையாகையாலும், ஆசார்யப்ரேமத்தை அபிவ்ருத்தமாக்குமவர்களாகையாலும், இவனுக்கு சேஷிகளாகையாலும், இவனுக்கு ப்ரக்ருதிவச்யதையாலே சிலஸ்காலித்யங்கள் பிறந்தாலும் அத்தைத் தெளியப்பண்ணவும் வல்லவர்களாய் இந்த முகத்தாலே ஆதரணீயராய்ப் போருவர்கள்.

இவற்றை ச்ருதியும், 39 "मातृदेवो भव। पितृदेवो भव। आचार्यदेवो भव। अतिथिदेवो भव॥ (மாத்ருதேவோபவ, பித்ருதேவோபவ, ஆசார்யதேவோபவ, அதிதிதேவோபவ) என்றுசொல்லி வைத்தது; இங்கு அதிதியாகிறான்-ஸ்ரீவைஷ்ணவனாய்த்து. அதிதிகளாகிறார்-தாங்கள் முன்புநின்ற நிலைகுலைந்து இவனிருக்கிற வர்க்கத்திலே புகுமவர்களிறே. இவர்களும் தந்தாமுடைய ப்ரக்ருதிப்ராக்ருதங்களை த்யஜித்து இவன்பற்றிநிற்கிற சரணத்திலே ஆகதரானவர்களாய்த்து; 40 "उपाये गृहरक्षित्रोः शब्दः शरणमित्ययं" (உபாயே க்ருஹரக்ஷித்ரோ: சப்த: சரணமித்யயம்) இத்யாதி; அப்படி வந்தவனை குலசரணகோத்ராதிகளை ஆரா

---

(இவன் பற்றிநிற்கிற சரணத்திலே) என்றது ச்லேஷையாய் உபாயத்தையும் க்ருஹத்தையும் சொல்லுகிறது.

யாதே ஸத்கரிக்கவேண்டுமோபாதி வைஷ்ணவனுடைய குலாதிகளை ஆராயாதே அதிதிஸத்காரங்களைப்பண்ணக்கடவன். 41 "अतिथिर्यत्र भग्नाशो गृहात्प्रतिनिवर्तते। स तस्मै दुष्कृतं दत्त्वा पुण्यमादाय गच्छति॥" (அதிதிர்யத்ர பக்நாசோ க்ருஹாத்ப்ரதிநிவர்த்ததே। ஸ தஸ்மை துஷ்க்ருதம் தத்வா புண்யமாதாய கச்சதி॥) என்கிறபடியே அதிதிகளுடைய அஸத்காரத்தில் பாபாகமநமும் புண்யக்ஷயமும் பிறக்குமென்கையாலே, இவனும் இவ்வைஷ்ணவனை ஆதரியானாகில் பகவந் நிக்ரஹரூபமான பாபம் வரும். ததநுக்ரஹரூபமான புண்யமும் இவனைவிட்டுப்போகக்கடவது.

இனி இந்நால்வரில் அத்யந்தாதரணீயராவாரரென்னில், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வைபவஜ்ஞாநமும், பிராட்டியுடைய வைபவஜ்ஞாநமும், ஈச்வரனுடைய ஸர்வப்ரகார வைபவஜ்ஞாநமும் இவ்வாசார்யாங்கீகாராநந்தரமாகையாலே 42 यथा देवे तथा गुरौ" (யதாதேவேததாகுரௌ) என்கிற அளவன்றிக்கே விசேஷேண ஆதரணீயன் ஆசார்யனேயாய்த்து.

ஆகையாலே, இவ்வாழ்வாராகிறார் அவ்வாசார்ய வைபவமறியுமவராகையாலும், ஆழ்வார் திருவடிகளிலே நெடுநாள் பரிசர்யைபண்ணி அவருடைய ப்ரஸாதபாத்ரராய்ப் போந்தவராகையாலும், அவர்பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமுண்டாக நினைத்திராதவராகையாலும், அவரை வாயாரப்புகழ்ந்து அவருடைய உபகாராநுஸந்தாநப்ரீதிக்ருப் போக்குவிடவேண்டுகையாலும், இப்ரபந்த முகத்தாலே ஆழ்வார் வைபவத்தைப் பேசுகிறார்.

ஈச்வரன் துராராதனாய் ஆசார்யன் ஸ்வாராதனாயிருக்கும். ஈச்வரனை ஆராதிக்கைக்குத் திருவிருத்தம் தொடக்கமான நாலுப்ரபந்தம் வேண்டிற்று. ஆழ்வாரை ஆராதிக்கைக்கு இப்பத்துப் பாட்டுமே அமைந்தது.

அழகியமணவாளப்பெருமாள் நாயனாருளிச்செய்த
வ்யாக்யாந அவதாரிகை முற்றிற்று.

---

ஈச்வரன் துராராதனானபடியென்? ஆசார்யன் ஸ்வாராதனானபடியென்னென்ன அருளிச்செய்கிறார் (ஈச்வரனை ஆராதிக்கைக்கென்று தொடங்கி).

அவதாரிகையின் அரும்பதம் முற்றிற்று.

ஸ்ரீ:

ஸ்ரீ மதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு



1. கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் என்னப்பனில்
நண்ணித்தென்குருகூர் நம்பிஎன்றக்கால்
அண்ணிக்கும் அமுதூறும் என்நாவுக்கே.

பதவுரை:—கண்ணி— (உடம்பிலே உறுத்தும்படி பல) முடிகளையுடைத்தாய், நுண்–(உடம்பிலே அழுந்தும்படி ஸூக்ஷ்மமாய், சிறு–(நீளம்போராதபடி)சிறியதாயிருக்கிற, தாம்பினால்–கயிற்றினால் கட்டுண்ண பண்ணிய—யசோதைப்பிராட்டி தன்னைக்கட்டும்படி பண்ணுவித்துக்கொண்ட, பெரு மாயன்–பெரிய ஆச்சரிய சக்தியையுடையனாய், என் அப்பனில் — எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனைவிட்டு, நண்ணி—(ஆழ்வாரைக்) கிட்டி ஆச்ரயித்து, தென் குருகூர் நம்பி என்றக்கால்—தெற்குத் திசையிலுள்ள (ஆழ்வார் திருநகரியென்னும்) குருகூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வார் என்று (அவரது திருநாமத்தைச்) சொன்னால், அண்ணிக்கும் — மிக இனிதாயிருக்கும்; என் நாவுக்கே—என் ஒருவனுடைய நாவுக்கே, அமுது ஊறும்— அம்ருதம் ஊறா நிற்கும்.

---

## நஞ்சீயர் வ்யாக்யானம்

முதற்பாட்டு—(கண்ணிநுண் சிறுத்தாம்பினாலென்று துடங்கி) (கண்ணித்தாம்பு) அபலைகளாயிருப்பார் கட்டிவிட்ட தாம்பாகையாலே பலபிணையலாயிருக்கை. புஷ்பஹாஸ ஸுகுமாரமான கையாகையாலே அவிழ்க்கமாட்டானிறே. இப்பிணையல் திருமேனியிலே உறுத்து மென்றஞ்சுகிறார். (நுண்தாம்பு) பருத்துமேல் முதவாதே அழுந்துமென்றஞ்சுகிறார். (சிறுத்தாம்பு) அளவில்லாமையாலே உறுத்தித் திருமேனிநோமென்றஞ்சுகிறார்.

(கட்டுண்ணப் பண்ணிய) "உரலிலிடம் 1 காணவொண்ணாது கயிற்றிலிடம் காணவொண்ணாது. விடில் கள்ளனாகையாலே ஓடிப்போம்

---

1 (பா) குறைக்க

கட்டிஞ்ருமாகவல்லோமே" என்ற தாயார்முசத்தில் பயிர்ப்புதீர ஒருசுற்றுக்குப்போராத தாம்பு இரண்டு சுற்றுக்குப் போரும்படி திருமேனியிலிடம் கொடுத்தபடி. ஆச்ரிதர்கையாலே கட்டுண்ணுவிடில் சீலத்துக்குப்போராது. அநாச்ரிதரைக்கட்டாவிடில் ப்ரபாவத்துக்குப் போராது. ராஜாவானவன் எதிரிகளைக் கட்டிவைக்கையும் பும்ஸ்த்வம்; தன்மஹிஷியின்கையில் பூமாலையாலே கட்டுண்டுகிடக்கையும் பும்ஸ்த்வம். (பெருமாயன்) இவருடைய * எத்திறமிருக்கிறபடி. அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீய மாக்குகையும், அவனுக்கு க்ஷுத்து நலிகையும், நவநீதத்திலே ச்ரத்தையுண்டாகையும், அத்தை இடுவாரில்லாதபோது களவுகாண்கையும், அத்தைத் தலைக்கட்டமாட்டாதே வாயது கையதாக அகப்படுகையும், ஸ்ருஜ்யர்கையிலே கட்டுண்கையும், ஸம்ஸார பந்தத்தைத் தவிர்க்கவல்லதான இத்தை விட்டுக்கொள்ளமாட்டா தொழிகையும், இதென்ன ஆச்சர்யமோவென்கிறுர். இவனுடைய மேன்மை எல்லைகாணலாம்; நீர்மை தரைகாணவொண்ணுது.

(என்னப்பனில்) கீழ் ஆசார்ய ருசி பரிக்ருஹீதமான அர்த்தமாகையாலே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லிற்று; மேல் உத்தேச்யமான விஷயத்தைச் சொல்லாதே அவனை என்னப்பனென்பானென்னென்னில், ஆழ்வார் அங்கீகரிக்கைக்காக அங்கே தமக்கொருஸம்பந்தம் சொல்லுகிறுர். ஒன்றைக்குறித்துப் போம்போது "நீரும்நிழலும் நன்றுயிருந்தது" என்று ஒதுங்கிஞல் உத்தேச்யமாகவேணுமோ?

(நண்ணி) இப்படுகுழியைத் தப்பிஞலிறே என்கிறுர். படுகுழியென்பானென்னென்னில்; பகவத் ப்ராப்திக்கு சப்தாதிவிஷயங்கள் விரோதியாஞப்போலே ஆழ்வாரைப்பற்றுகிற இவர்க்கு பகவத்விஷயம் விரோதியென்றபடி. அவற்றுக்கு அல்பாஸ்திரத்வாதி தோஷமுண்டாகையாலே விடலாம். இங்கு அங்ஙனன்று; நிலைநின்ற ப்ரதிபந்தகம். (தென்குருகூர்நம்பி) ஸர்வேச்வரன் ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகையாலே அரைவயிருகப்பேசி, ஆழ்வார் சரமாவதியாகையாலே பூர்ணராகப் பேசுகிறுர். (என்றக்கால்) பகவத்விஷயத்தில் மநோவாக்காயங்கள் மூன்றுலும் அந்வயிக்கவேணும்; அதெல்லாம் வேண்டா; உக்திமாத்ரமமையும் இங்குத்தைக்கென்கிறுர். (அண்ணிக்குமமுதூறும்) ரஸபதார்த்தங்களிற்காட்டில் இதுக்கு வ்யாவ்ருத்தி; எல்லாப்பதார்த்தங்களும் நாக்கிலே இட்டால் இட்டபதார்த்தம் மாண்டவாறே ரஸமும் மாளும். இது அங்ஙனன்றிக்கே ஒருகாலிட்டால் உள்ளதனையும் அமுது ஊற்றுமாருதென்கிறுர். (என் நாவுக்கே)அவர்கள் "எங்களுக்கு இங்ஙனிருக்கிறதில்லையீ" என்றுர்கள்; பகவத்விஷயமும் ரஸித்து அதுக்கெல்லை நிலமான பாகவத விஷயத்தவும் ரஸித்த என்நாவுக்கல்லது; அதவா; எதுரஸித்துப்போந்த நாவுக்கு எது ரஸிக்கிறதுதான். இத்தால் சொல்லிற்றுய்த்து ப்ரதமாவதியோடு சரமாவதியோடு வாசியற இவர் ஆழ்வாருக்கு அநந்யார்ஹரானபடி.

முதற்பாட்டுக்கு நஞ்சீயர் வ்யாக்யானம் முற்றிற்று.

# நம்பிள்ளை ஈடு

முதற்பாட்டு (கண்ணியித்யாதி) /"உரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவு எத்திறம்" என்றும், §"பிறந்தவாறும்" ‡"பையவேநிலையும்" என்றும் அவர் உத்தேச்யமாகப் பற்றுகிற விஷயமிறே இவருக்கு இப்போது வெளிறுய்க்கழியுண்கிறது. நவநீதசௌர்யகரக்ஷோபத்தை அநுஸந்தித்து அவர்மோஹித்துக் கிடக்கும் துறையிலேயிறே இவர் இப்போது தெளிந்திருந்து வார்த்தை சொல்லுகிறது. (கண்ணிநுண்சிறுத்தாம்பினால்) ஆழ்வார் பக்கலிலே ந்யஸ்தபரரானபடி; அவருடைய உத்தேச்ய வஸ்துவைக்கட்டின கயிற்றினுடைய உள்மானம் புறமானம் ஆராயும்படியிறே இவர் கையொழிந்தபடி பகவத்விஷயத்திலே.

(கண்ணித்தாம்பு) உடம்பிலே கட்டப்புங்கால் உறுத்தும்படி பலபிணையலை உடைத்தாயிருக்கை. (நுண்தாம்பு) உடம்பிலே அழுந்தும்படி நேரிதாயிருக்கை. (சிறுத்தாம்பு) குறுகியிருக்கை. உரலைச் சுருக்கவொண்ணாது; கயிற்றை நெடுக்கவொண்ணாது. 43 "सदैकरूपरूपाय" (ஸதைகரூப ரூபாய) என்கிற இவனுடைய உடம்பை நெருக்கி இடங்கண்டு கட்டுமித்தனையிறே செய்யலாவது. ||"கண்ணியார் குறுங்கயிற்றால் கட்டவெட்டென்றிருந்தான்" என்றும் †"கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான காணேடீ" என்றும் எல்லாரும் ஈடுபடுந்துறையிறே இதுதான்.

(கட்டுண்ணப்பண்ணிய) 44 "संसारबन्धस्थितिमोक्षहेतुः" (ஸம்ஸாரபந்தஸ்திதி மோக்ஷஹேது:) என்று ஸ்வவ்யதிரிக்தரைக் கட்டுகைக்கும் விடுகைக்கும் ஹேதுவானவன்கிடீர் இப்போது ஓரபலைகட்டின கட்டை அவிழ்த்துக்கொள்ள ஶக்தனன்றிக்கே யிருக்கிறான். 45"यदि शक्नोषि गच्छ त्वमतिचञ्चलचेष्टित"(யதிஶக்நோஷி கச்ச த்வ மதிசஞ்சலசேஷ்டித) என்றாளிறே. ஸார்வபௌமனான ராஜகுமாரன் தன்மஹிஷிகையிலே அகப்பட்டு ஒருமாலையாலே

/ திருவாய் 1-3-1. § திருவாய் 5-10-1. ‡ திருவாய் 5-10-3.
|| பெரியதிரு 5-6-7. † பெரியதிரு 11-5-5.

கட்டுண்டு அதுக்கொரு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே யிருக்குமாபோலேயிறே இவள் கட்டினவிதுக்கு ப்ரதிக்ரியைபண்ணமாட்டாதேயிருக்கிற இருப்பும்; பிறருடைய கர்மநிபந்தநமான கட்டை அவிழ்க்குமத்தனையல்லது தன்னநுக்ரஹத்தால் வரும் கட்டு தன்னாலும் அவிழ்க்கப்போகாது; "இனிஶக்தனாகில் போய்க்காணாய்" என்று அவள் சொல்லும்படியிறே இவனுடைய அஶக்தி. §"தொழுகையும்" என்று கொண்டு போக்கற்றவாறே தொழத்துடங்குமத்தனையிறே; எல்லாரையும் தொழுவித்துக்கொள்ளுமவனிறே தொழுகிறான்; "போக்கற்ற தஶையிலே அஞ்ஜலியே அபிமதஸித்திக்கு ஸாதகம்" என்றறியுமவனிறே. "அதிசஞ்சலசேஷ்டித" என்று துருதுநக்கையாய் ஊரைப்பூசல் விளைத்துத்திரிந்த நீ வல்லையாகில் போய்க்காணென்கிறாள். 45"इत्युक्त्वा" (இத்யுக்த்வா) ஒருசொல்லாலே விலங்கிட்டு வைத்து. 45"अथ निजं कर्म सा चकार" (அத நிஜம் கர்ம ஸா சகார) அவள்தான் கறப்பது கடைவதாகப் புக்காள். 45"कुटुम्बिनी" (குடும்பிநீ) இவனைப் போலே நியமிக்கவேண்டுவன எத்தனை கிடக்கிறன.

(பெருமாயன்) நிரதிசயாச்சர்யயுக்தன். அவாப்த ஸமஸ்தகாமனுக்கு ஒருகுறையுண்டாய், அது தன்னை எளியாரைப்போலே வழியல்லாவழியே களவிலே ஒருப்பட்டு, அது தன்னையும் ஸர்வஶக்தியான தான் தலைக்கட்டமாட்டாதே வாயதுகையதாக அகப்பட்டுக்கட்டுண்டு அடியுண்டு; அதுக்கொரு ப்ரதிக்ரியைபண்ணமாட்டாதே ||"பையவே நிலையும்" என்று உடம்புவெளுத்துப் பேகணித்து நின்ற நிலையளவும்செல்ல நினைக்கிறார்.

(என்னப்பனில்) என்னையனில்; ஆழ்வார் உத்தேச்யமாய்ப் போகாநிற்கச்செய்தேயும் * பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரியான விஷயமாகையாலே அவ்வருகு போவாரையும் துவக்கவல்ல விஷயமாகையாலே சொல்லுகிறார். பகவத்விஷயத்தில் அடியற வார்த்தை சொன்னாராகில் ஆழ்வாரோட்டை ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டாராவரிறே. (என்னப்பனில் நண்ணி) பகவத்

§ பெரு-திரு 7-8. || திருவாய் 5-10-3.

விஷயத்தில் நின்றும் ஆழ்வார்பக்கலிலே கிட்டி; விஷயப்ரவணன் ஶப்தாதி விஷயங்களைவிட்டு பகவத்விஷயத்தைக் கிட்டுகையி லுண்டான அருமைபோரும் இவருக்கு பகவத்விஷயத்தை விட்டு ஆழ்வாரளவும் வருகைக்கு; ஶப்தாதிவிஷயங்களை விடலாம், அவற்றின் தோஷதர்ஶநத்தாலே; அங்ஙனொருதோஷம் காண விரகில்லாமையாலே அதிலும் அரிது இது; ஆனால் இத்தை விடவேண்டுவானென்னென்னில்: சரமாவதியில் போவார்க்கு ப்ரதமாவதியில் நிற்கையும் குறையென்னுமதினாலே.

(தென்குருகூர்நம்பி) ஆழ்வார் தாம் உத்தேச்யமாகப் பற்றின விஷயத்துக்குள்ள குறையுமில்லையிறே இவர்பற்றுகிற விஷயத்துக்கு. எங்ஙனேயென்னில்; பகவத்விஷயத்தைப் பற்றினால் அதினெல்லையான ஆழ்வாரளவும் வரவேண்டியிருக்கும்; ஆழ்வாரைப் பற்றினால் அவ்வருகு கந்தவ்யபூமியில்லையிறே. (என்றக்கால்) வாங்மந:காயங்கள் மூன்றும் வேண்டியிருக்கும் பகவத்விஷயத்துக்கு; உக்திமாத்ரமேயமையும் இவ்விஷயத்துக்கு.

(அண்ணிக்கும்) தித்திக்கும். பகவத்விஷயத்தை அநுபவித்தால் ஆழ்வாருக்குப்பிறக்குமாநந்தமெல்லாம் இவ்விஷயத்திலே ஒருக்திமாத்ரத்தாலே பெற்றேனென்கிறார். (அமுதூறும்) அமுது தான் ஊற்றுமாறாதே செல்லாநிற்கும். 46 "न च पुनरावर्तते" (ந ச புநராவர்த்ததே) என்று அவ்விஷயம் நித்யாபூர்வமாய் ஆழ்வாருக்குச் செல்லுமாபோலே எனக்கு இவ்விஷயம் நித்யாபூர்வமாய்ச் செல்லப்பெற்றேன். (என்நாவுக்கே) பின்னை உங்களுக்கு ரஸிக்கிறதில்லையோவென்னில், முதலடியான பகவத்விஷயமுங் கூட ரஸியாதேயிருக்கிற உங்களுக்கு, அதினுடைய எல்லையான ஆழ்வாரளவும் ரஸிக்கும்படியான எனக்கு ரஸிக்குமாபோலே ரஸிக்குமோ? (என்நாவுக்கே) அநாதிகாலம் எதுரஸித்துப் போந்த நாவுக்கு எது ரஸிக்கிறதென்றுமாம். இப்பாட்டால் ஆழ்வாரென்றால் தமக்கு ரஸித்திருக்கும்படி சொன்னார்.

முதற்பாட்டுக்கு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்

அவ:—முதற்பாட்டில் ஆழ்வாருடைய நிரதிசயபோக்யதை யைச் சொல்லுகிறது. ப்ராப்யகாஷ்டையான ஆழ்வாரைப்பற்று கிற இவர் ப்ரதமாவதியான பகவத்விஷயத்திலிழிவானென் னென்னில், ஆழ்வாருடைய போக்யதாதிசயம் தோற்றுகைக்காக வும், ஆழ்வாருடைய முகமலர்த்திக்காகவும், அவருக்கும் பகவத் விஷயமாகையாலும் பேசுகிறார். ||"உரலினோடிணைந் திருந்தேங் கிய எளிவு எத்திறம்" என்றும், §"பிறந்தவாறும் வளர்ந்த வாறும்" என்றும், /"பையவேநிலையும்" என்றும் ஆழ்வார் ஆழங்காற்பட்ட விஷயமாகையாலே அத்தைப்பேசுகிறார்.

வ்யா:—(கண்ணிநுண்சிறுத்தாம்பினால்) ஆழ்வார்பக்கல் இவ ருக்குண்டான உத்தேச்யதை இருந்தபடி- அவருடைய உத்தேச்ய வஸ்துவைக்கட்டினதொருகயிற்றினுடைய உள்மானம்புறமானம்

---

அரு:—முதற்பாட்டு. "அண்ணிக்கு மமுதூறும்" என்றதைக் கடா க்ஷித்துபாவம் (முதற்பாட்டிலித்யாதி). ஆனால் "என்னப்பனில்" என்று சொல்லுவானென் னென்கிற சங்கையை அநுவதித்து, இதுக்கு மூன்று வகையாகப் பரிஹரிக்கிறார் (ப்ராப்யேத்யாதி). (ஆழ்வாருடைய) இத் யாதிக்கு அவருடைய போக்யதாதிசயம் சொல்லுகைக்குக் கீழவதிசொல்ல வேண்டுகையாலே "அப்பனில்" என்கிறாரென்று கருத்து. (ஆழ்வா ருடைய முகமலர்த்திக்காக) என்றதுக்கு "என்" என்கிற பதமநுஸந் தித்தால் ஆழ்வார் திருவுள்ள முகக்குமென்று திருவுள்ளம். (அவருகக்கும்) ஆழ்வார் வ்யாமோஹிக்கும். இப்படி வ்யாமோஹிக்கிற அபதாநமாகை யாலே "கண்ணிநுண்" இத்யாதியாலே விசேஷித்தாரென்று தாத்பர்யம். "மாயன்" என்றபதத்திலே ஆச்சர்யசேஷ்டிதங்களை யெல்லாம் விவக்ஷித்து மூன்றும் பரிஹாரத்தை விவரிக்கிறார் (உரலினோடித்யாதி).

தாம்பினுலென்னவமைந்திருக்க, "கண்ணி" "நுண்" "சிறு" என்று வர்ணிக்கைக்குக் கருத்தென்னென்ன வருளிச் செய்கிறார் (ஆழ்வார் பக்க லித்யாதி). (உத்தேச்யதையிருந்தபடி ஆராயும்படியாய்த்து) என்றந்வயம். (உள்மானம் புறமானம்) அந்தர்ப்பாஹ்ய ஸ்வரூபமெல்லாமென்றபடி.

---

|| திருவாய் 1-3-1. § திருவாய் 5-10-1. / திருவாய் 5-10-3.

ஆராயும்படியாய்த்து. இவர் பகவத்விஷயத்திலே கையொழிந்த படி இவர் ஆழ்வார்பக்கலிலே ந்யஸ்தபரரானபடியிறே.

(கண்ணித் தாப்பு) உடம்பிலே கட்டப்புக்கால் உறுத்தும்படி பலபிணைகளை உடைத்தாயிருக்கை. (கண்ணி) முடி. '(நுண் தாப்பு) உடம்பிலே அழுந்தும்படி நேரியதாயிருக்கை. (சிறுத் தாம்பு) இவனைக்கட்டினபின்பு உரலோடே சேர்க்கைக்கு எட்டம் போராதிருக்கை.

(கட்டுண்ணப்பண்ணிய) "உரலைநேரிதாகச் செதுக்கப்போகாது; அப்போதாகக்கயிற்றை நெடுகவிடப்போகாது. இனி இவன் தன்னை விட்டு நெடியகயிறுதேடி எடுக்கப்புகில் பின்னை இவன் முன் எட்டான். * காற்றிற்கடியனுயோடும்; இனிச்செய்வதென்" என்று அவள் தடுமாறுகிறபடியைக் கண்டான். (கட்டுண்ணப்பண்ணிய) 46 "**सदैकरूपरूपाय**" (ஸதைகரூபரூபாய) என்கிற தன்னுடைய திருமேனியைநெருக்கி இடங்கண்டு கட்டுண்ணும்படி பண்ணினுன். "கட்டுகைக்குப்பரிகரமில்லை" என்று நிவ்ருத்தையாமாகில் பிறந்து

---

தாம்பினுல் கட்டுண்கையிலே ஆழ்வார் வ்யாமோஹித்தபடியாலே அவரையிட்டுக்கண்ணியை வர்ணித்தாரென்றுகருத்து. அவ்யவஹிதமாக பகவத்விஷயத்தைப்பற்றி வர்ணித்தாலாகாதோ? ஆழ்வாரையிட்டென்பா னென்னென்னவருளிச்செய்கிருர் (இவரித்யாதி). (ந்யஸ்தபரரானபடி) என்றது ந்யஸ்தபரராகையாலே யென்றபடி.

"கண்ணி" என்றதுக்குப் பலிதம் (கண்ணித்தாம்பித்யாதி). இத்தால் ஆழ்வார் வ்யாமோஹித்ததுக்கு ஸூசகமென்று திருவுள்ளம். (நேரியதா யிருக்கை) மெல்லியதாயிருக்கை. இதுவும் வ்யாமோஹத்துக்கு ஸூசகம்.

கட்டுண்ட என்னுதே 'பண்ணிய' என்பானென்னென்கிற சங்கை உதிக்கைக்காக ப்ரதீகக்ரஹணம் பண்ணுகிருர் (கட்டுண்ணப்பண்ணிய) என்று. இந்த சங்கையைப் பரிஹரிப்பதாகத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (உரலையித்யாதி). (நேரியதாகச் செதுக்கப்போகாது) என்றது—மெல்லி யதாகச் செதுக்கப்போகாதென்றபடி. (கடியன்)வேகவான். (கண்டான்) அன்ற அநந்தரம் "ஆகையாலே கட்டுண்ணப்பண்ணினுன்என்கைக்காக அருளிச்செய்தார்" என்று கூட்டுவது. ஏகரூபமாக சாஸ்த்ரஸித்தமான திருமேனியைச் சுருக்கப்போகாமையால் கட்டுண்ணப் பண்ணக்

படைக்க நினைத்தகுணத்தை இழக்குமத்தனையிறே. ஆகையாலே திருமேனியிலே இடங்கொடுத்தான். /"கண்ணியார் குறுங் கயிற்றால்கட்ட வெட்டென்றிருந்தான்" என்றும், §"கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்" என்றும் எல்லாருமீடுபடுமதுறையிறே இதுதான். 45"दाम्ना चैव-यदि शक्नोषि गच्छ त्वमतिचञ्चल-चेष्टित" (தாம்நா சைவ-யதி ஶக்நோஷி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித) என்று தாய்கட்டினகட்டை அவிழ்க்க ஶக்தனல்லேன் என்றிருந்தானிறே. 44 "संसारबन्धस्थितिमोक्षहेतुः"(ஸம்ஸாரபந்த ஸ்திதி மோக்ஷஹேது:) ஸ்வவ்யதிரிக்தரையடையக் கட்டுகைக்கும் விடுகைக்கும் ஹேதுவானவன்கிடீர் இப்போது ஓரபலை கட்டின கட்டை அவிழ்த்துக்கொள்ள ஶக்தனன்றிக்கே இருக்கிறான். செருக்கனான ஸார்வபௌமன் அபிமதவிஷயத்தின் கையிலேயகப்பட்டு ஒரு கருமுகைமாலையாலே கட்டுண்டால் அதுக்கு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே இருக்குமாபோலேயிறே, இவள் கட்டினகட்டுக்கு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதேயிருந்த இருப்பும். பிறருடைய கர்மநிபந்தநமாக வரும் கட்டையவிழ்க்கு மத்தனையல்லது தன்னநுக்ரஹத்தாலே வந்த கட்டு தன்னாலும் அவிழ்க்கப் போகாதென்கை.

---

கூடுமோ வென்னவருளிச்செய்கிறார் (ஸதைகேத்யாதி) (நெருக்கி) ஸ்வ ஸங்கல்பத்தாலே நெருக்கியென்றபடி. ஆகையால், "ஸதைகரூபரூபாய" என்றது கர்மக்ருதவிகார ராஹித்யத்தைச் சொல்லுகிறதென்று கருத்து.

தன் ஸங்கல்பத்தால் தானே கட்டுண்ணவேணுமோ? அவள் கட்டாதே போனால் நல்லதன்றோவென்ன வருளிச்செய்கிறார் (கட்டுகைக் கித்யாதி வாக்யத்வயத்தாலே). ஆக, "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய" என்றவித்தால் ஸௌலப்யத்தால்தான் கட்டுண்டானென்று ஆழ்வாருடைய வ்யாமோஹம் ஸூசிப்பிக்கக்கடவது. இப்படி இவ்வவதாரத்தில் வ்யமோஹித்தாருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (கண்ணியாரித்யாதி). இதுக்கு அர்த்தம் – பலபிணைகளை யுடைத்தாய் குறளாயிருந்துள்ள தாம்பாலே கட்டவிசைந்ததிறே.

---

/ பெரியதிரு 5-6-7. § பெரியதிரு 11-5-5.

ஆழ்வார் மயர்வற மதிநலமருளப்பெற்றவராகையாலே ‡ "உயர்வற வுயர்நலமுடையவன்" என்று அவன்குணத்தை வர்ணித்தார். இவர்முதலடியிலே ஆழ்வார்தம்மையே பற்றுகையாலே அவன் திருமேனியில் ஸ்பர்ஶித்ததொருதாம்பை வர்ணிக்கிறார். அவருடைய உத்தேச்யவஸ்து இவருக்கு வெளியதாய்க் கழிகிறதிறே.

இவன்றன்னைக் கட்டுவது—"ஒரு பெண்ணைக் களவுகண்டான். வெண்ணெயைக் களவுகண்டான். ஊரைமூலையடியே நடத்தினன்" என்றிறே; இவன் "ஸாமாந்யனென்று இடுமீடெல்லாமிடுங்கோள்" என்றிருந்தான். அதாவது—களவிலே தகணேறினபடி. இவள் கட்டிவைத்து அடிக்கப்புக்கவாறே, § "தொழுங்கையும்" என்கிற படியே தொழத்தொடங்குமே; எல்லாரையும் தொழுவித்துக் கொள்ளுமவனிறே தொழுகிறான். "இத்தசையில் அபிமதவஸித்திக்கு அஞ்ஜலியே ஸாதநம்" என்றறியுமவனிறே. [அதிசஞ்சல சேஷ்டித] துருதுருக்கையாகக்கொண்டு ஊர்ப்பூசல் விளைத்தவனல்லேயோ? [இத்யுக்த்வா] ஒருசொல்லாலே விலங்கிட்டுவைத்து. [அதநிஜம்கர்மஸாசகார] அவள்தான்கறப்பது கடைவதாகத்

"இருந்தான்" என்று கட்டுகைக்கும், அதுக்கு இசைந்திருக்கைக்கும் அடைவே ப்ரமாணத்வயமருளிச்செய்து அர்த்தாநுஸந்தாநத்தாலே வித்தராகிறார் (தாம்நாசைவேத்யாதி). "தாம்நா சைவோதரே பத்வா ப்ரயத்ய ப்த்நாதுலூகலே, க்ருஷ்ணமக்லிஷ்டகர்மாணமாஹ சேதமமர்ஷிதா, யதி சக்நோஷி கச்ச த்வமதிசஞ்சல சேஷ்டித, இத்யுக்த்வாத நிஜம் கர்ம ஸாசகார குடும்பிநீ."

ஸர்வசக்தனானவன் அசக்தனென்றிருக்கக் கூடுமோவென்ன, ப்ரேமத்தாலே இப்படியிருக்கிறானென்று ஈடுபடுகிறார் (ஸம்ஸாரேத்யாதி) ப்ரேமத்தாலே தான் இப்படி கட்டுண்டானோவென்ன, த்ருஷ்டாந்தம் சொல்லிக்கொண்டு ஆச்சர்யப்படுகிறார் (செருக்கனானவித்யாதி). ஸம்ஸார பந்தமவிழ்க்கைக்கும், இந்தக்கட்டை அவிழ்த்துக்கொள்ளாமைக்கும் ஹேதுவேதென்னஅருளிச் செய்கிறார் (பிறருடையவித்யாதி). ஆக, "யதி சக்நோஷி கச்ச த்வம்" என்னுமதுக்கு அர்த்தமருளிச்செய்தார். ப்ரபந்தாதியிலே பகவத்குணங்களிலே யிழியாதே, தாம்பை வர்ணிப்பானென்னென்

‡ திருவாய் 1-1-1. § பெரு-திரு 7-8.

தொடங்கினாள். [குடும்பிநீ] இவனைப்போலே நியமிக்கவேண்டுவன அநேகமுண்டிறே.

(பெருமாயன்) நிரதிசயாச்சர்யயுக்தன். இத்தால் அவாப்த ஸமஸ்தகாமனுக்கு ஒருகுறையுண்டாய் அது தன்னை க்ஷுத்ரரைப் போலே களவாகிற வழியல்லாவழியிலே இழிந்து, ஸர்வசக்தியான அவன்றான் அது தன்னையும் தலைக்கட்டமாட்டாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டடியுண்டு ||"பையவேநிலையும்" என்று உடம்புவெளுத்து நின்றநிலையளவும் செல்லநினைக்கிறார்.

(என்னப்பனில்) ஆழ்வார் இவருக்கு உத்தேச்யராய்நிற்க, இங்ஙனே சொல்லுவானென்னென்னில், பகவத்ஸம்பந்தமற

---

கிற சங்கையிலே ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே பரிஹரிக்கிறார் (ஆழ்வாரித்யாதி வாக்யத்ரயத்தாலே) (வெளியது) அஸாரம்.

இனி ப்ரக்ருத ச்லோகத்திலே "அதிசஞ்சலசேஷ்டித" என்றதுக்கு அவதாரிகையருளிச்செய்கிறார் (இவன்றன்னையித்யாதி அறியுமவனிறே யென்னுமளவும்). (ஸாமாந்யனென்று இடுமீடெல்லாம்) என்றது அழகர் திருமலையிலே, ஸாமாந்யரென்றும் சோழியரென்றும் இரண்டுவகையுண்டாய் அவர்களுக்குள் அந்யோந்ய ஸ்பர்த்தையுண்டாகையாலே சோழியரெல்லாருமாக ஸாமாந்யரைக் கண்டால் அடிக்கவேணுமென்று கூடியிருக்கச்செய்தே இருட்டினவிடத்திலே சோழியருக்குள்ளே ஒருவன் வர, அவனை ஆளறியாமல் அடிக்க, நான் சோழியன், ஏன் அடிக்கிறீர்களென்ன; ஸாமாந்யனென்றிருந்தோமென்ன; ஆனால் இன்னும் குத்துங்களென்ன அவன்பக்கல் ஸ்பர்த்தையாலே தன்நோவுதோற்றாமல் சொன்னானென்று ஐதிஹ்யம். அப்படி க்ருஷ்ணனும், வெண்ணெய் களவுகண்டானென்று கட்டினாலும் அடித்தாலும் கள்ளனென்றடித்தால் நமக்கிஷ்டம் அத்தால் நமக்கு பரமில்லையென்றிருந்தானென்றபடி.

"தொழுகையுமிவை கண்டவசோதை" என்கிறபடியே தாயைத் தொழத்துடங்கினானென்கிறார் (இவளித்யாதி).

தொழுதால் அடியாளோவென்ன, (இத்தசையிலித்யாதி) இவற்றை யெல்லாம் நினைத்து "அதிசஞ்சலசேஷ்டித" என்கிறாரென்று கருத்து.

---

|| திருவாய் 5-10-3.

வார்த்தை சொன்னாராகில் ஆழ்வாரோட்டை ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டாராவரிறே; அத்தாலே சொல்லுகிறார். அதவா 15 **"पुंसां दृष्टिचित्तापहारिणं"** (பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடியே அவ்வருகே போவாரையும் துவக்கவல்ல விஷயமாகையாலே துவக்குண்டு சொல்லுகிறாரென்னவுமாம்.

(என்னப்பனில் நண்ணி, பகவத்விஷயத்தில் நின்றும் ஆழ்வார்பக்கலிலேகிட்டி. ஶப்தாதி விஷயப்ராவண்யங்களை விட்டு பகவத்விஷயத்தைக் கிட்டுகையிலுண்டான அருமைபோரும், ப்ரதமாவதியான பகவத்விஷயத்தை விட்டுப் புருஷார்த்தத்தில் சரமாவதியான ததீயஶேஷத்வத்தைக் கிட்டுகை. ஶப்தாதிவிஷயங்களை விடலாம் அதின் தோஷதர்ஶநத்தாலே. இங்கு அங்ஙனொரு தோஷங்காண விரகில்லையாகையாலே இது அதிலுமரிது.

---

பலிதார்த்தம் (துருதுருக்கையித்யாதி) "இத்யுக்த்வா" என்று நிஜகர்மகரணத்துக்கு ஹேதுவாக அநுவக்திகையாலே அத்தையுமொருபந்தமாக அருளிச்செய்கிறார் (ஒருசொல்லாலேயித்யாதி) இப்படி இவள்சொல்லுக்குப் பரதந்த்ரனாயிருக்கையாலே தானே கட்டுண்ணப்பண்ணினானென்று கருத்து. கட்டாதே அடியாதே அவனுடைய அண்டையிலேதானே யிருக்கவொண்ணாதோவென்ன அருளிச்செய்கிறார் (இவனையித்யாதி)

கட்டுண்கை முதலானவை ஆச்சர்யங்களானபடியை உபபாதிக்கிறார் (இத்தாலித்யாதி) "அவரப்பனில்" என்று ஸம்பந்தமறச் சொல்லாதே "என்னப்பனில்" என்னக்கூடுமோ வென்கிற சங்கையை யநுவதிக்கிறார் (ஆழ்வாரித்யாதி) "ஸம்பந்தமற வார்த்தைசொன்னாராகில்" என்று பரிஹாரவாக்யத்திலே யிருக்கையாலே இப்படி தாத்பர்யம்கொள்ளவேணும். ஸம்பந்தமறச்சொன்னாராகில் ஆழ்வாருக்கு வைமுக்யம் வருமென்று பரிஹரிக்கிறார் (பகவதித்யாதி) "அவரப்பனில்" என்று சொல்லவந்தவரேயாகிலும் அவசமாகச் சொன்னாரென்று பரிஹாராந்தரமருளிச்செய்கிறார் (அதவேத்யாதி)

"என்னப்பனில்—தென்குருகூர்" என்றால் போராதோ? "நண்ணி" என்பானென்னென்ன, அருமைதோன்றச் சொல்லுகிறாரென்று, அவ்வருமையை த்ருஷ்டாந்தமுகேந உபபாதிக்கிறார் (சப்தாதீத்யாதி). கீழ்சப்தாதிகளோடே ஸாம்யம் தோன்ற அருளிச்செய்து, ஆதிக்யம் தோன்ற அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (சப்தாதி விஷயங்களித்யாதி).

(தென்குருகூர்நம்பி) †"நல்கியென்னை விடான் நம்பிநம்பி" என்று ஆழ்வார் தாம் உத்தேச்யமாகப் பற்றினவிஷயத்தின் பூர்த்தியளவன்றிறே இவர்பற்றின விஷயத்தின் பூர்த்தி. எங்ஙனே யென்னில்; பகவத்விஷயத்தைப் பற்றினால் அதினெல்லையான ஆழ்வாரளவும் வரவேண்டியிருக்கும்; ஆழ்வாரைப்பற்றினால் அவ்வருகு கர்தவ்யபூமியில்லையிறே. "ஆசார்யர்களைநம்பி யென்னக் கற்பித்தார் ஸ்ரீமதுரகவிகளிறே" என்று ஜீயரருளிச்செய்வார். (என்றக்கால்) மநோவாக்காயங்கள் மூன்றும் வேண்டியிருக்கும் பகவத்விஷயத்துக்கு; ஒருக்திமாத்ரமேயமையும் இவ்விஷயத்துக்கு. பூர்த்தியால் வந்த ஏற்றமேயன்று; ஸௌலப்யத்தாலுமேற்ற முண்டென்கை.

(அண்ணிக்கும்) தித்திக்கும். பகவத்விஷயத்தை அநுபவித்தால் ஆழ்வாருக்குப் பிறக்குமாநந்தமெல்லாம் இவ்விஷயத்திலே ஒருக்திமாத்ரத்தாலே எனக்கு ஸித்தித்தது. (அமுதூறும்) அமுதூற்றுமாறுதேநிற்கும். 46"न च पुनरावर्तते"(ந ச புநராவர்த்ததே) என்று அவ்விஷயம் ஆழ்வாருக்கு தத்ப்ரஸாதத்தாலே §நித்யமாய்ச்செல்லுமாபோலே, எனக்கு ஆழ்வார்ப்ரஸாதத்தாலே நித்யாபூர்வமாய்ச் செல்லப்பெற்றேன்.

(என்நாவுக்கே) "இதுபின்னை எங்களுக்கு ரஸிக்கிறதில்லையே" என்னில், முதலடியான பகவத்விஷயமுங்கூட ரஸியாதிருக்கிற

---

*"என்னப்பனில், அமுதூறும்" என்கிறபடியே. "குருகூர்ச்சடகோபன்" என்னாமல் "குருகூர்நம்பி" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (நல்கியித்யாதி). (கற்பித்தார்) அப்யஸிப்பித்தார். (ஸௌலப்யம்) என்றது—ஏககரண ஸாத்யத்வத்தாலே வந்த ஸௌலப்யம் என்றபடி.

"ஊறும்" என்றவிடத்தில் வர்த்தமாந தாத்பர்யமருளிச்செய்கிறார் (அமுதூற்றித்யாதி) இத்தைஸஹேதுகமாக வுபபாதிக்கிறார் (நசேத்யாதி)

"என்நா" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம்; பாகவதநிஷ்டனென்றும் விஷயாந்தர ப்ரவணனென்றும்; முந்தினவர்த்தத்தை சங்காபூர்வகமாக

---

† திருவாய் 1-10-8. §(பா) நித்யாபூர்வமாய். * அநந்விதம்.

வுங்களுக்கு அதிநெல்லையிலே நிற்கிறவெனக்கு ரஸிக்குமாபோலே ரஸிக்குமோ? (என்நாவுக்கே) அநாதிகாலம் விஷயாந்தரங்கள் ரஸித்துப்போந்த என்நாவுக்கே இவ்விஷயம்ரஸிக்கிறதென்றுமாம்.

முதற்பாட்டுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

வருளிச்செய்கிருர் (இது பின்னையித்யாதி) இரண்டாவது (அநாதிகால மித்யாதி). விரோதியின் ரஸத்தை அநுபவிக்கிற என்நாவுக்கு இது ரஸிக்கும்படியென்னென்று வித்தராகிருரென்று கருத்து.

முதற்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்திற்கு அரும்பதம் முற்றிற்று.



## அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யானம்



அவ:— முதற்பாட்டு. (கண்ணிநுண்சிறுத்தாம்பித்யாதி) 47 "आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति" (ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி) என்கிறபடியே தனக்கு அபிமதமென்றுய்த்து இவன் ஸர்வத்தையுமாதரிக்கிறது.

அதில் ஸாத்யமாய் அபிமதமாதல், அதுக்குறுப்பாக ஸாதநமாய் அபிமதமாதலாய் இரண்டுவகையாயாய்த்து அபிமதமிருப்பது. அதில் பகவத்விஷயம் 48 "रसो वै सः रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति" (ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி) i "வீவிலின்பம் மிகவெல்லைநிகழ்ந்தனம் மேவியே" என்கிறபடியே ஸாக்ஷாதபிமதமாய் தன்னைப் பெறுகிற இவனுக்குப் புறப்பு போக்கடியில்லாமையினாலே தானே ஸாதநமாயிருக்கும். இப்படி ஸரஸவஸ்துவாகையாலே ஸ்மரித்தல், ஸங்கீர்த்தநம் பண்ணுதல் செய்யுமவர்களுக்கு 49 "वैकुण्ठचरणांभोजस्मरणामृतसेविनः" (வைகுண்டசரணாம்போஜஸ்மரணாம்ருதஸேவிந:) என்றும், 50 "पाथेयं पुण्डरीकाक्षनामसङ्कीर्तनामृतम्" (பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்) என்றும் சொல்லுகிறபடியே ரஸிக்கக் கடவதாயிருக்கும்.

அப்படியே ஆழ்வாருடைய போக்யதையை இப்பாட்டாலே வெளியிடுகிறார்; ஶப்தாதிவிஷயங்களினுடைய போக்யதையும் ஆழ்வாருடைய போக்யதையும் பார்த்தவாறே விஸத்ருஶமாயிருந்தது; இனி பகவத்போக்யதையிறே கூட்டுதல் கழித்தல் செய்ய

---

அரு —முதற்பாட்டு. (கண்ணியித்யாதி) (காமாய) அபிமதத்தின் பொருட்டு.

(வைகுண்டசரணாம்போஜ) என்றது ஸ்மரணத்துக்கு ப்ரமாணம். (பாதேயம்) என்றது ஸங்கீர்த்தநத்துக்கு ப்ரமாணம்.

சப்தாதி போக்யதையைப்பற்ற ஆழ்வார் போக்யதை விஞ்சியிருக்குமென்று சொல்லாமைக்கு ஹேதுவேதென்ன வருளிச்செய்கிறார் (சப்தாதி

---

i திருவாய் 4-5-3.

லாவது. அந்த பகவத்போக்யதையிலும் விஞ்சியிருந்தது ஆழ்வாருடையபோக்யதை. அதுக்குத்தானுமுட்பட, §"உருவமுமாருயிருமுடனே யுண்டான்" என்னும்படி. போக்யபூதரானவரிறே இவர்.

இனி அந்தபகவத்விஷயத்துக்கு, 51 "वासुदेवोसि पूर्णः" (வாஸுதேவோஸிபூர்ண:) என்கிறபடியே ஷாட்குண்ய பூர்ணையாயிருப்பதொரு பராவஸ்தையுண்டு; அதொழிய ஸௌஶீல்யாதி குணபூர்ணையாயிருப்பதொரு அவதாராவஸ்தையுண்டு; அந்தப் பரத்வம் பாற்கடலினுடைய ஸ்தானத்திலேயாய், அதில் அம்ருத கலசம்போலேயாய்த்து அந்த அவதாராவஸ்தையிருப்பது.

அவ்வவதாரங்கள் தன்னிலும் க்ருஷ்ணவதாரம் அந்த அவதாரங்கள்தன்னைப் பரத்வஸ்தாநீயமாக்கும்படி அத்யந்தபோக்யமாயிருக்கும். 52 "कृषिर्भूवाचकः शब्दो णश्च निर्वृतिवाचकः" (க்ருஷிர்ப்பூவாசகச் ஶப்தோ ணச்ச நிர்வ்ருதிவாசக:) என்கிற வ்யுத்பத்தியாலே ஸுகரமான வ்யக்தியிறே; அதிலும் பக்வக்ருஷ்ணனிலுங்காட்டில், ‡"தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றிய தோன்றல்பின் தமியேன்றன்சிந்தை போயிற்று" என்னும்படி முக்தக்ருஷ்ணபதாநம் த்ருஷ்டிசித்தாபஹாரியாயிருக்கும். நவநீதசௌர்யமும் நகரக்ஷோபமும் பண்ணினவபதாநமிறே; உறிகளில் வெண்ணெயோடு அறைகளில் பெண்களோடு வாசியற இரண்டையும் களவு கண்டுபோந்தவபதாநமிறே; இதுவாய்த்து அபதாநாந்தரங்களில் போக்யதமமாயிருப்பது.

---

விஷயங்களினுடைய வென்றுதுடங்கி) ஆழ்வாருடைய போக்யதை ஈச்வரனுடைய போக்யதையைப்பற்ற விஞ்சியிருக்கும்போது க்ருஷ்ணவதாரத்தில் வெண்ணெய் திருடிக்கட்டுண்டிருந்த அபதானத்தால் வந்த போக்யதையிலும் விஞ்சியிருக்குமென்றருளிச்செய்கிறார் (இனி அந்த பகவத்விஷயத்துக்கு வாஸுதேவோஸிபூர்ண:) என்று துடங்கி.

அப்படி அத்யந்த போக்யமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (க்ருஷிர்ப்பூவாசக): என்று துடங்கி. (தோன்றல்) ஸ்வாமி; நவநீத சௌர்யமென்கிற கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (உறிகளில் வெண்ணெயென்று துடங்கி).

---

§ திருவாய் 9-6-5. ‡ பெரியதிரு 8-5-1.

குணங்களுண்டிறே ராமவிஷயத்தில் நல்குவார்நல்கிற்று; இங்கு அப்படியன்றிக்கே §"வெண்ணெயுண்டு உரலினிடையாப்புண்ட தீங்கரும்பினைத்தேனை நன்பாலினை" என்னும்படி தீம்பு போக்யமாம்படியாயாய்த்து இவ்வ்யக்தியிருப்பது. அதாவது அகண்டபரிபூர்ணமானவஸ்து ப்ராக்ருத பதார்த்தமாயிருப்பதொருவெண்ணெயை யாசைப்படவும், அத்தைக்களவு காண்கையும், ஸர்வஜ்ஞமானவஸ்து அத்தைமறைக்கமாட்டாமல் வாயதுகையதாக அகப்படுகையும், ஸர்வஶக்தியானது ஓரிடைச்சிகையிலே கட்டுண்டு கட்டை யவிழ்க்கமாட்டாதே யிருந்து அழுகையுமான இந்நிலை அத்யந்தாநுபாவ்யமாயாய்த்திருப்பது. /"தறியார்ந்தகருங்களிறே போலநின்று தடங்கண்கள் பனிமல்கும் தன்மையனை" என்று இவ்வபதாநத்திலேயிறே அநுபோக்தாக்கள் ஆழங்கால்படுவது.

இவ்வபதாநத்தின் போக்யதையை இவர் வ்யுத்பத்திபண்ணிற்று ஆழ்வார்தம்முடையபாடேயாய்த்து. முதல்திருவாய்மொழியிலே ஸர்வகாரணத்வாதி லக்ஷணமாக ஒரு வஸ்துவைச் சொல்லி, அப்படிப்பட்டவஸ்து ஏதென்னு மபேக்ஷையிலே அநந்தரம் திருவாய்மொழியிலே ||"வண்புகழ்நாரணன் திண்கழல்சேரே" என்று நாராயண ஶப்தவாச்யமாகச்சொல்லி, இவ்வஸ்துவுக்கடையாளமேதென்னுமபேக்ஷையிலே †"மலர்மகள் விரும்பும் நமரும்பெறலடிகள்" என்று திருமார்பில் பிராட்டியை

---

தீம்பு போக்யமானபடியென்னென்ன அருளிச்செய்கிறார் (அகண்டபரிபூர்ணமானவஸ்து) என்றுதுடங்கி.

ஸர்வாதிகவஸ்துவினுடைய ஸௌசீல்யமாகையாலே, ஆழ்வார் "எத்திறம்" என்று மோஹித்த அபதானத்தை அநுஸந்தியாநிற்கச்செய்தேயும் அதில் கால்தாழாதே அதிலுங்காட்டில் ஈச்வரனுலே ஆழ்வார் கட்டுண்டிருந்த இருப்பு தமக்கு போக்யமாயிருக்கிறபடியை அருளிச்செய்கிறார் (முதல் திருவாய்மொழியிலே என்று தொடங்கி). "பொத்தவுரலைக் கவிழ்த்து" என்கிறபடியே உரலைக்கவிழ்த்து அதன்மேலேறி வெண்ணெ

---

§ பெரியதிரு 7-3-5. / பெரியதிரு 2-10-6. || திருவாய் 1-2-10.
‡ திருவாய் 1-3-1.

அடையாளமாகச்சொல்லி, இப்படி ஸ்ரீய:பதித்வத்தால் வந்த ஸர்வோத்கர்ஷதைகையையுடைய வஸ்து அநாச்ரிதர்க்கு அரியதாய் ஆச்ரிதர்க்கு எளியதாமிடத்தில் *(மத்துறுகடைவெண்ணெயை) நெடுநாள் மலடுநின்று பிள்ளை பெற்றவளாகையாலே துர்ப்பலையாய், இவன்றான் மருங்கிலிருந்து மருங்கு தேய்ப்புண்கையாலும், ‡"மத்தாரப் பற்றிக்கொண்டு" என்னும்படி மத்திலே உடலைச் சாய்த்தாய்த்துக்கடைவது. இப்படி கடையாநிற்கச்செய்தே வெண்ணெய் படப்படக் களவுகாண, அவளும் "இதுக்கடியென்? தெய்வம் கொண்டு போகிறதோ" என்று விசாரித்து இவனுடைய வாயையும் கையையும் பார்க்கும். *கண்ணனென்னும் கருந்தெய்வமிறே களவுகண்டு கொண்டுபோகிறது. இவன் கள்ளனென்று வாயதுகையதாகப் பிடித்து, கிடந்ததொரு கயிற்றாலே பண்டும் இவன்களவுக்குப் பெருநிலை நிற்கு முரலோடேயிணைத்துக்கட்ட, இவனும் கட்டுண்டிருந்து அழப்புக்கவாறே வாய்வாயென்று கையிலே கயிற்றைக்கொள்ள, ஏறிட்டகுரலை யிறக்கமாட்டாதே இருந்து அழுது ஏங்குமாய்த்து. "இப்ப்ரகாரமேதாயிருக்கிறது? இது பெருமையிலே முதலிடுமதோ? எளிமையிலே முதலிடுமதோ" என்று மோஹங்கதாராளுரிறே.

இத்தை யநுஸந்தித்துப் போந்தவிவரும் "ஆழ்வாரீடுபட்டுப் போந்த அபதாநமிதுவாயிருந்தது" என்று பார்த்து இதிலுங் காட்டில் முதலடியிலே ¶"இமையோர்தலைவா" என்று ப்ராப்யத்திலே கண்வைத்த இவரை, §"அவாவற்று வீடுபெற்ற"

---

களவுகாண்கையாலே, உரல் பெருநிலையாயிருக்குமாகையாலே இரண்டு கள்ளரைக் கூடக் கட்டிவைப்போலே உரலோடே கட்டிவுளென்றபடி.

க்ருஷ்ணன் கட்டுண்டமையை போக்யமாகச் சொல்லுகையாலே ஆழ்வாரும் அவன் ஸங்கல்பரூபபாசத்தாலே கண்டுண்டிருந்தமையை விவக்ஷித்து "என்னப்பனில் நண்ணி" என்கையாலே அவன் கட்டுண்டதிலும் இவர் கட்டுண்டமை போக்யமாய் அத்யாகர்ஷகமாயிருக்கிறபடியைப் பாட்டுக்கு அவதாரிகையாக அருளுகிறுர் (இத்தையநுஸந்தித்தவித்யாதி).

---

‡ சிறிய் திருமடல்-29. * குண்டலிதமதிகம். ¶ திருவிரு-1.
§ திருவாய் 10-10-10.

என்னுமளவும் லோகோபகாரார்த்தமாக ஈச்வரன், இவரழுவது, அலற்றுவது, ஆண்பெண்ணாக மடலெடுப்பது, தூதுவிடுவதாம் படி தன் ஸங்கல்ப பாசத்தாலே கட்ட, இவரும் அதை யவிழ்க்க மாட்டாதே †"அறியாமாமாயத்தடியேனை வைத்தாயால்" என்னும் படி கட்டுண்டிருந்த இருப்பு தமக்கு போக்யமாயிருக்கிறபடியை இப்பாட்டாலே அருளிச்செய்கிறார்.

அவன் கட்டுண்டவிடத்தில் ‡"பற்றியுரலிடையாப்பு முண்டான் பாவிகாளுங்களுக்கேச்சுக்கோலோ" என்று பிறர்க்கு ஏசுகைக்கு உறுப்பாய்விட்டது. இவர் கட்டுண்டதிறே நாட்டாருடைய கட்டையவிழ்க்கைக்கு உறுப்பாய் பரமஸாத்விகவர்க்கத்துக்கு போக்யமாய்த்து.

வ்யா:—(கண்ணியித்யாதி) அவன் கட்டுண்டிருந்த அபதானத்தைப்பேசி, தாமும் அதில் கால்தாழ்ந்தபடி சொல்லுகிறார். கட்டினகயிற்றைக்கொண்டாடுகிறார். தத்ஸம்பந்தியானதொன்றைக் கொண்டாடுகை இவர்க்குள்ள தொன்றிறே.

(கண்ணித்தாம்பு) பலபலவிடங்களிலும் அற்றுப் பிணையுண்டு கிடப்பதொரு கயிற்றை யிட்டாயிற்று இவனைகட்டிற்று. கட்டுவது விடுவது கறப்பது கடைவதாகப் பணிபோருமித்தனைபோக்கி,

---

கோபிமாரெல்லாரும் க்ருஷ்ணனைப் பழிசொல்ல யசோதைப்பிராட்டி அவர்களைப்பார்த்து அவன் குணம் உங்களுக்கு தோஷமாய்த்தோவென்கிறார் (பற்றியுரலிடையாப்புமுண்டானென்று துடங்கி).

"கண்ணியித்யாதி" பதத்துக்கு அவதாரிகை அருளுகிறார் (அவன் கட்டுண்டித்யாதி) (கால்தாழ்கை) ஆழ்வார் அவன்கட்டிலே கால் தாழ்ந்தாற்போலே தாமும் ஆழ்வார் கட்டுண்டதிலே கால்தாழ்ந்தாரென்றபடி. கயிற்றைக்கொண்டாடுகிறதேதென்ன அருளிச்செய்கிறார் (தத்ஸம்பந்தியானதொன்றை யென்றுதுடங்கி).

பலவிடங்களிலு மற்று முடிந்த கயிறொழிய வேறு நல்லகயிறில்லையோவென்ன வருளிச்செய்கிறார் கட்டுவது (விடுவதென்று தொடங்கி)

---

† திருவாய் 2-3-3. ‡ நாச்-திரு 12-8.

அத்தைத்தரமிட்டுக்கொள்ள அவஸரமில்லையே. உருவுள்ளவை யுண்டாகில் கன்றுகளும் பசுக்களும் கட்டப்போரும்; ஒழிஞ்சான முட்டாயிருப்பதொரு கயிற்றையிட்டாயிற்று இவனைக்கட்டுவது; வேறொருவரைக் கட்டுமதிட்டு இவனைக் கட்டப்போகாதே; பசுப்ராயரைக்கட்டுமதொன்றுக்கு இவனகப்படானே; பலகண்ணிகளையு முடைத்தாய் அநந்யமாயிருப்பதொரு பாசத்துக்கிறே இவன் அகப்படுவது. அசித்ப்ராயராய் தான்கால்வைக்கலாம்படி யிருப்பாரோடேயணைதல், அநந்யமான பாசத்துக்கு அகப்படுதல் செய்யுமவனுய்த்து. இவன் அகப்பட்டாய்த்து உரலோடே சேர்த்துக் கயிற்றையிட்டுக் கட்டிற்று. அதுதான் பொத்தவுரலாய் ஸாக்ஷிரமுமுண்டானபின்பாய்த்து அநந்யார்ஹமாயிற்று; இப்படி அநந்யார்ஹர்க்கிறே அவன்உடம்பு கொடுப்பது. §"பொத்தவுரலைக்கவிழ்த்ததன் மேலேறி" என்கையாலே இதுதான் இஷ்டவிநியோகார்ஹமுமாயிற்றிறே.

(நுண் தாம்பு) நுண்ணியதாம்பு. அதுதான் அறநேரியதாயிருப்பதொரு கயிறுய்த்து. ஆகையாலிறே இவன்மேலே அழுந்துவது. இன்றும் அழுந்திக்கிடக்கிறதிறே. இவனைக் கட்டுகிற

(ஒழிஞ்சானமுட்டு) ஒன்றுக்கு முறுப்பின்றிக்கே யிருக்கிறது. உத்தரோத்தரம் ஸ்வாபதேசமருளிச்செய்கிறுர் (வேறொருவரைக கட்டுமதிட்டென்று தொடங்கி). (வேறொருவரைக்கட்டுகை) அந்யவிஷயபக்தி. இந்த வாக்யத்தை விவரிக்கிறுர் (பசுப்ராயரை யென்று துடங்கி). கண்ணியென்று பர்வமாய் ஸங்ககாமாநுராகங்களைச் சொல்லுகிறது. கூடக் கட்டுண்டஉரலையும் கட்டின கயிற்றையும் கடாக்ஷித்துக்கொண்டு ஸ்வாபதேசமருளிச்செய்கிறுர் (அசித்ப்ராயரை யென்று துடங்கி). இத்தால் அத்யந்தம் பரதந்த்ரருமாய் அநந்யபக்தியையுடையவர்களுக்கு ஸாத்யனென்றபடி. (அகப்பட்டாய்த்து) என்றது "ஆகையாலே" என்றபடி. (பொத்தவுரல்) அடிபோனவுரல். இத்தால் விநியோக யோக்யமன்றிக்கே அநந்யார்ஹமாயிருக்கிற வுரலென்றபடி. (ஸாக்ஷி) என்றது ஜ்ஞானத்துக்கும்,ரந்த்ரத்துக்கும்பேர்;இந்தவுரல் அநந்யார்ஹமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறுர் (பொத்தவுரலை யென்றுதுடங்கி)

(இடங்கண்டு கட்டவேண்டும்) என்றது வயிற்றை எக்கச்சொல்லி இறுக்கிக் கட்டவேணுமென்றபடி.

 § பெரியாழ்-தி 1-10-7.

பாசம் ஸௌக்ஷ்ம்யவத்தாயிருக்க வேணுமிறே. (சிறுத்தாம்பு) எட்டப்போராமல் இவன் திருமேனியிலே இடங்கண்டு கட்ட வேண்டும்படியான சிறுமையையுடைய கயிறு.

(கட்டுண்ணப்பண்ணிய) அநந்யமாய் ஸூக்ஷ்மமாயிருந்ததே யாகிலும் திருமார்பிலிருக்கிற அவளையும் அவனையும் சேர ஒரு உரலோடே சேர்த்துக்கட்ட உரலுக்கும் தனக்கும் ஒருவைஷம்யமறவிருந்து, பின்னையும் சைதந்யம் கிடக்கையாலே விம்மல் பொருமலாய் அழுதிருந்த இந்த ஸௌசீல்யம் ஏதாயிருக்கிற தென்று அவர் சோகித்தாராய்த்து. இவர் அத்தை யநுஸந்தித்துப் போந்தவராகையாலே, இவ்வாழ்வார், †"பொய்ந்நின்றஞான மும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும் இந்நின்றநீர்மையினியா முறாமை" என்று ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுக்கவேணுமென்று அபேக்ஷியாநிற்கச்செய்தேயும் பகவத்ஸங்கல்ப பாசத்தாலே இவர் கட்டுண்டிருக்கிறபடியைக் கண்டு ஈடுபடுகிறார்.

அவன் இவளுடைய த்ரவ்யத்தைக் களவுகாண்கையாலே கட்டுண்டான். இவர் பிறர் பணத்தை அவர்களுக்குக் கொடுத்திருக்கச்செய்தேயும் கட்டுண்டவராய்த்து. அவன்தான் இவரைக்

---

இந்தக்கயிறு அநந்யமாய் ஸூக்ஷ்மமாயிருந்தாலும் கட்டுண்கிறவஸ்து ஸர்வாதிகமாகையாலே ஈடுபாட்டுக்கு உடலாயிருக்கு மென்றருளிச்செய்கிறார் (அநந்யமாய் ஸூக்ஷ்மமாயிருந்ததேயாகிலு மென்று துடங்கி). அன்றிக்கே ஸ்வாபதேசத்துக்குடலாக அநுகூலபக்திக்கு விஷயமாகை ஈடுபடுத்துமோவென்ன; ஸர்வாதிகவஸ்து பக்திக்குத் தாழ்கையாலே ஈடுபடுத்துகைக்கு உடலென்கிறார் (அநந்யமாயித்யாதி). (திருமார்பிலிருக்கிற அவளையும் அவனையும்) என்றது மலர்மகளென்றத்தைக் கடாக்ஷித்துக் கொண்டருளிச்செய்தபடி. "உரலினோடிணைந்து"என்ற சப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உரலுக்கும் தனக்குமொரு வாசியறவென்று துடங்கி). ஏங்கியென்ற சப்தத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பின்னையும் சைதந்யம் கிடக்கையாலே யென்று துடங்கி).

ஈச்வரனுடைய கட்டைப்பற்ற இவர் கட்டுண்டகட்டு ஆகர்ஷகமாகைக்கு இவர் கட்டுக்கேற்றமேதென்ன அருளிச்செய்கிறார் (அவன்

---

† திருவிரு-1.

கட்டுகைக்கடியென்னென்னில், இவனைக் கட்ட நாட்டிலுள்ளார் களவுபோமென்னும் நினைவாலே †ஊரும் நாடுமுலகும் தன்னைப் போலவும், அவ்வளவன்றிக்கே அறிவுக்கு அவகாசமில்லாத ஸ்தாவர ஜாதியங்களையும் §மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோவென்று கூவுமவரானையாலே இவரைக் கட்டிவைத்தான். இவருக்குத் தன்களவு வெளிப்பட்டுப் பிறர்களவு போமாய்த்து.

(கண்ணிநுண் சிறுத்தாம்பு) போக்யதாகாஷ்டையுள்ளது இவ்வபதானமாகையாலே அத்தை முற்படச்சொல்லி, அதிற்காட்டில் ஆழ்வார் தமக்கு போக்யரானபடியை இப்பாட்டாலே வெளியிடுகிறார். அதில் அவன் கட்டுண்ட தாம்பை முற்படக் கொண்டாடுகிறார். கண்ணித்தாம்புமாய் நுண்தாம்புமாய் சிறுத்தாம்புமாயிருக்கும். ஜ்ஞாநபக்திவைராக்யங்களைக் கொண்டாடுமாபோலே இங்கு மூன்று விசேஷணங்களைச் சொல்லுகிறார். திருமேனிக்கு உறுத்துமபடி பல கண்ணிகளை உடைத்தாயிருக்கும். ப்ரதமத்திலே ருசி, ஸங்கம், பக்தி, பரபக்தி, பரஜ்ஞாநம், பரமபக்திகள் என்று அநேகபர்வையாயிறே அந்த பக்தியிருப்பது. 53 **"भक्तिग्राह्यो हि केशवः"** (பக்திக்ராஹ்யோ ஹி கேஶவ:) 54 **"अभङ्गुरभक्तिभव्यः"** (அபங்குரபக்தி பவ்ய:) என்று பக்திபவ்யனாயிறே அவன் இருப்பது.

(நுண்தாம்பு) நுண்ணிதான தாம்பு. திருமேனியிலே அழுந்துப்படி நுண்ணிதாயிருக்கும். அந்த பக்திதான் ஜ்ஞாநசிரஸ்க

---

இவளுடைய த்ரவ்யத்தை யென்று துடங்கி வாக்யத்வயத்தாலே.) இவரைக் கட்டிலுல் பிறர்களவுபோமோவென்ன அருளிச்செய்கிறார் (ஊரும் நாடு முலகமுமென்று துடங்கி).

கீழருளிச்செய்த அர்த்தத்தை விசதமாக அருளிச்செய்கைக்காகத் திரியட்டும் பதோபாதாநம்பண்ணி அருளிச்செய்கிறார் (போக்யதாகாஷ்டையுள்ள தென்றுதுடங்கி). கண்ணியென்கிற சப்தத்துக்கு ஸ்வாபதேசமருளிச்செய்கிறார் (ப்ரதமத்திலே ருசிஸங்கம் பக்தியென்று துடங்கி). பக்தி ஸாத்யனாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார்(பக்திக்ராஹ்யோ ஹி கேசவ: என்றுதுடங்கி)

---

† திருவாய் 6-7-2. § திருவாய் 6-5-9

மாகையாலே அந்த ஜ்ஞாநந்தான் நுண்ணறிவாயாய்த்திருப்பது. பகவத்ஸ்வரூப ரூபாதிகளை யதாவாக ஸாக்ஷாத்கரிக்கிறதிறே. 55 "भक्त्या मामभिजानाति यावान् यश्चास्मि तत्त्वतः" (பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்வத:) என்கிறபடியே. (சிறுத்தாம்பு) உள்ள கயிறுகள், கன்று கட்டுகைக்கும் பசு கட்டுகைக்கும் கடைகயிறுமாய்ப் போயிற்றன. இனி வேறே ஒன்று கட்டுகைக்கு உறுப்பல்லாத கயிற்றூலேயாய்த்து இவனைக் கட்டுவது. அநந்யார்ஹமாயிருப்பதொன்றுக்கிறே இவன் கட்டுண்பது. 56 "भक्त्या त्वनन्यया शक्यः" (பக்த்யா த்வநந்யயா ஶக்ய:) 57 "भक्त्या लभ्यस्त्वनन्यया" (பக்த்யா லப்யஸ்த்வநந்யயா) என்று அநந்யையான பக்தியாகவேணுமே. அல்லாதவற்றுக்கு விநியோகம் கன்று காலிகளைக் கட்டுகையிறே.

(கட்டுண்ணப்பண்ணிய) தாம்பு சிறுத்தாம்பாகையாலே அதை நீளப்பண்ணப்போகாது. அடுத்துக் கட்டுகிற உரலை இளைக்கப்

---

இங்கு பக்தியன்றோ சொல்லுகிறது; ஜ்ஞாநத்தைச்சொல்லுகிறதோவென்ன அருளிச்செய்கிறார் (அந்த பக்திதான் ஜ்ஞாநசிரஸ்கமாகையாலே யென்றுதுடங்கி). பக்திதான் ஜ்ஞாநத்துக்கு உத்பாதகமுமாய் ஜ்ஞாநஸாத்யமுமாயிருக்குமாகையாலே பக்தியாலே உத்பந்நஜ்ஞாநம் ஸூக்ஷ்மமாயிருக்கும். அந்த ஸூக்ஷ்மஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது நுண்ணென்கிற சப்தம். (ஜ்ஞாநசிரஸ்கமாகையாலே) என்றது ஜ்ஞாநத்துக்கு உத்பாதகமான ஜ்ஞாநவிசேஷமாகையாலே யென்றபடி. இத்தால் ஜ்ஞாநபக்திகளுக்கு பேதமில்லை யென்றபடி. அப்படி ஜ்ஞாநம் ஸூக்ஷ்மமாயிருக்குமோ வென்னவருளிச்செய்கிறார் (பகவத்ஸ்வரூபரூபாதிகளை யென்றுதுடங்கி). பக்தி ஜ்ஞாநவிசேஷமானால் பக்தியாலே காணப்போமோவென்ன அருளிச்செய்கிறார் (பக்த்யா மாமபிஜாநாதி யென்றுதுடங்கி) (அல்லாதவற்றுக்கு விநியோகம் கன்றுகாலிகளைக் கட்டுகையிறே) என்றதுக்குத் தாத்பர்யம் ஸாமாந்யமான பக்தியாலே கட்டுண்பார் அஜ்ஞரென்றபடி. ஆக "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்றத்தால் ஜ்ஞாநவிசேஷமுமாய் அநந்யார்ஹமுமாய் ஸங்ககாமாதி பர்வத்தையுமுடைத்தாயிருக்கிற பக்தியைச்சொல்லிற்றாயிற்று.

அப்படி பக்தியுண்டானாலும் தானே கட்டுண்டாலொழிய ஸாத்யனன்றோவென்ன அருளிச்சேய்கிறார் (நாயமாத்மேத்யாதி யென்றுதுடங்கி)

பண்ணப்போகாது. இனி இடம் காணலாவது இவன்பாடே யாகையாலே வயிற்றை எக்கச்சொல்லி இடங்கண்டு கட்டினு ளாய்த்து. தன்னுடைய ஸங்கல்பத்தாலே இடம்கொடுக்கையன் றிக்கே தாயாருடைய சீற்றத்துக்கு அஞ்சி மௌக்த்யப்ரயுக்த மாகக் கட்டுண்ணப்பண்ணினுளாய்த்து.

(கட்டுண்ணப்பண்ணிய) பக்தியுண்டேயாகிலும் அவன்றானே தன்னை அமைத்துத்தரவேண்டும்படியாய், இது பின்னையும் சிறி தாயிருக்குமாய்த்து. 58 **"नायमात्मा"** (நாயமாத்மா) இத்யாதி. இனி இந்த பக்தி இவன் நெஞ்சில் அந்யபரதையை அறுக்கு மித்தனை. i "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக்கட்டி" என்கிறபடியே, எட்டுமிரண்டும் பத்தாய், பக்தியைச்சொன்னபடி. "எட்டு" என்று திருவஷ்டாக்ஷரமாய் அத்தாலேயாதல், "இரண்டு" என்று வாக்யத்வயமாய், அத்தாலேயாதல் வசீகரித்ததென்னவுமாம். அல்லது, எட்டுமிரண்டுமறியாதார்க்குக் கட்டப்போகாதே.

(பெருமாயன்) அவன் நினைக்கவொண்ணாத ஆச்சர்யசேஷ்டி தங்களை உடையவன். அதாவது—அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்கும் தொழுகையுமான இச்சேஷ்டிதங்கள். s [அழுகையும்] உரலோடே கட்டிவைத்தவாறே அழ, அவள் வாய்வாயென்றவாறே அஞ்சி, பேதைத்தனம் தோற்ற அவளைப் பார்க்கும். [அந்நோக்

---

ஈச்வரனே பலப்ரதனானால் பக்திசெய்கிறதேதென்ன அருளிச்செய்கிறார் (இனி இந்த பக்தி யென்றுதுடங்கி). அப்படி பக்தி அந்யபரதையைத் தவிர்ப்பிக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (எட்டினோடிரண்டெனு மென்றுதுடங்கி).

அழுகையுமென்ற பாசுரத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உர லோடே கட்டிவைத்தவாறே யென்றுதுடங்கி). (அந்நோக்கும்)என்றது அப்படிப்பட்ட நோக்கென்றபடி. அதாவதேதென்ன (தொடுவேசெய்தித் யாதி). "தொடுவேசெய்து" என்ற சந்தைக்குப் பொருளருளிச்செய்கிறார் (பெண்களுடையத்திரண்டென்றுதுடங்கி). "விடவேசெய்துவிழிக்கும்" என்றதுக்கு நாலுபொருள்;— அதாவது தௌர்த்த்யகர்ப்பமான கடா

---

i திருச்சந்த-83. s பெரு-திரு 8-8.

கும்] /"தொடுவேசெய்திளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து விழிக்கும்" என்கிறபடியே பெண்களுடையத் திரண்டு வருகைக்காகக் களவாகிற ஸாதநத்தை அநுஷ்டித்து கள்ளனைக் காண்கை எல்லாருக்கும் ஸாதாரணமாகையாலே * ஒத்தபருவத்திற் பெண்களெல்லாரும் வந்துதிரள, அவர்கள் முகத்திலே தௌர்த்யகர்ப்பமான கடாக்ஷத்தைப் பண்ணுநிற்கும். இசையாதவர்களை இசையும்படி பார்த்தும், இசைந்தவர்களை அறவிலை செய்து தரும்படி பார்த்தும், தான் பண்டுசெய்தமறத்தாலே மாலிந்யமுடையவர்களை அமலங்களாக விழித்தும் இப்படி நோக்கேயாய்ச்செல்லும். [தொழுகையும்] மக்கள் மனம் மாதர்க்குத் தெரியுமாகையாலே இவனுடைய தௌர்த்யத்தைத்தெரிந்து அவளச்சமுறுத்த, (தொழுகையும்) அவளைப்பார்த்து அஞ்ஜலி பண்ணும். பொடிந்தவர்களுக்கு ப்ரஸாதகமாவது அஞ்ஜலியே யென்றிருக்கும். 59 "क्षिप्रं देवप्रसादिनी" (க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ) 60 "अन्तरेणाञ्जलिं बद्ध्वा लक्ष्मणस्य प्रसादनात्" (அந்தரேணாஞ்ஜலிம் பத்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்) என்கிறபடியே. [இவை கண்டவசோதைதொல்லையின்பத்திறுதிகண்டாளே] ஆத்மாநுபந்தியான ஸுகத்தினுடைய எல்லையைக்கண்டாள். நித்யமுக்தர் ஜ்ஞாநசக்த்யாதிகளைக்கண்டு அநுபவித்தவர்கள். இவள் ஸௌசீல்யாதிகளைக் கண்டநுபவித்தவள்.

---

க்ஷத்தைப் பண்ணுநிற்குமென்னுதல், இசையாதவர்கள் இசைந்து மநஸ்ஸைத் தன்னிடத்திலே வைக்கும்படி கடாக்ஷத்தைப் பண்ணுநிற்குமென்னுதல், இசைந்தவர்கள் தூதுவிடும்படி கடாக்ஷத்தைப் பண்ணுநிற்குமென்னுதல், ப்ரணயகோபத்தை யுடையவர்கள் தங்கள் கோபம்விடும்படி கடாக்ஷத்தைப் பண்ணுநிற்குமென்னுதல். அப்படி அஞ்ஜலி ப்ரஸாதநமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (க்ஷிப்ரம்தேவப்ரஸாதிநீ யென்று தொடங்கி). இன்பத்திறுதிகண்டவர்கள் நித்யஸூரிகளன்றோ? இங்கே இவளுக்குண்டானபடி யெங்ஙனே யென்ன அருளிச்செய்கிறார் (நித்யமுக்தர் ஜ்ஞாநசக்த்யாதிகளைக் கண்டென்று துடங்கி),

---

/ திருவாய் 7-5.

(என்னப்பனில்) என்னையனில் (பெருமாயனென்னப்பனில்) இப்போதை இவருடைய தாஸ்யம் 61 "गुणैर्दास्यमुपागतः" (குணைர் தாஸ்யமுபாகத:) என்கிறபடியே அத்தலையில் குணசேஷ்டிதங்களுக்குத் தோற்றுயிற்று. இவரையுமுட்படத் தோற்பிக்கிறதிறே இவ்வபதாநம். இனி ஆழ்வாரைப்போலே இளநெஞ்சல்லாமையாலே மீண்டாசித்தனே. (என்னப்பனில்நண்ணி) அவனிற்காட்டில் ஆழ்வார்பக்கலிலே நெஞ்சைவைத்து; ஸப்தாதி விஷயங்களின் போக்யதையை யறுத்துத் தன்பக்கலிலேயாக்கிக்கொள்ளும் i பகவத் வைலக்ஷண்யம். பகவத்விஷய போக்யதையிலேநின்றும் மீட்டுத் தன்பக்கலிலேயாக்கிக்கொண்டது ஆழ்வார் வைலக்ஷண்யம்.

(தென்குருகூர்நம்பியென்றக் காலண்ணிக்குமு) குறுங்குடி நம்பியைக்காட்டில் குருகூர்நம்பியை வ்யாவர்த்திக்கிறது. அவனுக்குப்பூர்த்தி ஜ்ஞாநஸக்த்யாதிகளாலே; இவருக்குப்பூர்த்தி ஜ்ஞாந பக்த்யாதிகளாலே. ஜகத்தைத் தனக்காக்கும்படியான குணங்கள் அவனது; அவன்றன்னைத் தனக்காக்கும்படியான குணங்கள் இவரது. (நண்ணித்தென்குருகூர்நம்பி யென்றக்கால்) ஆழ்வார் பக்கலிலே நெஞ்சைவைத்து ஆழ்வார் திருநாமத்தைச்சொன்னால்.

(அண்ணிக்குமமுதூறு மென்நாவுக்கே) நினைத்தநெஞ்சும் தித்தித்து, சொன்னநாக்கும் தித்தித்து வாராநின்றது. (என்றக்கால் அமுதூறும்) உச்சாரணம் ஸக்ருத்தாய், ஸாரஸ்யம் ஸதாகால வர்த்தியாகாநின்றது. இனி பகவத்விஷயத்தை நினைக்கைக்கு நெஞ்சுமில்லை; சொல்லுகைக்கு நாக்குமில்லை. இந்தஸாரஸ்யம்

---

ஈச்வரனிடத்தில் ஈடுபட்டால் மீளும்படி யென்னென்னவருளிச்செய்கிறார் (இனி ஆழ்வாரைப்போலே யென்றுதொடங்கி) (இங்ஙன்செல்லாமை) ப்ரதமபர்வத்திலே பொருந்தாமை. "என்னப்பனில்நண்ணி" என்றது ஈச்வரனைவிட்டு ஆழ்வார்பக்கலிலே நெஞ்சைவைத்தென்றபடி.

(அண்ணிக்கும்) தித்திக்குமென்று சப்தார்த்தம். "அமுதூறும்" என்கிறவர்த்தமானார்த்தம் (உச்சாரணம் ஸக்ருத்தாய்) என்றவாக்யம்.

---

i (பா) பகவத்விஷயம்.

எங்களுக்குப் பிறக்கக்காண்கிறிலோமீயென்னில்; (என்நாவுக்கே) உங்களைப்போலே பகவத்விஷயமும் ரஸித்து ஆழ்வாரும் ரஸிக்கும் நாவன்றே என்னது. அடியேபிடித்து ஆழ்வாருடைய ஸாரஸ்யத்திலே பழகினநாவன்றோ. (என்நாவுக்கே) இவ்வஸ்தத்தில் கரணியான என்னோடு கரணங்களோடு வாசியில்லை. (என்நாவுக்கே) அவர்தாம் S"என்னெஞ்சினால்நோக்கிக்காணீர்" என்றாப்போலே, இவரும் "என்நாவுக்கே" என்கிறார்.

முதற்பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

இப்படி ஸாரஸ்யம் ஸர்வகாலவர்த்தியாகையாலே பகவத்விஷயத்தை நினைக்கைக்கும் நெஞ்சில்லை. சொல்லுகைக்கும் நாக்கில்லை யென்றபடி. "அண்ணிக்கும்" என்றதுக்கு இரண்டுபொருள். அதாவது என்னுடைய நெஞ்சுக்குத் தித்திக்குமென்னுதல், கரணியானவெனக்குத்தித்திக்கு மென்னுதல்.

முதற்பாட்டு அரும்பதம் முற்றிற்று.



---

S திருவாய் 5-5-2.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யாநம்

# தம்பிரான்படி

அவதாரிகை

ஸ்ரிய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனுய், ஸமஸ்தகல்யாண குணாத்மகனுய், ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன், 62 **"पञ्चशक्तिमये दिव्ये शुद्धसत्त्वे सुखाकरे"** (பஞ்சஶக்திமயே திவ்யே ஶுத்தஸத்வே ஸுகாகரே) என்றும், 63 **"त्रिपाद्विभूतौ भगवनीश्वर्या परमेश्वरः। नित्यमुक्तैकभोग्योऽसौ मोदते सततं हरिः॥** (த்ரிபாத்விபூதௌ பகவாநீச்வர்யா பரமேச்வர:। நித்யமுக்தைகபோக்யோऽஸௌ மோததே ஸததம் ஹரி:॥ என்றும் சொல்லுகிறபடியே பஞ்சோபநிஷண்மயமாய் ஶுத்தஸத்வாத்மகமாய் நிரதிஶயாநந்தமயமான த்ரிபாத்விபூதியிலே நித்யநிர்மலஜ்ஞாநாதிகுணகராய் ஸ்வச்சந்தாநுவ்ருத்தி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திபேதரான நித்யஸூரிகளாலே அநவரதபரிசர்யமாணசரணநளிநயுகளராய், நித்யமுக்தரையும் ஸ்வாநுபவத்தாலே ஆநந்திப்பித்துக்கொண்டு தானும் நிரதிஶயாநந்தயுக்தனுய்ப் போராநிற்க;

லீலாவிபூதியிலுள்ளார் அவர்களோபாதி தன்னையநுபவிக்க ப்ராப்தியுண்டாயிருக்க, அத்தை யிழந்திருக்கிறபடியைக் கண்டு, வ்யாகுலாந்த:கரணனுய், இவர்களை உஜ்ஜீவிப்பிக்கையிலுண்டான நசையாலே, அசித்விஶேஷிதராய், அத ஏவ போகமோக்ஷஶூந்யராய்க்கிடக்கிற தசையிலே, 64 **"करणकलेबरैर्घटयितुं दयमानमनाः"** (கரணகளேபரைர்க்கடயிதும் தயமாநமநா:) என்கிறபடியே தயை குடிகொண்ட திருவுள்ளத்தையுடையனுய், ஸ்வசரணகமலஸமாச்ரயணேபகரணமாக 65 **"विचित्रा देहसम्पत्तिः"** (விசித்ரா தேஹஸம்பத்தி:) இத்யாதிப்படியே கரணகளேபரங்களைக்கொடுத்து, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶக்தியையுமுண்டாக்கி, ஜ்ஞாநகார்யமான த்யாஜ்யோபாதேய விவேகபரிகரமாக, 66 **"मानं प्रदीपमिव कारुणिको ददाति"** (மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி) என்கிறபடியே வேதங்களை ப்ரமாணமாக ப்ரவர்த்திப்பித்து;

அநந்தரம் மந்வாதிகளுக்கு அந்தர்யாமியாய்நின்று சேதநருடைய விஶிஷ்டவிஷயமான ஶாஸ்த்ரத்தை வெளியிட்டருள, அந்த ஶாஸ்த்ராப்யாஸம் அநேகயோக்யதாஸாபேக்ஷமாய், சிரகால ஸாத்யமாயிருக்கையாலே துஷ்கரமாயிருக்கும்படியைத்திருவுள்ளம் பற்றி, தாத்ருஶயோக்யதா நிரபேக்ஷத்வாதிகளாலே ஸுகரமாய் சேதந நிஷ்க்ருஷ்டவேஷ விஷயமான திருவஷ்டாக்ஷர ப்ரஹ்ம வித்யையை ஸ்வயமேவ ப்ரகாசிப்பித்தவிடத்திலும் கார்யகரமாகாமையாலே ஓலைப்புறத்திலே செல்லாத ராஜ்யத்தை எடுத்துவிட்டுச் செலுத்திக்கொள்ளும் ராஜாக்களைப்போலே "நாமேசென்று ஸம்ஸாரிகளைத் திருத்தக்கடவோம்" என்று ராமக்ருஷ்ணாத்யவதார முகத்தாலே இவர்களிருக்கிறவிடத்திலே தானேவந்து திருத்தப் பார்த்தவிடத்திலும் ஒருவரும் திருந்தக்காணாமையாலே "விஜாதீயரான நம்மால் ஒருபடியாலும் திருத்தவொண்ணாதபடியாயிருந்தது. இனி இணக்குப் பார்வையிட்டு ம்ருகம் பிடிப்பாரைப்போலே ஸஜாதீயரைக்கொண்டு கார்யங்கொள்ளவேணும்" என்றுறுதியிட்டுத் தன்னுடைய நிர்ஹேதுகப்ரஸாதத்துக்கிலக்கான ஆழ்வார்களை அவதரிப்பித்தான்.

அவர்களாகிறார்— ஸர்வேச்வரனாலே மயர்வறமதிநலமருளப் பெற்றவராகையாலே ஸகலஸம்ஸாரிசேதநரும் த்யாஜ்யோபாதேய விபாகம்பண்ணி உஜ்ஜீவிக்கும்படிக்குடலாக ஸர்வாதிகாரமான த்ராவிடரூப ப்ரபந்தங்களை அருளிச்செய்து ஜகத்தைவாழ்வித்தார் சிலராயிற்று.

இதில் முதலாழ்வார்கள் வ்யாஸாதிபரமரிஷிகளில் வ்யாவ்ருத்தர்களேயாகிலும், லௌகிகஜ்ஞாநமும் கலசி க்ரமைகராத்ரமாகத் திரிந்தார்களென்பதொன்று உண்டு; திருமழிசைப்பிரான் முதலான ஆழ்வார்கள் சிறிதுகாலம் லௌகிகஜ்ஞாநம்மேலிட்டுக் காலாந்தரத்திலே பகவந்நிர்ஹேதுக ப்ரஸாதத்துக்கு இலக்கானார்களென்பதொன்று உண்டு.

அக்குறைகளொன்றுமின்றிக்கே, நம்மாழ்வார் 67 "उत्पद्यते यथा लोके तुलसी गन्धसंयुता" (உத்பத்யதே யதா லோகே துளஸீ கந்தஸம்யுதா) என்கிறபடியே திருத்துழாய் மணத்தோடே அங்

குரிக்குமாபோலே, 68 "केवलं स्वेच्छयैवाहं प्रेक्षे कञ्चित्कदाचन" (கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித்கதாசந) என்கிற படியே, பகவந்நிர்ஹேதுக ப்ரஸாதத்தாலே கர்ப்பே அபிஷிக்தராய், லௌகிகஜ்ஞாநபூர்வகமான ப்ரவ்ருத்திலேசமுமின்றியே 69 "बाल आषोडशाब्दात्तु मूकभावं गमिष्यति" (பால ஆஷோடஶாப்தாத்து மூகபாவம் கமிஷ்யதி) என்கிறபடியே திருவவதாரம் தொடங்கி பதினாறு திருநக்ஷத்ரத்தளவும் ஸ்தந்யாதிகளுமின்றியே வாக்வ்யவஹாராதிகளுமின்றியே /"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்கிறபடியே தாரகபோஷக போக்யங்களெல்லாம் எம்பெருமானேயாய், தத்குணாநுபவமே ஸம்வர்த்தகமாக வளர்ந்து போந்தாரொருவராய்த்து.

இவர் ப்ரபாவத்தை நிரூபிக்கும்போது பிராட்டிமாரிலும் நித்யஸூரிகளிலும் உபயவிபூதியிலும் வ்யாவ்ருத்தராயிருப்பர். எங்ஙனேயென்னில்; § "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்" என்று ஓரோ ஆகாரத்தாலே அவர்களோடொக்க விகல்பிக்கலாம்படி மூவர்படியையுமுடையராயிருக்கிற இதுக்குமேலே, §"பிறந்திட்டாள்" என்று அந்யாத்ருஶமான வேறுபாட்டையுடையளான இவளொருத்தி இங்ஙனே பிறப்பதே; § "என்னமாயங்கொலோ இவள் நெடுமாலென்றே நின்றுகூவுமால்" என்றிடும்படிக்குடலான ஏற்றத்தையுமுடையராய், i "அடியார்நிலாநின்ற வைகுந்தமோ வையமோ நும்நிலையிடம்" என்கிறபடியே ஸ்தாநவிகல்பத்தாலும் உபயவிபூதியிலும் அடங்காததன்மையராயிருப்பர்.

r "யாவர்நிகரகல்வானத்தே" என்றும், s "மாறுளதோ இம்மண்ணின்மிசையே" என்றும் முக்தகண்டமாக "உபயவிபூதியிலும் தம்மோடொப்பாரொருவருமில்லை" என்றாரிறே. இவ்வாழ்வாருக்கு ஒப்புச்சொல்லலாவார் ஸம்ஸாரத்திலுமில்லை; நித்யவிபூதியிலுமில்லை. தம்படி தாமுமறியார், ஸம்ஸாரிகளுமறியார், ஈச்வரனுமறியான். "ஒருஸாதநத்தைச்சமையவநுஷ்டித்து இதி

/ திருவாய் 6-7-1. § திருவாய் 6-5-10. i திருவிரு-75.
r திருவாய் 4-5-8. s திருவாய் 6-4-9.

ணாலே நமக்கிப்படி ஒருவீறுடைமைவரும்'' என்றிருக்க வந்த தல்லாமையாலே தாமுமறியார்; இவரைப்போலே ஸகலேதரவில க்ஷணராயிருப்பாரை ஸம்ஸாரமண்டலத்திலே காணாமையாலே ஸம்ஸாரிகளுமறியார்கள். தன்னுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகுணங் கள் 70 "आव्युच्छिन्नास्ततस्त्वेते सृष्टिस्थित्यन्तसंयमाः" (அவ்யுச்சிந் நாஸ்ததஸ்த்வேதே ஸ்ருஷ்டிஸ்தித்யந்தஸம்யமா:) என்கிறபடியே அநுஸ்யூதமான ஸ்ருஷ்டி பரம்பரையில் ஒரு வ்யக்தியிலேயாகிலும் இப்படி பலிக்கக்காணாமையாலே ஸர்வேச்வரனுமறியான். ||''விண் ணுளாரிலும்சீரியர்'' என்கிறபடியே நித்யர்களிலும் வ்யாவ்ருத்தரா யிருக்குமளவன்றியே புருஷோத்தமனான ஸர்வேச்வரனோடேயு மொப்புச் சொல்லலாப்படியான வைபவமிறே இவரது.

71 "स च पूज्यो यथा ह्यहं" (ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்) என்றும், 72 "ज्ञानी त्वात्मैव मे मतं" (ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேச்வரன்றானே ஜ்ஞாநாதிக்யத்தையிட்டு ஓரோவ்யக்திகளைத் தன்னோடொக்கவும் தனக்கு தாரகமாகவும் சொன்னபடிகண்டால் இவர்விஷயத்தில் சொல்லவேண்டாவிறே. இன்னமும், ‡''புவியுமிருவிசும்புநின்'' இத்யாதி; உபயவிபூதி யும் உன் ஸங்கல்பத்திலே கிடக்கிறது. ஏவம் பூதனான நீ என் னுடைய ச்ரோத்ரேந்த்ரியத்வாரா புகுந்து விச்சேதமின்றிக்கே என்னுடைய ஹ்ருதயத்திலே உளனாகாநின்றாய். இப்படியான பின்பு விபூதியையுடைய நீயோ, விபூதிமானையுடைய நானோ பெரியவன் என்றறிவாரில்லை. அப்ரதிஹதஶக்தியான நீதான் இத்தை நிரூபித்துக்காணென்று உபயவிபூதியுக்தனோடே மறு தலைக்கும்படியான வைபவத்தையுடையருமாய், /''தெய்வத்தின மோரனையீர்களாய்'' என்று ஒருவரிருவரன்றிக்கே நித்யஸூரிக ளெல்லாரும் கூடினாலும் தமக்கோரோவகைக்கு ஒப்பாம்படியான பெருமையையுடையராயிருப்பர்.

இப்படி ஸகலேதரவ்யாவ்ருத்தராய் ஸர்வப்ரகாரவிலக்ஷணரான இவ்வாழ்வார் அவதரித்தது-ஸம்ஸாரிசேதநர் பண்ணின ஸுக்ருத

|| திருவி-79. ‡ பெரியதிருவ-75. / திருவி-23.

பலமாய்த்து. 78 "ततोऽखिलजगत्पद्मबोधायाच्युतभानुना। देवकीपूर्वसन्ध्यायामाविर्भूतं महात्मना"(ததோகிலஜகத்பத்ம போதாயாச்யுதபாநுநா। தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் மஹாத்மநா) என்று ஸர்வேச்வரன் அவதரித்தாப்போலேயாய்த்து இவ்வாழ்வார் அவதரித்தது.

அவதார கார்யபேக்ஷத்தாலே அச்யுதபாநுவினுடைய ஆவிர்ப்பாவத்திலும் வகுளபூஷண பாஸ்கரோதயம் வ்யாவ்ருத்தமாகும். 74"यद्गोसहस्रमपहन्ति तमांसि पुंसां नारायणो वसति यत्र सशङ्खचक्रः। यन्मण्डलं श्रुतिगतं प्रणमन्ति विप्रास्तस्मै नमो वकुलभूषणभास्कराय॥" (யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்க சக்ர:। யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ்தஸ்மை நமோ வகுளபூஷணபாஸ்கராய॥) என்று அச்யுதபாநுவுக்கு விகஸியாத ஹ்ருத்பத்மங்களும் விகஸித்து, ஆதித்யாநிவார்யமாய் உள்ளிருளான அஜ்ஞாநாந்தகாரமும் நீங்கினதும் வகுளபூஷணபாஸ்கரோதயமானபின்பிறே.

இப்படி அஜ்ஞாநதமோநிவர்த்தகராய், †"ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல்" என்கிறபடியே எல்லாரும் தம்மைப்போலே பகவதேகபராரம்படி அவதரித்த இவ்வாழ்வார் விஷயத்திலே §"தேவுமற்றறியேன்" என்று ஶேஷித்வஶரண்யத்வ ப்ராப்யத்வங்களை அறுதியிட்டு ததேகநிஷ்டராய்ப்போருமவராய்த்து ஸ்ரீமதுரகவியாழ்வார்.

இப்படி இவர் ததீயஶேஷத்வமே உத்தேச்யமென்றறுதியிடுகைக்கு வந்த வழிதானேதென்னில், நம்மாழ்வாரை * பொய்ந்நின்றஞானம்துடங்கி * அவாவற்று வீடுபெற்றவளவும் செல்ல அநுபவித்தவிடத்தில் அவர் தமக்கு உத்தேச்யமாகத் திருவாய்மொழியில் * பயிலும்சுடரொளி, * நெடுமாற்கடிமையிலே புருஷார்த்த காஷ்டையாகத் ததீயஶேஷத்வத்தையே அறுதியிடுகையாலே ஸ்வாசார்யருசி பரிக்ருஹீதமான அர்த்தமே தமக்கு உத்தேச்யமென்று நினைத்து, ததீயாக்ரேஸரரான இவ்வாழ்வாரையே தேவுமற்றறியேனென்று பற்றுகிறார்.

† திருவாய் 6-7-2. § 2

ஆசார்யருசி பரிக்ருஹீதமான அர்த்தமே ஸாத்விகர்க்கும் பரிக்ராஹ்யமென்னுமிடம் மஹாபாரதஸாரமான ஸ்ரீ ஸஹஸ்ர நாமாத்யாயத்திலே சொல்லிற்றிறே. ஸ்ரீபீஷ்மர் பக்கலிலே ஸகலார்த்தங்களையும் குறைவறக்கேட்ட தர்மபுத்ரன் இவன்றனக்கு உத்தேச்யமாக ஸ்வீகரித்த தத்வஹிதங்களை தனக்கு உத்தேச்யமென்று நினைத்து 21 "को धर्मस्सर्वधर्माणां भवतः परमो मतः" (கோ தர்மஸ்ஸர்வதர்மாணாம் பவத:பரமோ மத:) என்றுகேட்க, 22"एष मे सर्वधर्माणां धर्मोधिकतमो मतः" (ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோதிகதமோ மத:)என்று தன்னுடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தை உபதேசித்தானிறே அவனும்.

த்ரிபுராதேவியாரை "ப்ரமாணப்ராபல்யத்தாலேயோ எம்பெருமானை ஆச்ரயணீயதையென்று நீங்கள்பற்றுகிறது" என்ன, "அதொன்றுமன்று, எம்பெருமானார் காடிச்சால்மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கு மாச்ரயணீய வஸ்துவாகக்கடவது" என்றாள். அந்த ந்யாயத்தாலே ஆழ்வார் தமக்குத் தஞ்சமாக நினைத்திருந்த ததீயசேஷத்வத்தையே விரும்பித் தமக்குப் புருஷார்த்தமாக அத்யவஸிக்கிறார்.

இதுதான் ஸ்ரீராமாயண புருஷர்களில் ஸ்ரீசத்ருக்நாழ்வான் பக்கல் அநுஷ்டாநசேஷமாகக் காணப்பட்டது. 3 "वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः" (வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:) என்று வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ஸ்ரீராமாயண புருஷர்கள் நால்வரும் தர்மஸம்ஸ்தாபநார்த்தமாக அவதரிக்கையாலே நாலர்த்தத்தை யநுஷ்டித்துக்காட்டினார்கள். 23 "कर्ता कारयिता च सः"(கர்த்தா காரயிதா ச ஸ:) என்கிறபடியே அநுஷ்டிப்பிக்கைக்காக, "ஒருவன் சொன்னதை ஒருவன் செய்யக்கடவன்" என்கிற முறை நேராக அழிந்துகிடக்கையாலே பித்ருவசநபரிபாலநாதிகளாலே ஸாமாந்ய தர்மத்தை அநுஷ்டித்தார் பெருமாள். 4 "पितुर्वचननिर्देशात्" (பிதுர்வசந நிர்த்தேசாத்) 5 "अगस्त्यवचनात्"(அகஸ்த்யவசநாத்) 6"सुग्रीववचनात्" (ஸுக்ரீவவசநாத்) என்றிறே இவருடைய அநுஷ்டாநம்.

நிருபாதிகஶேஷியைக் குறித்து ஶேஷபூதன் கிஞ்சித்கரித்துத் தானுளனாகைக்கடவன் என்கிற விசேஷதர்மத்தை அநுஷ்டித்தார் இளையபெருமாள்; 8 "**कुरुष्व मामनुचरं**"(குருஷ்வ மாமநுசரம்)9 "**अहं सर्वं करिष्यामि**" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்றிறே இவருடைய அநுஷ்டாநம். 10 "**राज्यञ्च तव रक्षेयमहं वेलेव सागरं। प्रतिजानासि ते वीर माभूवं वीरलोकभाक्॥**" (ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம்'। ப்ரதிஜாநாமி தே வீர மாபூவம் வீரலோகபாக்)[ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயம்] 11 "**रक्ष धर्मेण बलेन**" (ரக்ஷ தர்மேண பலேந) என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன்; எனக்குத் தாதர்த்யம் ஸ்வரூபமானாலும் உம்மாலென்னை மீறவொண்ணாது காணும். [அஹம் வேலேவ ஸாகரம்] கடலுக்குக்கரை சேஷமாயிருக்கச்செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல். அப்படியே நீர் பெரியீரென்று, உம்மால் என்னை விஞ்சவொண்ணாது காணும். [ப்ரதிஜாநாமி] ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். [தே வீர] ஒருகோழை முன்னேயோ நான் ப்ரதிஜ்ஞைபண்ணுகிறது? நான் ப்ரதிஜ்ஞை பண்ணினால் அத்தைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம்முடைய முன்பேயன்றோ? [மாபூவம்] இப்படி செய்திலேனாகில் உம்முடைய ஸந்நிதியில் வர்த்திக்கப்பெறாதொழிகையுமன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப்பெறாதவனாகிறேன். [வீரலோகபாக்] உம்மை முடிசூட்டியநுபவிக்கப் பாரித்து அதுபெறாதேபோன சக்ரவர்த்திபுக்கலோகம் புகுகிறேன் என்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றியே "ஶேஷியுகந்தவடிமைசெய்யக்கடவன்" என்னுமிடத்தை அநுஷ்டித்தார் ஸ்ரீபரதாழ்வான்.

இப்படியிருக்கிற இவனையல்லதறியாதிருக்கையாலே பகவச்சேஷத்வகாஷ்டையான ததீயஶேஷத்வத்தை அநுஷ்டித்தான் ஸ்ரீஶத்ருக்நாழ்வான்; 12 "**गच्छता मातुलकुलं भरतेन तदानघः। शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः॥**"(கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக:। ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:॥)"கச்சதா" என்கிற வர்த்தமாநநிர்த்தேஶத்தாலே போகிறவிடத்திலே தனக்கென்ன

ஒருப்ரயோஜநமுண்டாயாதல், இங்கு மாதாபிதாக்களைக்
கேள்விகொள்ளுதல், பூர்வஜரான பெருமாளைக் கேள்விகொள்ளு
தல் செய்யுமளவின்றிக்கே அவனையொழிய ஜீவிக்கமாட்டாமை
யாலே போனானென்கை.

[மாதுலகுலம்] யுதாஜித்தழைத்ததும் அவனையாகையாலே
போக்கிலுத்தேச்யமும் அவனுக்கு; இவனுக்கு அவனுத்தேச்ய
மாய்ப்போனானென்கை. [பரதேந] சக்ரவர்த்தியும் துஞ்சி பெரு
மாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய் இளையபெருமாளும்
தொடர்ந்தடிமைசெய்ய வேணுமென்று போய், ஸ்ரீஸத்ருக்நாழ்
வானும் நின்னையல்லதறியேனென்றிருக்கும் தசையிலே ராஜ்
யத்தை பரிக்கக் கடவனென்றாய்த்து வஸிஷ்டபகவான் திருநாமம்
சாத்திற்று. 13 **“भरत इति राज्यस्य भरणात्”** (பரத இதி ராஜ்யஸ்ய
பரணாத்) என்றானிறே ஸதாநீகன்.

[ததா] இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ரபேதமுண்டா
யிருந்தால் பிரித்து முகூர்த்தமிட்டுப்போக ப்ராப்தமாயிருக்க,
அவன் போனதுவே முஹூர்த்தமாகப் போனானென்கை.
“கச்சதா” என்றதிலே அர்த்தஸித்தமன்றோ? “ததா” என்கிற
தென்? என்னில்; அங்கு மமதா நிவ்ருத்தியைச் சொல்லிற்று.
இங்கு அதுக்காச்ரயமான அஹங்காரநிவ்ருத்தியைச் சொல்லு
கிறது. ஆகையாலே புநருக்திதோஷமில்லை. சேஷத்வவிரோதி
யிறே இரண்டும்.

[அநக:] அகமில்லாதது இவனுக்கேயிறே. அகமாவது-உத்
தேச்யவிரோதியிறே; இவ்விடத்தில் அகமாவது — ராமபக்தி;
இத்தைப் பாபமென்னலாமோவென்ன, பாபத்தில் புண்யம்
நன்றாயிருக்க, மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும், 38 **“अश्व
इव रोमाणि विधूय पापं”** (அச்வ இவ ரோமாணி விதூய பாபம்)
என்று பாபசப்தவாச்யமாய்த்திறே. ஆகையாலே பரதாநுவ்ருத்தி
யாகிற உத்தேச்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந்தர்யத்திலே
கால்தாழுமதுவும் பாபமித்தனையிறே. 29 **“रामे प्रमादं मा कार्षीः पुत्र
भ्रातरि गच्छति”**(ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி)என்று
ராமாநுவ்ருத்திக்கும் இடைச்சுவராகச் சொல்லிற்றிறே.

[ஶத்ருக்ந:] பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான், பெருமாள் கண்டாரை அழகாலே துவக்கவல்லராகத் தோன்றுகையாலே ராமனென்றும், இளையபெருமாள் கைங்கர்யமே நிரூபகமாகத் தோன்றுகையாலே லக்ஷ்மணனென்றும் திருநாமம் சாத்தினாப் போலே, இவனுடைய ஸந்நிவேஶத்தைக்காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படியிருக்கக் காண்கையாலே ஶத்ருக்நனென்று திருநாமம் சாத்தினானிறே.

[நித்யஶத்ருக்ந:] பாஹ்யஶத்ருக்களன்றியே ஆந்தர ஶத்ருக்களான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. அவ்விந்த்ரிய ஜயத்துக்கு எல்லை எவ்வளவென்னில்;— 15 "पुंसां दृष्टिचित्ता - पहारिणं" (பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிற ராம ஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணாதிருக்கை. அதாகிறது-பெருமாளைப்பற்றும்போதும் தன்னுகப்பாலேயாதல் அவனுடைய வைலக்ஷண்யத்தாலேயாதலன்றிக்கே தனக்கு உத்தேச்யனானவன் உகந்த விஷயமென்று பற்றுகை.

[நீத:] ராஜாக்கள் போய்போது உடைவாள் பரிசு மற்றொன்று கொண்டுபோமோபாதி அவன் கொண்டுபோகப் போனான்; த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்குமிறே. அதுபோலன்றிக்கே ஜாதிகுணங்களோபாதி போனான். [ப்ரீதிபுரஸ்க்ருத:] ஜ்யேஷ்டாநுவ்ருத்தி கர்த்தவ்யமென்று போனானல்லன். 9 "अहं सर्वं करिष्यामि" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று போன இளையபெருமாளைப் போலே ஸர்வஶேஷவ்ருத்தியையும் பண்ணலாமென்று கொண்டு ப்ரீதி ப்ரேரிக்கப்போனான். படைவீட்டிலிருந்தால் பலருண்டாகையாலே விழுக்காடோபாதியிறே ஸித்திப்பது.

"நீத:" என்கையாலே ஶேஷத்வத்தில் அசித்கல்பனாயிருக்கக் கடவன். "ப்ரீதிபுரஸ்க்ருத:" என்கையாலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே சைதந்யப்ரயுக்தமான தர்மங்களுண்டாயிருக்கை.

§"படியாய்க்கிடந்துன் பவளவாய்க்காண்பேனே" என்றிறே அபியுக்தர்வார்த்தை. "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவனையே பற்றினனென்னவுமாம்.

"அநக:" "நித்யஶத்ருக்ந:" என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்னில், "ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி அவனையல்லதறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாத படியானன்" என்று எம்பெருமானாருளிச்செய்தார். இதுவே ப்ரயோஜநமானால் சொன்னமிகையெல்லாம் பொறுக்கும்; ஆக ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப்போலே இருப்பாரொருவராய்த்து ஸ்ரீமதுரகவிகள்.

இனி ததீயருத்தேச்யரென்னுமிடத்தில் பகவத்ஸம்பந்தமாத்ரத்திலே விஷயீகரித்தும், ததவிஷயத்திலே அவகாஹித்து தத்குணாநுஸந்தாநத்தாலல்லது செல்லாத தசையிலே 16 "**बोधयन्तः परस्परं**" (போதயந்த: பரஸ்பரம்) என்கிறபடியே இப்போது போதுபோக்குகைக்கு உசாத்துணையாயும், 17 "**यत्र पूर्वे साध्याः सन्ति देवाः**" (யத்ர பூர்வே ஸாத்த்யாஸ்ஸந்தி தேவா:) என்கிறபடியே ப்ராப்திதசையில் பகவதநுபவ ஸஹகாரிகளாயும் இப்படி பஹுமுகமான உபகாரத்தாலே ஸர்வாவஸ்தையிலும் ததீயரே உத்தேச்யரென்றறுதியிட்டுத் தனக்கு வைஷ்ணவவிஷயீகாரத்துக்கு முன்னே அஜ்ஞாதஜ்ஞாபநமுகத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டின மஹோபகாரகரான ஆழ்வார் தம்மையே பற்றுகிறார்.

இப்படி இவர் பரமாசார்யரான ஆழ்வார்விஷயத்திலே "தேவுமற்றறியேன்" என்று தேவதாப்ரதிபத்திபண்ணுகைக் கடியென்னென்னில்; 75 "**देवमिवाचार्यमुपासीत**" (தேவமிவாசார்யமுபாஸீத) என்றும், 76 "**आचार्यदेवो भव**" (ஆசார்யதேவோ பவ) என்றும், ஆசார்யவிஷயத்தில் தேவதாப்ரதிபத்தி பண்ணச்சொல்லி வேதாந்தம் விதிக்கையாலும், 77 "**गुरुरेव परंब्रह्म**" (குருரேவ பரம்ப்ரஹ்ம) என்றும், 78 "**आचार्यस्स हरिः साक्षाच्चररूपी न संशयः**" (ஆசார்யஸ் ஸ ஹரிஸ்ஸாக்ஷாச்சரரூபீ ந ஸம்ஶய:) என்றும் 79 "**एष वै भगवान् साक्षात्प्रधानपुरुषेश्वरः**" (ஏஷ வை பகவாந் ஸாக்ஷாத் ப்ரதாந

§ பெரு-திரு 4-9.

புருஷேச்வர:) *என்றும்*, 80 **"योगीश्वरैर्विमृग्याङ्घ्रिं लोकोयं मनुते नरं"** (யோகீச்வரைர் விம்ருக்யாங்க்ரிம் லோகோயம் மநுதே நரம்) *என்றும்*, 81 **"साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुं। मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना"** (ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்த்யமயீம் தநும்। மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச்சாஸ்த்ரபாணிநா) *என்றும் இதுமுதலான ப்ரமாணங்களிலே ஸர்வேச்வரன்தானே ஆசார்யனாய் வந்தவதரித்து ஸம்ஸாரார்ணவ மக்நரான ஸம்ஸாரிசேதநரை கேவலம் தன் க்ருபையாலே ஶாஸ்த்ரார்த்தங்களை உபதேசித்து உத்தரிப்பிக்குமென்று முக்த கண்டமாகச் சொல்லுகையாலும்;*

82 **"कृतेऽत्रिसूनुर्भगवान् त्रेतायां रघुनन्दनः॥ द्वापरे नन्दसूनुश्च कलौ देवः पराङ्कुशः॥"** (க்ருதேऽத்ரிஸூநுர்ப்பகவாந் த்ரேதாயாம் ரகுநந்தந:। த்வாபரே நந்தஸூநுச்ச கலௌ தேவ: பராங்குஶ:) *என்றும் ஈச்வரன்றானே க்ருதயுகத்திலே ப்ராஹ்மணோத்தமரான அத்ரிபகவானுக்குப் புத்ரனாய் தத்தாத்ரேயனாய் வந்தவதரித்தாப் போலவும், த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனான தஶரதசக்ரவர்த்திக்குப் புத்ரனாய் வந்தவதரித்தாப்போலவும், த்வாபரயுகத்தில் கோரக்ஷணாதி தர்மத்தையுடைய ஸாக்ஷாத்வைச்யரான ஸ்ரீநந்தகோபருக்குப்புத்ரனாக வந்தவதரித்தாப்போலவும்*, 83 **"क्रूरे कलियुगे प्राप्ते नास्तिकैः कलुषीकृते। विष्णोरंशांशसंभूतो वेदवेदार्थतत्त्ववित्॥ स्तोत्रं वेदमयं कर्तुं द्राविडया निजभाषया। जनिष्यति सतां श्रेष्ठो लोकानां हितकाम्यया॥"** (க்ரூரே கலியுகே ப்ராப்தே நாஸ்திகை:கலுஷீக்ருதே। விஷ்ணோரம்ஶாம்ஶஸம்பூதோ வேதவேதார்த்ததத்த்வவித்॥ ஸ்தோத்ரம் வேதமயம் கர்த்தும் த்ராவிட்யா நிஜபாஷயா। ஜநிஷ்யதி ஸதாம் ச்ரேஷ்டோ லோகாநாம் ஹிதகாம்யயா॥) *என்று நாஸ்திக ஜநாக்ராந்தமான கலியுகத்திலே ஸர்வேச்வரனுடைய அம்ஶாவதாரமாய் தத்த்வவித்க்ரேஸரராய் லோகஹிதார்த்தமாக த்ராவிடபாஷையாலே வேதாந்தார்த்தங்களை ப்ரபந்தீகரிக்கைக்கு ஸ்ரீஶடகோபரென்று திருநாமத்தை யுடையராய் ஒருவர் திருவவதரிக்கப் போகிறாரென்றும்*, 84 **"कलौ पुनः पापरताभिभूते स उद्भवत्याश्रितवत्सलत्वात्। भक्तात्मना विश्वजनान् सुगोप्तुं विश्वाधिको**

**वीश्वमयो हि विष्णुः॥"** (கலௌ புந: பாபரதாபிபூதே ஸ உத்பவத்யாச்ரிதவத்ஸலத்வ..த। பக்தாத்மநா விச்வஜநாந் ஸ..கோப்தும் விச்வாதிகோ விச்வமயோ ஹி விஷ்ணு:) *என்று கலியுகத்திலும் ஸர்வஜநஸம்ரக்ஷணார்த்தமாக ஸர்வாதிகஞன ஸர்வேச்வரன் ... பண வந்தவதரிப்பானென்று சொல்லுகையாலும்,* 85 **"कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः। क्वचित् क्वचिन्महाभागा द्रमिडेषु च भूरिशः॥ ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी। कावेरी च महाभागा प्रतीची च महानदी॥ ये पिबन्ति जलं तासां मनुजा मनुजश्वर। तेषां नारायणे भक्तिर्भूयसी निरुपद्रवा॥"** (கலௌ ..லு பவிஷ்யந்தி நாராயணபராயணா:। க்வசித்க்வசிந் மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிஶ:। தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ। காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ। யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர। தேஷாம் நாராயணே பக்திர்ப்பூயஸீ நிருபத்ரவா) *என்று ஜ்ஞாநாதிகரான ஸத்துக்கள் வந்து ஆவிர்ப்பவிக்கும் ஸ்தலவிஶேஷங்களை தத்தந்நதீவிஶேஷங்களாலே ப்ரகாஶிப்பித்து, அந்த நதீவிஶேஷங்களிலே ஜலபாநம் பண்ணுமவர்களுக்கு பக்தி அயதிஶயிக்கும்படியைச் சொல்லுகிறவளவிலே, ப்ரதமத்திலே "தாம்ரபர்ணீ நதீ யத்ர" என்று இவராவிர்ப்பாவஸ்தலத்தைச் சொல்லுகையாலே,* 86 **"द्वितीये तु परार्धेऽस्मिन् दिने त्वाद्येऽथ सत्तमे। मन्वन्तरे वर्तमाने त्वष्टाविंशे चतुर्युगे॥ कलेरादौ मासि राधे काव्यवारे कुलीरके। पौर्णमास्यां विशाखाख्ये तारे महति शोभने। प्रजापतेर्जन्मयोगी शठकोप इति स्मृतः। मद्भक्तोऽहं भविष्यामि नेतुं द्राविडतां श्रुतीः॥"** (த்விதீயே து பரார்த்தேஸ்மிந் திநே த்வாத்யேத ஸத்தமே। மந்வந்தரே வர்த்தமாநே த்வஷ்டாவிம்ஶே சதுர்யுகே। கலேராதௌ மாஸி ராதே காவ்ய வாரே குளீரகே। ... ணமாஸ்யாம் விஶாகாக்யே தாரே மஹதி ஶோபநே। ப்ராஜபதேர் ஜந்மயோகீ ஶடகோப இதி ஸ்ம்ருத:। மத் பக்தோஹம் பவிஷ்யாமி நேதும் த்ராவிடதாம் ச்ருதீ:) *என்றும்,* 87 **"ताम्रपर्ण्युत्तरे तटे दान्तक्षेत्रे जनिष्यति"** (தாம்ரபர்ண்யுத்தரே தடே தாந்த்தக்ஷேத்ரே ஜநிஷ்யதி) *என்றும்,* 88 **"निर्निद्र तिन्त्रिणीश त्वं गत्वाऽत्र भुजगाधिपः। सर्वाभिलाषान् सर्वेषां नित्यमेव प्रदास्यति॥ शठकोपमुनीन्द्रत्वं संप्राप्य त्रिदशेश्वरः। ताम्रपर्णीतटं प्राप्य रक्षिष्यत्यखि**

ल्लान् जनान्॥ अत्र वेदाः समस्ताश्च द्रावीडत्वमुपागता। वेदयिष्यन्ति देवेश सकला अपि माधवं॥ (நிர்கித்ய ரந்த்ரிணீம் த்வம் கத்வாத்ர புஜகாதிப:। ஸர்வாபிலாஷாந்த் ஸர்வேஷாம் நித்யமேவ ப்ரதாஸ்யதி। ஶடகோபமுநீந்த்ரத்வம் ஸம்ப்ராப்ய த்ரிதஶேச்வர:। தாம்ப்ரபர்ணீதடம் ப்ராப்ய ந்யத்யகிலாந் ஜநாந்। அத்ர வேதாஸ்ஸமஸ்தாச்ச த்ராவிடத்வமுபாகதா:। வேதயிஷ்யந்தி தேவேஶம் ஸகலா அபி மாதவம்) என்றும், 89 "अस्ति पाण्ड्यमहादेशे कुरुकानगरी शुभा। ताम्रपर्णीनदीतीरे साक्षाद्दृष्टो ह्यधोक्षजः॥" (அஸ்தி பாண்ட்யமஹாதேஶே குருகாநகரீ ஶுபா। தாம்ரபர்ணீ நதீதீரே ஸாக்ஷாத் த்ருஷ்டோ ஹ்யதோக்ஷஜ:) என்றும் சொல்லுகிற படியே அந்த நதீதீரத்தில் *நல்லார்நவில்குருகூரில்யுகவர்ணக்ரமத்திலே அவதரித்த ஸர்வேச்வரன்றனே §"குடி குடி வழிவந்தாட் செய்யும் தொண்டர்" என்கிறபடியே ஸபதபுருஷம் பகவதேக பராரம்படியான காரியாரிடத்திலே வந்தவதரித்து "காரிமாறன் சடகோபன்" என்று பரமாப்ததமரான தாமே அருளிச்செய்யும் படி ப்ரக்யாத ப்ரபாவரானகையாலே இவ்வாழ்வாரே ஸகலஜந ஜீவாதுவாய், ஸர்வோத்தாரகமான பகவதவதாரமென்றறுதியிட்டு அவரே பரதேவதை என்று ஸ்ரீமதுரகவிகள் பற்றினாராயிற்று.

§"அறியாதனவறிவித்தவத்தா" என்று பகவத்விஷயத்திலே ஆசார்யத்வப்ரதிபத்தி பண்ணினர் நம்மாழ்வார். இவர் ஆசார்ய விஷயத்திலே "தேவுமற்றறியேன்" என்று பகவத்ப்ரதிபத்தி பண்ணுகிறார். ஈச்வரத்வாசார்யத்வங்களாகிற தர்மத்வயங்களும் கார்யபேதத்தாலே வ்யக்தித்வய ஸாதாரணமாய்க் காண்கையாலே இருவர்பக்கலிலும் இரண்டு ப்ரதிபத்தியும் நடக்கக்குறையில்லை. 90 "श्रीधरायादिगुरवे" (ஸ்ரீதராயாதிகுரவே) என்று ஶ்ரிய:பதியான ஈச்வரன்றனே ப்ரதமாசார்யனாய், 91 "स चाचार्यवंशो ज्ञेयः। आचार्याणामसावसावित्या भगवत्तः" (ஸ சாசார்யவம்ஶோ ஜ்ஞேய:। ஆசார்யாணமஸாவஸாவித்யாபகவத்த:) என்கிறபடியே குருபரம்

---

§ திருவாய் 9-2-1.

பரையும் ஜ்ஞாதவ்யமாகையாலே தத் பரம்பராப்ரவர்த்தகத்வமும் ஸ்வநிஷ்டமாகையாலே சரமாசார்யத்வமும் தன்னையொழிய அநுப பந்நமாகையாலே ஆசார்யாவதாரமும் ஈச்வரக்ருத்யமாமத்தனை.

92 **"संभवामि युगे युगे"** (ஸம்பவாமி யுகே யுகே) என்று வாயோலை செய்தது ஆசார்யாவதாரத்தை யொழியவன்றிறே; ஆகையாலே நம்மாழ்வார் பகவதவதாரவிசேஷமாகையாலே அவர் விஷயத்திலே ஶேஷித்வஶரண்யத்வ ப்ராப்யத்வங்களை அறுதியிட்டு, ஸ்ரீமதுர கவிகளும் ததேகநிஷ்டராகக் குறையில்லை.

இப்படி ஸ்ரீமதுரகவியாழ்வார் பரதேவதையாக ப்ரதிபத்தி பண்ணின ஆழ்வார் விஷயத்திலே ப்ரதமபர்வமான ஈச்வரன்றானே சரமபர்வமான ஆழ்வாராய் வந்தவதரித்தாரென்று உத்தேச்யத்வ ப்ரதிபத்தி பண்ணாதே ஸஜாதீயத்வ ப்ரதிபத்தி பண்ணினவர்கள் யாவதாத்மபாவி ரௌரவாதி நரகத்திலழுந்துவர்களத்தனை. 93 **"विष्णोरर्चावतारेषु लोहभावं करोति यः। यो गुरौ मानुषं भावमुभौ नरकपातिनौ॥"** (விஷ்ணோரர்ச்சாவதாரேஷு லோஹபாவம் கரோதி ய:। யோ குரௌ மாநுஷம் பாவமுபௌ நரக பாதிநௌ) என்று ஆசார்யவிஷயத்திலே மநுஷ்யத்வ ப்ரதிபத்தி பண்ணினவனுக்கு நரகபதநமே பலமாக ஶாஸ்த்ரம் சொல்லாநின்ற திறே. நம்மாழ்வார் பகவதவதார விசேஷமென்னும் ப்ரதிபத்தி தான் ஆஸ்திகாக்ரேஸரராய் ப்ரமாண பரதந்த்ரராயிருக்கும் சில பாக்யாதிகர்க்கு நெஞ்சிலே ஊற்றுமாறுமல் எப்போதும் நிலைநிற்கும்.

94 **"यत्सारभूतं तदुपासितव्यं"** (யத்ஸாரபூதம் ததுபாஸிதவ்யம்) என்றும், 95 **"भजेत्सारतमं शास्त्रं"** (பஜேத் ஸாரதமம் ஶாஸ்த்ரம்) என்றும் சொல்லுகிறபடியே ஸகல ஶாஸ்த்ரஸாரார்த்தமாய் ஸ்ரீமதுரகவிகள் நாதமுனிகள் தொடக்கமான நம் பூர்வாசார்யர்களாலே உபதேஶபரம்பராப்ராப்தமாய் ஆத்மாவுக்கு நேரே வகுத்த விஷயமாய் ஸ்வாதந்த்ர்யாதிகள் கலசாதே எப்போதும் காருண் யைகவேஷமாய் அதிஸுலபமாய் மோக்ஷைகஹேதுவாயிருந்துள்ள சரமபர்வமான நம்மாழ்வாரையே 96 **"उपायोपेयभावेन तमेव शरणं व्रजेत्"** (உபாயோபேயபாவேந தமேவ ஶரணம் வ்ரஜேத்) என்கிற

படியே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றி நிர்ப்பரராயிருக்குமவர்களுக்குப் பேற்றில் கண்ணழிவில்லை.

97 "सिद्धिर्भवति वा नेति संशयोऽच्युतसेविनां। न संशयोऽस्ति तद्भक्तपरिचर्यारतात्मनाम्॥" (ஸித்திர்ப்பவதி வா நேதி ஸம்ஶயோச்யுதஸேவிநாம்। ந ஸம்ஶயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம்॥) என்று ப்ரதமபர்வமான ஈச்வரனைப்பற்றினவர்களுக்குப் பேற்றில் ஸம்ஶயமுண்டு. சரமபர்வமான ஆசார்யனைப் பற்றினவர்களுக்குப் பேற்றில் கண்ணழிவில்லையென்னாநின்றதிறே. 98 "गुरुमूर्त्या स्थितस्साक्षाद्भगवान् पुरुषोत्तमः। उत्तारयति संसारात् तदुपायप्लवेन तु" (குருமூர்த்த்யா ஸ்தித்தஸ் ஸாக்ஷாத் பகவாந் புருஷோத்தம:। உத்தாரயதி ஸம்ஸாராத் ததுபாயப்லவேந து) என்று அவதார விஶேஷமானவாசார்யனே ஸம்ஸாரோத்தாரகனென்று ஶாஸ்த்ர ஸங்க்ரஹதாத்பர்யார்த்தமாகையாலே பரமாசார்யரான நம்மாழ்வாரே ஸம்ஸாரோத்தாரகரென்னுமர்த்தம் ஸுவ்யக்தம்.

மற்றையாழ்வார்கள் இவர்க்குக் கரணவத்பரதந்த்ரராகையாலே ஏததந்தர்ப்பூதராமத்தனை. இவ்வாழ்வார்தாம் அர்ச்சாவதார ஸமாதியிலே பூர்வமேவ கிலங்களான ஸர்வப்ரபந்தங்களையும் நாதமுனிகளுக்குத் திருவாய்மலர்ந்து தாமேயருளிச்செய்கையாலே இதரப்ரபந்தவக்தாக்களான ஆழ்வார்கள் இவருக்கு அநந்யார்ஹராய் அவயவபூதராகக் குறையில்லை.

இப்படி ஸகலேதரவிலக்ஷணராய் பரமாசார்யரான நம்மாழ்வாரே ஸாக்ஷாத்பகவதவதாரமென்றும், அவர் திருவடிகளே உபாயமாகவும், அவர் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யம் புருஷார்த்தமாகவும், அவருடைய முகோல்லாஸமே பரமப்ரயோஜநமாகவும், அவரெழுந்தருளியிருக்கிறவிடமே ப்ராப்யபூமியாகவும், அவருடைய விக்ரஹாத்யநுபவமே உண்ணும் சோற்றில்படியே தாரகாதிகளாகவும் ப்ரதிபத்திபண்ணி விச்வஸித்திருக்கும் சரமாதிகாரிஶேகரராய்த்து ஸ்ரீமதுரகவியாழ்வார்.

இப்படி சரமபர்வைகநிஷ்டரான இவர்தாம், ஸ்வாசார்யரான நம்மாழ்வார் பகவத்விஷயத்தில் பண்ணுமநுஸந்தாந ப்ரகாரத்தை

இவ்வாழ்வார் விஷயத்தில் பண்ணினாரிறே. எங்ஙனேயென்னில். அவர், §"அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதே" என்றார். அந்த போக்யதாப்ரகர்ஷத்தை ஸ்ரீமதுரகவிகள் தாம், "நண்ணித் தென்குருகூர் நம்பியென்றக்கால் அண்ணிக்கு மமுதூறு மென்னாவுக்கே" என்றார். அவர், /"மலக்குநாவுடையேற்கு" என்றார். இவர் "நாவினால்நவிற்றின்பமெய்தினேன்" என்றார். அவர் †"அடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்றார். இவர்"மேவினேனவன் பொன்னடிமெய்ம்மையே" என்றார். அவர் f"கண்ணனல்லால் தெய்வமில்லை"என்றார். இவர் "தேவுமற்றறியேன்" என்றார். அவர் ‡"பாடியிளைப்பிலம்" என்றார். இவர் "பாடித்திரிவனே" என்றார். அவர் k"இங்கே திரிந்தேற்கிழிக்குற்றென்" என்றார் இவர் "திரிதந்தாகிலும்" என்றார். அவர், e"உரியதொண்டர் தொண்டர்" என்றார். இவர் "நம்பி[illegible]னாரியனே" என்றார். அவர் v"தாயாய்த்தந்தையாய்" என்றார்; இவர் "அன்னையாயத் தாய்" என்கிறார். அவர், t"ஆள்கின்றானாழியான்" என்றார்; இவர் "என்னையாண்டிடும் தன்மையான்" என்கிறார். அவர் i"கடியனாய்க்கஞ்சனைக்கொன்றபிரான்" என்றார்; இவர் "தக்க சீர்ச்சடகோபன்" என்கிறார். அவர் s"யானேயென்றனதே யென்றிருந்தேன்" என்றார்; இவர் "நம்பினேன்பிறர்நன்பொருள் தன்னையும்" என்கிறார். அவர், a"எமர்கீழ்மேலெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று" என்றார்; இவர், "இன்றுதொட்டுமெழுமையும்" என்கிறார். அவர், u"என்னால்தன்னை இன்தமிழ்பாடியவீசன்" என்றார்; இவர் "நின்று தன்புகழேத்தவருளினான்" என்கிறார். அவர் o"ஒட்டுமோயினி யென்னைநெகிழ்க்க" என்றார்; இவர் "என்றுமென்னையிகழ்விலன் காண்மின்" என்கிறார். அவர் r"மயர்வறமதிநலமருளினன்" என்றார். இவர் "எண்டிசையு மறியவியம்புகேனொண்டமிழ்ச்சட கோபனருளையே" என்கிறார்.

---

§ திருவாய் 2-5-4. / திருவாய் 6-4-6. † திருவாய் 6-10-10.
f திருவாய் 5-2-7. ‡ திருவாய் 1-[illegible]-10. k திருவாய் 8-10-4.
e திருவாய் 6-9-11. v திருவாய் 7-8-1. t திருவாய் 10-4-3.
i திருவாய் 9-6-11. s திருவாய் 2-9-9. a திருவாய் 2-8-1.
u திருவாய் 7-9-1. o திருவாய் 1-7-7. r திருவாய் 1-1-1.

அவர் ||"அருளுடையவன்" என்றார்; இவர் "அருள்கண்டீரிவ் வுலகினில்மிக்கது" என்கிறார். அவர் a"பேரேனென்றென்நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்றார்; இவர் "நிற்கப்பாடியென்நெஞ்சுள் நிறுத்தினான்" என்கிறார். அவர் j"வழுவிலாவடிமைசெய்யவேண்டும்நாம்" என்றார்; இவர் "ஆட்புக்ககாதலடிமைப்பயன்" என்கிறார். அவர் t"ஆராதகாதல்" என்றார்; இவர் "ஆட்புக்க காதல்" என்கிறார்; அவர் l"பொருளல்லாத என்னைப்பொருளாக்கி அடிமைகொண்டாய்" என்றார்; இவர் "பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான்" என்கிறார். அவர் f"கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ" என்றார்; இவர் "தென்குருகூர்நம்பிக்கன்பனாய்" என்கிறார். அவர் §"உலகம்படைத்தான்கவி" என்றார்; இவர் "மதுரகவி" என்கிறார். அவர் ‡"உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்றார்; இவர் "நம்புவார்பதி வைகுந்தம்காண்மினே" என்று தலைக்கட்டுகிறார்.

இப்படி ஆழ்வார் பகவத்விஷயத்திலே அநுஸந்தித்த குணவிஶேஷங்களடையத்தாம் ஆழ்வார் விஷயத்திலே அநுஸந்திக்கும்படிக்கீடாக ஆழ்வார் தம்மை விஷயீகரித்து சாமபர்வைக நிஷ்டராம்படி பண்ணியருளினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லாமையாலே, தத்குணாநுஸந்தாநத்தாலல்லது செல்லாதபடியான தசை விளைந்து தத்குணாநுபவ ஜநிதப்ரீதிகளுக்குப் போக்குவீடாக பகவத்விஷயத்திலும் அதிஶயிதமான ஆழ்வாருடைய போக்யதா ப்ரகர்ஷத்தையும், அவருடைய பாசுரமே தேஹயாத்ரையாம்படி தாரகமானபடியையும், ஆழ்வாருகந்த விஷயமென்று தமக்கு பகவத்விஷயம் உத்தேச்யமானபடியையும், அப்படி உத்தேச்யமாக விரும்புகைக்கடி தம்மை ஆழ்வார் விஷயீகரித்த விஷயீகாரமென்னுமதையும், இதரவிஷய ப்ராவண்யத்தைவிட்டு பகவத்

|| திருவாய் 2-10-11. a திருவாய் 10-8-2. j திருவாய் 3-3-1.
t திருவாய் 2-1-11. l திருவாய் 5-7-3. f திருவாய் 10-10-7.
§ திருவாய் 3-9-10. ‡ திருவாய் 5-3-11.

விஷயத்தில் நில்லாதே ஆழ்வாரளவும் வரும்படியான சாதுர்யத்தையும், ஆழ்வார் தம்மை விஷயீகரித்த விஷயீகாரத்தினுடைய தார்ட்யத்தையும், தம்மை விஷயீகரிக்கைக்கடியான ஆழ்வாருடைய க்ருபாப்ரகர்ஷ ப்ரகாமத்தையும், பகவத்க்ருபையிலும் ஆழ்வாருடைய க்ருபையே இவ்விபூதியில் விஞ்சியிருக்குமென்னுமதையும், இப்படி ஆழ்வாருடைய க்ருபை இவ்வுலகில் விஞ்சியிருக்கைக்கடி ஸகலவேதரஹஸ்யார்த்த ஜ்ஞாபகமாய் தம்முடைய பாசுரமான இப்ரபந்தத்தை என் நெஞ்சிலே ஸுப்ரதிஷ்டிதமாக்கினுனென்னுமதையும், இப்படி ஆழ்வார் தம்பக்கல் உபகரித்த உபகாரம் ப்ரத்யுபகார நிரபேக்ஷமாயிருக்குமென்னுமதையும், இப்பத்துப் பாட்டாலே ஸங்க்ரஹமாக அருளிச்செய்து, இப்ரபந்தம் கற்றூர்க்குப்பலம் ஸ்ரீவைகுண்டமென்றும் சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

தம்பிரான்படி அவதாரிகை முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கண்ணிநுண் சிறுத்தாம்பின்

# முதற்பாட்டுக்குத் தம்பிரான்படி

அவ:—ஆழ்வாருடைய நிரதிஶயபோக்யதையைச் சொல்லுகிறது. ப்ராப்யகாஷ்டையான ஆழ்வாரைப்பற்றுகிற இவர் ப்ரதமாவதியான பகவத்விஷயத்திலே இழிவானென்னென்னில்; ஆழ்வாருடைய போக்யதாதிசயம் தோற்றுகைக்காகவும், அவருடைய முகமலர்த்தி தோற்றுகைக்காகவும் அவருக்கும் பகவத்விஷயமாகையாலும் பேசுகிறார்.

வ்யா:—(கண்ணிநுண் சிறுத்தாம்பிநைலித்யாதி) §"உரலிைேனாடிணைந்திருந்தேங்கியவெளிவு—எத்திறம்" என்றும், ‡"பிறந்தவாறு" என்றும், i"பையவேநிலையும்வந்து" என்றும் ஆழ்வார் ஆழங்கால்பட்ட விஷயமாகையால் அத்தைப்பேசுகிறார்.

(கண்ணியித்யாதி) ஆழ்வார்பக்கல் இவர்க்குண்டான உத்தேச்யதை இருந்தபடி. ஆழ்வாருடைய உத்தேச்ய வஸ்துவைக் கட்டினதொரு கயிற்றினுடைய உள்மானம் புறமானமாராயும்படியாய்த்து இவர் கையொழிந்தபடி பகவத்விஷயத்தில். (கண்ணித்தாம்பு) என்றது-உடம்பிலே கட்டப்புக்கால் உறுத்தும்படி பலபிணைகளையுடைத்தாயிருக்கை. (நுண்தாம்பு) உடம்பிலே அழுந்தும்படி நேரிதாயிருக்கை. (சிறுத்தாம்பு) இவனைக் கட்டினபின்பு உரலோடே சேர்க்கைக்கு எட்டம் போராதிருக்கை.

(கட்டுண்ணப்பண்ணிய) உரலை நேராகச் செதுக்கப்போகாது; அப்போதாகக் கயிற்றை நெடுகவிடப்போகாது; இனி இவனை விட்டு நெடியகயிறு தேடியெடுக்கப்புகில் பின்னை இவன்றான் எட்டான்; காற்றில் கடியனுமோடும்; இனிச்செய்வதென்?" என்று அவள் தடமாறுகிறபடியைக்கண்டான். (கட்டுண்ணப்பண்ணிய) 43 "सदैकरूपरूपाय" (ஸதைகரூபரூபாய) என்கிற தன்னுடைய திருமேனியை நெருக்கி இடங்கண்டு கட்டும்படிபண்ணினான்.

---

§ திருவாய் 1-3-1. ‡ திருவாய் 5-10-1. i திருவாய் 5-10-3.

கட்டுகைக்குப் பரிகரமில்லையென்று நிவ்ருத்தையாமாகில் பிறந்து படைக்கநினைத்த குணத்தையிழக்குமத்தனையிறே. ஆகையாலே திருமேனியிலே இடம் கொடுத்தான்; §'கண்ணியார் குறுங்கயிற்றால்கட்ட வெட்டென்றிருந்தான்" என்றும், ||"கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்" என்றும் எல்லாரும் ஈடுபடும் துறையிறே இதுதான்.

45 "दाम्ना चैव" (தாம்நா சைவ) 45 "यदि शक्नोषि" (யதி ஶக்நோஷி) என்று தாய் கட்டினகட்டை அவிழ்க்க ஶக்தனல்லேனென்றிருந்தானிறே; 44 "संसारबन्धस्थितिमोक्षहेतुः" (ஸம்ஸாரபந்தஸ்திதி மோக்ஷஹேது:) என்று ஸவ்யதிரிக்தரையடையக் கட்டுகைக்கும் விடுகைக்கும் ஹேதுவானவன் கிடீர் இப்போது ஓரபலை கட்டின கட்டையவிழ்க்க ஶக்தனன்றிக்கேயிருக்கிறான்; செருக்கனான ஸார்வபௌமன் அபிமதவிஷயத்தின் கையிலே அகப்பட்டு ஒரு கருமுகை மாலையாலே கட்டுண்டால் அதுக்கு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதேயிருக்குமாபோலேயிறே, இவள் கட்டினகட்டுக்கு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதிருக்கிற இருப்பும். பிறருடைய கர்மநிபந்தநமான கட்டு அவிழ்க்குமத்தனையல்லது தன் அநுக்ரஹத்தால்வந்த கட்டு தன்னாலும் அவிழ்க்கப்போகாதென்கை.

ஆழ்வார் * மயர்வறமதிநலமருளப்பெற்றவராகையாலே "உயர்வறவுயர் நலமுடையவன்" என்று அவன் குணத்தை வர்ணித்தார். இவர் முதலடியிலே ஆழ்வார் தம்மையே பற்றுகையாலே அவன் திருமேனியில் ஸ்பர்ஶித்ததொரு தாம்பைவர்ணிக்கிறார்; அவருடைய உத்தேச்யவஸ்து வெளிறாய்க்கழிகிறதிறே.

அதவா, (கட்டுண்ணப் பண்ணிய) பக்தியுண்டேயாகிலும் அவன்றானே தன்னையணைத்துத் தரவேண்டும்படியாய், இதுபின்னையும் சிறிதாயிருக்குமாய்த்து. 58 "नायमात्मेत्यादि-यमेवैष वृणुते तेव लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वां" (நாயமாத்மேத்யாதி- யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ

§ பெரியதிரு 5-7. || 11-5-9. பெரியதிரு-5.

ஆத்மா விஷ்ணுதே தந்ம ஸ்வாம்) என்கிறபடியே; இனி இந்த பக்தி இவன் நெஞ்சிலங்யபரதையை அறுக்குமித்தனை; /"எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக்கட்டி" என்கிறபடியே எட்டுமிரண்டும் பத்தாய் பக்தியைச்சொன்னபடி. எட்டென்று திருவஷ்டாக்ஷரமாய், அத்தாலேயாதல், இரண்டென்று வாக்யத்வயமாய், அத்தாலேயாதல் வஶீகரித்தென்னவுமாம். அல்லது எட்டுமிரண்டுமறியாதார்க்குக்கட்டப்போகாதே.

இவன்றன்னைக் கட்டுவது "ஒரு வெண்ணெயைக் களவு கண்டான், ஊரை மூலையடியே நடத்தினான்" என்றிறே. இவன் "ஸாமாந்யனென்று இடுமிடெல்லாமிடுங்கோள்" என்றிருந்தான். அதாவது களவிலே தகணேறினபடி; இவனைக்கட்டிவைத்து அடிக்கப் புக்கவாறே †"தொழுகையும்" என்கிறபடியே தொழத்தொடங்கும் எல்லாரையும் தொழுவித்துக்கொள்ளுமவனிறே தொழுகிறான்; இத்தலையில் அபிமதஸித்திக்கு ஓரஞ்ஜலியே ஸாதநமென்றறியுமவனிறே.

45 "दाम्ना चैवोदरे बद्ध्वा प्रत्यबध्नादुलूखले। यदि शक्नोषि गच्छ त्वम्" (தாம்நா சைவோதரே பத்வா ப்ரத்யபத்நாதுலூகலே। யதி ஶக்நோஷி கச்ச த்வம்) தான் தாயான பரிவுதோற்ற இவனைக் களவிலேகண்டுபிடித்துத் தாம்பாலே உரலோடே அடுத்துக்கட்டி மறுகண்ணியும் பொத்தி, "நீவல்லையாகில் போய்க்காணாய்" என்று உறுக்கிவிட்டால்போகமாட்டாமேயிருக்கும். 99 "परास्य शक्तिर्विविधैव श्रूयते" (பராஸ்ய ஶக்திர்விவிதைவ ச்ரூயதே) என்று ஓதப்படுகிறவஸ்து இவளுக்கெளிதானபடியிறே இங்ஙனே சொல்லுகிறாள். 45 "अतिचञ्चलचेष्टित" (அதிசஞ்சலசேஷ்டித) துறுதுறுக்கையாய்க் கொண்டு ஊர்பூசல் விளைத்தவனல்லையோ? 45 "इत्युक्त्वा" (இத்யுக்த்வா) ஒருசொல்லாலே விலங்கிட்டுவைத்து. 45 "अथ निजं कर्म सा चकार" (அத நிஜம் கர்ம ஸா சகார) அவள் கறப்பது கடைவதாகத் தொடங்கினாள். 45"कुटुम्बिनी" (குடும்பிநீ) இவனைப்போலே நியமிக்கவேண்டுவன அநேகமுண்டிறே இவளுக்கு.

/ திருச்சந்த-83. † பெரு-திரு 7-8.

(பெருமாயன்) நிரதிசயாச்சர்ய யுக்தன்; இத்தால் அவாப்த ஸமஸ்தகாமனுக்கு ஒருகுறையுண்டாய், அதுதன்னை க்ஷுத்ரரைப் போலே களவாகிற வழியல்லாவழியே இழிந்து ஸர்வசக்தியான தான் அதுதன்னைத் தலைக்கட்டமாட்டாதே வாயதுகையதாக அகப்பட்டுக் கட்டுண்டு /"பையவேநிலையும்" என்று உடப்பு வெளுத்து நின்றநிலையளவும் செல்லநினைக்கிறார். (என்னப்பனில்) ஆழ்வார் இவர்க்கு உத்தேச்யராய் நிற்க, இங்ஙனே சொல்லுவானென்னென்னில், பகவத்ஸம்பந்தமற வார்த்தை சொன்னாராகில் ஆழ்வாரோட்டை ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டாராமத்தனையிறே; அத்தாலேசொல்லுகிறார்; அதவா, 15 "पुंसां दृष्टिचित्ता-पहारिणं" (பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடியே அவ்வருகு போவாரையும் துவக்கவல்ல விஷயமாகையாலே துவக்குண்டு சொல்லுகிறாராகவுமாம்.

(என்னப்பனில்நண்ணி) பகவத் விஷயத்தில் நின்றும் ஆழ்வார்பக்கல் கிட்டி; ஶப்தாதி விஷயப்ராவண்யங்களை விட்டு பகவத்விஷயத்தைக் கிட்டுகையிலுண்டான அருமை போலன்று ப்ரதமாவதியான பகவத்விஷயத்தை விட்டுப் புருஷார்த்தத்தில் சரமாவதியான ததீயஶேஷத்வத்தைக் கிட்டுகை. ஶப்தாதிவிஷயங்களை விடலாம் அதின் தோஷதர்ஶநத்தாலே அங்கு; இங்கு அங்ஙனொரு தோஷம் காண விரகில்லை; ஆகையாலே அதிலும் இது அரிது.

(தென்குருகூர்நம்பி) †"நல்கியென்னைவிடான்நம்பி" என்று ஆழ்வார் தாம் உத்தேச்யமாகப் பற்றின விஷயத்தின் பூர்த்தியளவன்றிறே இவர்பற்றினவிஷயத்தின் பூர்த்தி; எங்ஙனேயென்னில், பகவத்விஷயத்தைப்பற்றினால் அதினெல்லையான ஆழ்வாரளவும் வரவேண்டியிருக்கும். ஆழ்வாரைப் பற்றினால் அவ்வருகு கந்தவ்யமில்லையிறே. ஆசார்யர்களை நம்பியென்னக்கற்பித்தார் ஸ்ரீமதுரகவிகளிறேயென்று ஜீயரருளிச்செய்வர். (என்றக்கால்) மநோவாக்காயங்கள் மூன்றும் வேண்டியிருக்கும் பகவத்விஷயத்துக்கு; ஒருக்திமாத்ரமேயமையும் இவ்விஷயத்துக்கு; பூர்த்தியால் வந்த ஏற்றமேயன்று; ஸௌலப்பத்தாலுமேற்றம் உண்டென்கை.

/ திருவாய் 5-10-3. † திருவாய் 1-10-8.

(அண்ணிக்கும்) தித்திக்கும்; பகவத்விஷயத்தை அநுபவித்தால் ஆழ்வாருக்குப் பிறக்குமாநந்தமெல்லாம் இவ்விஷயத்திலே ஒருக்திமாத்ரத்தாலே எனக்கு ஸித்தித்தது. (அமுதூறும்) அமுதவூற்றமாறுதேநிற்கும்; 46 "न च पुनरावर्तते" (நசபுநராவர்த்ததே) என்ற விஷயம் ஆழ்வாருக்குத்தத்ப்ரஸாதத்தாலே நித்யமாய்ச்செல்லுகிறாப்போலே எனக்கும் ஆழ்வார் ப்ரஸாதத்தாலே நித்யாபூர்வமாய்ச் செல்லப்பெற்றேன்.

(என்நாவுக்கே) இது பின்னை எங்களுக்கு ரஸிக்கிறதில்லையோ வென்னில், முதலடியான பகவத்விஷயங்கூட ரஸியாதிருக்கிற உங்களுக்கு அதினெல்லையிலே நிற்கிறவெனக்கு ரஸிக்குமாபோலே ரஸிக்குமோ? (என்நாவுக்கே) அநாதியாக விஷயாந்தரங்களை ரஸித்துப்போந்த என்நாவுக்கே இவ்விஷயம் ரஸிக்கிறதென்றுமாம்.

முதற்பாட்டின் தம்பிரான்படி
முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கண்ணிநுண் சிறுத்தாம்பின்

# இரண்டாம் பாட்டுக்கு

நஞ்சீயர் வ்யாக்யானம்.

2. நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்
மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே
தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவினின்னிசை பாடித்திரிவனே.

அவ:—இரண்டாம்பாட்டு. ஆழ்வாருடைய ஏற்றம் ஒருக்தியாலே இச்சரீரத்தோடே அநுபவிக்கலாமென்கிறார்.

வ்யா:—(நாவினால் நவிற்று) 100 "मनः पूर्वो वागुत्तरः" (மந: பூர்வோ வாகுத்தர:) என்கிறவதுவும் வேண்டாவிறே இங்குத்தைக்கு. எல்லாக் கரணங்களால் ப்ரவர்த்தித்தார் பெறும் பேற்றைக்காணும் இவர் வாக்கொன்றாலும் பெற்றது. 101 "प्रत्यक्षे गुरवः स्तुत्याः" (ப்ரத்யக்ஷே குரவஸ்ஸ்துத்யா:) என்கிறபடியே பகவத்விஷயத்தில் உபகாரகரை ஸ்தோத்ரம் பண்ணுகைக்கன்றோ நாக்கு கண்டது: ஈச்வரன் ஸ்ருஷ்டித்த லாபமும் பெற்றேனென்கிறார். (இன்பமெய்தினேன்) ரஸத்தினெல்லையைப் பற்றினேன். *சூழி பட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளம் அரைவயிறென்னும்படியிறே இவர் பெற்றபேறு.

இவர்பெற்றலாபமென்னென்னில்: (மேவினேனவன் பொன்னடி) ‡"கோலமாமென் சென்னிக்குன் கமலமன்ன குரைகழல்" என்றும், §"தளிர்புரையும் திருவடியென் தலைமேலவே" என்றும் சொல்லுகிற படியே எல்லாம் இவர்க்கு இங்கேயாகிறது. (மெய்ம்மையே) இது எத்தனைகுளிக்கு நிற்குமென்னில்: 102 "विज्ञापनमिदं सत्यं" (விஜ்ஞாபநமிதம் ஸத்யம்) என்கிறார். /"இமையோர்தலைவா மெய்நின்று" என்றார் ஆழ்வார். "குருகூர்நம்பி பொன்னடி மேவினேன் மெய்ம்மையே" என்கிறார் இவர்.

(தேவுமற்றறியேன்) வேண்டாவென்கிறேனன்று; வ்யுத்பத்தி யில்லாமை. 101 "भावो नान्यत्र गच्छति" (பாவோ நாந்யத்ர கச்சதி)

‡ திருவாய் 4-3-6. § திருநெடு-1. / திருவி-1.

"அந்யத்ர" என்றுப்போலே "மற்றறியேன்" என்கிறார் விட்டவிஷயத்தின் பேர் சொல்லாமைக்கு; (குருகூர்நம்பி) ஆழ்வாரையுமுகந்து அவருக்கு ஆச்ரயணீய வஸ்துவையும் உகக்கும்படியன்றிறே ஆழ்வாருடைய பூர்த்தியிருக்கும்படி.

(பாவினின்னிசை) பாவிலே பூண்ட இனியவிசை; ஐச்வர்யத்தை அல்பாஸ்திரமென்று கழித்து, ஸ்திரமான ஆத்மப்ராப்தியை அபுருஷார்த்தமென்று கழித்து, ஸ்திரமுமாய் பரமபோக்யமுமான பகவத் ப்ராப்தியை ப்ராப்யத்தில் ப்ரதமாவதி என்றுகழித்து, இதில் சரமாவதி யான ஆழ்வாரையும் உத்தேச்யரன்று என்றுகழித்து, அவரோடு ஸம்பந் தித்த விஷயத்தையும் ரஸாச்ரயமன்று என்றுகழித்து, அத்தோடு ஸம்பந் தித்த இசையே எனக்கு உத்தேச்யமென்கிறார். ‡"தெய்வத்தண்ணந் துழாய்த் தாராயினும் தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டுவீசுமினே" இத்யாதியிற்படியே பகவத்ஸம் பந்தம் போகப்போக நிறம்பெறுகிறபடி. (பாடித்திரிவனே)ரஸாயநஸேவை பண்ணித் திரிவாரைப்போலே. இதுகாணும் இவருக்கு தாரகமாய் ஸஞ்சரிக்கப்பண்ணுகிறது.

இரண்டாம்பாட்டு

நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.



‡ திருவிரு-53.

## நம்பிள்ளை ஈடு.

அவ:— இரண்டாம்பாட்டு. ஆழ்வாருடைய பாசுரமே தமக்கு தேஹயாத்ரையாம்படி தாரகமானபடி சொல்லுகிறார்.

வ்யா:—(நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்) "என்றக்காலண்ணிக்கு மமுதூறும்" என்று ப்ரஸ்துதமானது தன்னையே அநுபாஷிக்கிறார். (நாவினால் நவிற்று) மநஸ்ஸஹகாரமில்லையென்கிறார். 101. **"प्रत्यक्षे गुरवः स्तुत्याः"** (ப்ரத்யக்ஷே குரவஸ்ஸ்துத்யா:) என்கிறபடியே பகவத்விஷயத்திலுபகாரகரை ஸ்தோத்ரம் பண்ணக்கடவதைக்கொண்டு அந்தக் கார்யம் கொள்ளப்பெற்றேனென்கிறாரென்னவுமாம்; ஈச்வரஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கொள்ளப்பெற்றேன் நானொருவனுமேயென்கிறார்.

(இன்பமெய்தினேன்) §"வீவிலின்பம்மிகவெல்லை நிகழ்ந்தனன்மேவியே" என்று ஆழ்வார் அவ்விஷயத்தில் பெற்றபேற்றை இவ்விஷயத்தில் உக்திமாத்ரத்தாலே பெற்றேனென்கிறார். ஒரு கரணத்தாலே ஒரு பாபத்தைப்பண்ணினால் ஒருகல்பம் நரகாநுபவம்பண்ணி, கல்பாந்தரமும் நரகாநுபவம் பண்ணவேண்டும்படியாயிருப்பது; அப்படிக்கு யோக்யமான கரணத்தாலே நிரதிசயாநந்தத்தை ப்ராபித்தேன்.

(மேவினேனவன் பொன்னடி) ஆழ்வாருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளே உத்தேச்யமாகப்பொருந்தினேன்; ப்ராபித்தேனென்கை; எங்ஙனே பொருந்தினபடியென்னில், மெய்ம்மையே பொருந்தினேன்; இவரை உபகாரககோடியிலேயாக்கி வேறொன்று உத்தேச்யமாய்க் கிட்டினவாறே அதிலே தோள்மாறும்படியன்றிக்கே ஆழ்வார் திருவடிகளே உத்தேச்யமாகப் பொருந்தினேன்; இங்கிருக்கும் நாள் அஜ்ஞாதஜ்ஞாபகத்தாலே உபகாரகராகவும் பகவத்விஷயத்துக்குப் புருஷகாரமாகக் கொண்டும், அவ்வருகே சென்றால் 103 **"यत्र पूर्वे साध्याः सन्ति देवाः"** ( யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்திதேவா: ) என்கிறபடியே

---
§ திருவாய் 4-5-3.

ஸாத்யவிவ்ருத்திரூபத்தாலே உத்தேச்யராகவும் இவர் தம்மையே பற்றினேன்.

(தேவுமற்றறியேன்) ஆழ்வாரையொழிய வேறொரு ஆச்ரயணீய வஸ்து உண்டென்றறியேன். "மெய்ப்மையே" என்றவிடம் அந்வயத்தாலே சொன்னார். "தேவுமற்றறியேன்" என்கிறவிடம் வ்யதிரேகத்தாலே சொல்லுகிறார். "மற்றறியேன்" என்கிறது எத்தையென்னில்; கீழ்விட்டவற்றை எல்லாமென்கிறார். ஐச்வர்யமென்ன, ஆத்மலாபமென்ன, அவற்றைவிட்டு, பகவல்லாபத்தளவிலும் நில்லாதே அதினெல்லையான ஆழ்வாரளவும் போந்தாரானையாலே அவற்றையெல்லாம் நினைக்கிறார்.

(குருகூர்நம்பி) இவரையும்பற்றி வேறேயொரு வஸ்துவையும் பற்றும்படியோ இவருடைய பூர்த்தியிருப்பது? "குருகூர்நம்பிபா" என்றது கண்ணிநுண் சிறுத்தாம்பென்னுதல்; திருவாய்மொழியென்னுதல். திருவாய்மொழிதன்னில் "குருகூர்ச் சடகோபன்" என்றாரிறே. அவ்வழியாலேயாய்த்துத் திருவாய்மொழிதன்னையும் இவராதரிப்பது.

(பாவினின்னிசை) இயலோடேசேரப் புணர்ப்புண்டவின்னிசை. (பாடித்திரிவனே) உம்முடைய தேஹயாத்ரை நடப்பித்துப் போரும்படியென்னென்னில்; ப்ரீதிப்ரேரிதனாய்க் கொண்டு இவற்றைச் சொல்லி இதுவே தாரகமாக அத்தாலே ஸஞ்சரிப்பன். (பாடித்திரிவன்) / "நமன்தமர்தலைகள்மீதே நாவலிட்டுழி தருகின்றோம்" என்று என்னுடைய க்ருதிநிவ்ருத்தியைப் பண்ணவல்லாருண்டோ? என்றுமாம்.

இரண்டாம் பாட்டுக்கு நம்பிள்ளையீடு முற்றிற்று.

---

/ திருமாலை-1.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.

அவ:—இரண்டாம்பாட்டு. முதற்பாட்டில் ஆழ்வார் என்றால் தமக்கு ரஸிக்கிறபடி சொன்னார்; இப்பாட்டில் அவருடைய பாசுரமே தேஹயாத்ரையாம்படி தாரகமானபடியைச் சொல்லுகிறார்.

வ்யா:—(நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) "என்றக்காலண்ணிக்கும்" என்று ப்ரஸ்துதமானத்தை அநுபாஷிக்கிறார் அதிலுண்டான ஆதராதிசயத்தாலே; மநஸ்ஸஹகாரமில்லாத உக்திமாத்ரமடியாக நிரதிசயஸுகம் ப்ரயோஜநமானால் பின்னாட்டுகை தவிராதிறே. (நாவினால் நவிற்று) மநஸ்ஸஹகாரமில்லையென்கிறார். பகவத்விஷயத்திலுபகாரகரை ஸ்தோத்ரம் பண்ணக்கடவ நாவைக்கொண்டு அந்தக்கார்யத்தைக் கொள்ளப் பெற்றேனென்னவுமாம். 101 "प्रत्यक्षे गुरवः स्तुत्याः" (ப்ரத்யக்ஷே குரவஸ்ஸ்துத்யா:) என்னக்கடவதிறே. ஈச்வர ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கொள்ளப்பெற்றேன் நானொருவனுமே என்கிறார்.

---

அரு—இரண்டாம்பாட்டு; ஸங்கத்யர்த்தம் வ்ருத்தவர்த்திஷ்யமான கீர்த்தநம் (முதற்பாட்டிலித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆழ்வாருடைய போக்யதையையும் அநந்தரம் தத்ஸம்பந்தத்தையுடைய ப்ரபந்தமே தமக்கு தாரகமென்பதையும் சொல்லுகிறாரென்று கருத்து. (அவருடைய பாசுரம்) என்றது—திருவாய்மொழியும் கண்ணிநுண் சிறுத்தாம்பும். ஸம்பந்த ஸாமந்ய ஷஷ்டியாகையாலே. தேஹயாத்ரைம்யாபடி என்றதை விவரிக்கிறார் (தாரகமானபடியை) என்றவிதில்.

"பாடித்திரிவனே" என்றதைப்பற்ற, "என்றக்கால்" என்றத்தோடு புநருக்தமன்றோ என்னவருளிச்செய்கிறார் (என்றக்காலித்யாதி) ஆதராதிசயத்துக்கு அடி அருளிச்செய்கிறார் (மநஸ்ஸஹகாரமித்யாதி) (நிரதிசயஸுகம்) என்றது "என்னப்பனில் அண்ணிக்கும" என்றத்தைக் கடாக்ஷித்து. "நவிற்று" என்று சொல்லுகையாலே நா அர்த்த ஸித்தமாயிருக்க, "நாவினால்" என்று சொல்லுவானென்னென்ன அருளிச் செய்கிறார், (மநஇத்யாதி) நைரபேக்ஷ்யம் சொல்லுகையன்றிக்கே "நாவினால்" என்று ச்லாக்யார்த்தமென்கிறார் (பகவதித்யாதி).

(இன்பமெய்தினேன்) /"வீவிலின்பம்மிகவெல்லை நிகழ்ந்தனன் மேவி" என்று ஆழ்வார் அவ்விஷயத்தில் பெற்றபேற்றை இவ் விஷயத்திலே பெற்றேன் என்கிறார். †"சிந்தையாலும் சொல் லாலும் செய்கையினாலும்" என்று கரணத்ரயத்தாலும் அவ் விஷயத்தை ஆச்ரயித்தவர் பெற்றபேற்றை உக்திமாத்ரத்தாலே பெற்றேன். அநாதிகாலம் நரகத்திலே ஸ்ருஷ்டியும் நரகத்திலே ஸம்ஹாரமுமாம்படி பாபத்தைப் பண்ணிப்போந்த நாவாலே நிரதி சயாநந்தத்தை ப்ராபித்தேனென்னவுமாம்.

(மேவினேனவன் பொன்னடி) ஆழ்வாருடைய ஸ்ப்ருஹணீய மான திருவடிகளை உத்தேச்யமாகப் பொருந்தினேன். 104"க்ஷிபாமி" (க்ஷிபாமி) என்று ஈச்வரனும் கூட உபேக்ஷித்த தசையிலே

---

உபகாரகனை ஸ்துதிக்க வேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (ப்ரத்யக்ஷேத்யாதி) நாப்படைத்த ப்ரயோஜநம் பெற்றவர்கள் வேறில்லையோவென்ன "விசித்ரா தேஹஸம்பத்தி:" இத்யாதி வசநத்தை உட்கொண்டருளிச்செய்கிறார் (ஈச்வரேத்யாதி.) நாவினால் நவிற்று இன்பம்பெற்றாருண்டோவென்ன "இசை மாலைகளேத்தி மேவப் பெற்றேன்" என்றதைக் கடாக்ஷித்து "நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்" என்று ஸமுதாய தாத்பர்யமருளிச்செய்கிறார். (வீவிலின்ப மித்யாதி) கீழ் உக்திமாத்ரத்தால்வந்த ஆநந்தம் ஆழ்வாருக்கு ஸம மென்றருளிச்செய்து அவருக்குக் க்ரணத்ரயம் வேண்டிற்று. இவருக்கு ஒன்றேயமைந்ததென்று தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (சிந்தையாலு மித்யாதி.) "நாவினால்" என்றதுக்கு நைரபேக்ஷ்ய ச்லாகாத்யோதக மன்றிக்கே தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (அநாதிகாலமித்யாதி.)

அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரத்திலிருக்கிற நாளெல்லாம் ஈச்வர னுபேக்ஷித்தானென்றும் அவ்வளவில் ஆழ்வார் தம்மைக்கடாக்ஷித்தாரென் றும் திருவுள்ளமாகக்கருதி தாத்பர்யகதநமுகேந கீழ்வாக்யவிவரணம் (க்ஷிபாமீத்யாதி) பரமகாருணிகராகையாலும் அநாதியான ஸம்ஸாரத்தில் யாத்ருச்சிகாதிகள் ஸம்பாவிதங்களாகையாலும் சேதநருக்கு "க்ஷிபாமி" என்று அவன்சொன்னது அஹ்ருதயோக்தியாய், அச்சமுறுத்தினானித் தனையென்று திருவுள்ளம்பற்றி (உபேக்ஷித்ததசை) என்றது.

---

/ திருவாய் 4-5-3. † திருவாய் 6-5-11.

விஷயீகரித்த ஆழ்வாருடைய விலக்ஷணமான திருவடிகளோடே பொருந்தப்பெற்றேன். நீர் செய்ததிதுவாகில் பேற்றிலுறுதிப் பாடிருந்தபடி யென்னென்ன; (மெய்ம்மையே மேவினேன்) உபகாரக விஷயத்திலே நிற்கிறவளவிலே வேறொரு விஷயம் உத்தேச்யமாய், அது கிட்டினவாறே அதிலே தோள்மாறும்படி யன்றிக்கே ஐஹிகாமுஷ்மிகங்களிரண்டும் ஆழ்வார் திருவடிகளேயாகப் பொருந்தினேன். இங்கிருந்தநாள் அஜ்ஞாதஜ்ஞாபநத்தாலே உபகாரகராகவும் பகவல்லாபத்துக்குப் புருஷகாரமாகவும், நித்ய விபூதியில் 103 "यत्र पूर्वे साध्याः सन्ति देवाः" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:) என்கிறபடியே ப்ராப்யமாகவும் இவர் தம்மையே பற்றினேன். ஆளவந்தார் 105 "अत्र परत्र चापि" (அத்ர பரத்ர சாபி) என்கைக்குமடி இவரிறே.

(தேவுமற்றறியேன்) ப்ராப்யமும் ப்ராபகமுமான வேறொரு வஸ்துவுண்டென்றிரேன். "மெய்ம்மையே" என்றவிடம் அந்வயத்தாலே சொன்னார், "தேவுமற்றறியேன்" என்று வ்யதிரேகத்

---

உபகாரகரென்று ஆழ்வாரை நீர் பற்றினீராகிலும் உமக்குப் புருஷார்த்தமேதென்கிற சங்கையையநுவதித்து நான் இதுவரை உபகாரகத்வேந பற்றி வேறு பலங்களிலே போகிறவனன்றிக்கே நியதமாக ஸகலபுருஷார்த்தங்களும் ஆழ்வார் திருவடிகளாகவே பற்றினேனென்கிறாரென்றருளிச்செய்கிறார் (நீர் செய்ததித்யாதி) (மெய்ம்மையே) ஸத்யமாக. "மெய்ம்மை" என்றத்தோடு "அவன் பொன்னடிமேவினேன்" என்றத்தை அநுஷங்கித்தாரென்று கண்டுகொள்வது. 2 (ஸர்வம் யதேவ நியமந) என்கிறபடியே ஸகல பலங்களும் திருவடிகளேயென்று கீழருளிச்செய்து ப்ராப்ய ப்ராபகங்களாக யோஜநாந்தரம் (இங்கிருந்தவித்யாதி). இத்தைப்பற்றியிறே அபியுக்தருமருளிச்செய்தாரென்று ப்ரமாணம் காட்டுகிறார் (ஆளவந்தாரித்யாதி)

மெய்ம்மையென்றது இரண்டாம் யோஜனையில் ப்ராப்யமும் ப்ராபகமுமென்று சொல்லியிருக்க, புந: "தேவுமற்றறியேன்" என்று சொல்லவேணுமோ என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் (மெய்ம்மையே என்றவிடமித்யாதி). "ஸகலபலங்களும் ஆழ்வார் திருவடிகளாகப் பற்றினேன்" என்ற ப்ரதமயோஜநாநுகுணமாகத் தாத்பர்யாந்தர

தாலே சொல்லுகிருரிறே தம்முடைய அத்யவஸாயம் தோற்றுகைக்காக. "மற்றறியேன்" என்று புருஷார்த்தாந்தரங் களோபாதி பகவத்விஷயத்தையும் கழிக்கிருரிறே. அதினெல்லை யான ஆழ்வார் திருவடிகளளவும் வந்தவராகையாலே. ஶாஸ்த்ர வாஸனையாலேயாதல், ஆசார்யோபதேசத்தாலேயாதல் சொல்லு கிருரல்லர். உபகாரகரான ஆழ்வார் திருவடிகளில் பாவபந்தத் தாலே சொல்லுகிருர்.

(குருகூர்நம்பி) இவரையும் பற்றி வேருெரு விஷயத்தையும் பற்றவேண்டும்படியோ இவருடைய பூர்த்தியிருப்பது; "குருகூர் நம்பிபா" என்றது ஆழ்வார் திருவாயாலே அருளிச்செய்த தென்றுய்த்து திருவாய்மொழிதன்னையுமாதரிப்பது. அதிலே "குருகூர்ச் சடகோபன்" என்றருளிச்செய்தாரிறே. அவ்வழி யாலேயாயிற்று திருவாய்மொழியிலாதரம். ஆழ்வார் ப்ரதிபாத்ய

---

மருளிச்செய்கிருர் (மற்றறியேனித்யாதி). முந்தினயோஜனையில் ப்ராப்ய ப்ராபக ஸாதாரண்யேந "தேவு" என்று ஸமாச்ரயணீயவஸ்துவைச் சொல்லுகிறது; இரண்டாம் யோஜனையில் ப்ராப்யவஸ்துவைச் சொல்லு கிறது. சாஸ்த்ரங்கள் எம்பெருமானை ப்ராப்யப்ராபகங்களாகச் சொல்லி ஆசார்யோபதேசமுமப்படியேயிருக்க இவரிப்படி கழிக்கைக்கு ஹேதுவே தென்ன அருளிச்செய்கிருர் (சாஸ்த்ரேத்யாதி).

நீர் ஆழ்வாரையொழிய "தேவுமற்றறியேன்" என்றிருக்கிறவராகில் * முகில்வண்ணனடிமேல் சொன்னசொல் மாலையாயிரமான திருவாய் மொழியை அப்யஸிப்பானென்னென்கிற சங்கையிலே அருளிச்செய்கிருர் (இவரையென்று துடங்கி திருவாய்மொழியிலாதரமென்னுமளவும்) (பூர்த்தியிருப்பது) என்றவநந்தரம் "ஆகையாலே" என்றுகூட்டி "ஆதரிப் பது" என்றத்தோடு அந்வயிப்பது. ஆழ்வார் திருவாயாற்சொன்னதுக்கு ப்ரமாணம் (அதிலேயித்யாதி). இதுக்கு ¶ "பரனடியேற் குருகூர்ச்சட கோபன்சொல்" இத்யாதிகளிலே நோக்கு. § "என்முன்சொல்லும்" என்றும் / "தன்னைத்தானே துதித்து" என்றும் எம்பெருமான் சொல் லாகத்தோற்றுகையாலே ஆழ்வார் சொல்லென்று அர்த்தம் சொல்லக் கூடுமோவென்ன, குருகூர்நம்பி விஷயமான பாவென்றர்த்தாந்தரமருளிச் செய்கிருர் (ஆழ்வாரித்யாதி).

¶ திருவாய் 1-1-11. § திருவாய் 7-9-2. / திருவாய் 10-7-2.

ராகையாலே "குருகூர்நம்பிபா" என்று கண்ணிநுண்சிறுத்தாம்பைச் சொல்லுகிறதென்னவுமாம்.

(பாவினின்னிசை) பாவோடே கூடப் புணர்ப்புண்ட இனிய விசை. (பாடித்திரிவனே) உம்முடைய தேஹயாத்ரை நடத்திப் போரும்படி யென்னென்ன, ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டுசொல்லி இதுவே தாரகமாக ஸஞ்சரிப்பவன். "உண்டு திரிவன்" என்னுமா போலே "பாடித்திரிவன்" என்கிறார். / "நமன்றமர்தலைகள் மீதே நாவலிட்டுழிதருகின்றோம்." என்னுமாபோலே. இதுவே யாத்ரையாயிருக்கிற என்னுடைய கதிநிவ்ருத்தியைப் பண்ண வல்லாருண்டோ என்றுமாம். ப்ராக்தநகர்மபலாநுபவத்தைப் பண்ணுவிக்கும் யமன் கதிபங்கம்பண்ணவோ? அதுக்கடியான விஷயாந்தரங்கள் கதிபங்கம்பண்ணவோ?

இரண்டாம் பாட்டு பெரியவாச்சான்பிள்ளை
வ்யாக்யானம் முற்றிற்று.

---

பாவென்று சந்தஸ்ஸையுடைத்தான ப்ரபந்தமாய், இதுக்குச் சேர்ந்து அநுரூபமாய் மநோஹரமான காநமென்றர்த்தம் அருளிச்செய்கிறார் (பாவோடித்யாதி) "பாடித்திரிவன்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். பாடுகையை திரிகைக்கு ஹேதுவாக்கி தாரக்மாகவும் பாடுகையாலே அப்ரதிஹதஸஞ்சாரமாகவும், அதில் முந்தினதை சங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் (உம்முடையவித்யாதி); இரண்டாம் தாத்பர்யம் (நமன்றமரித்யாதி). (நமன்) யமன். தமர்–அவனுடைய தூதர். நாவலிடுகை – ஜயித்தவர்கள் தோற்றவர்கள் வாசலிலே சென்று அறை கூறுகை. (உழிதருகை) ஸஞ்சரிக்கை. (யாத்ரையாக) வ்யாபாரமாக. கதிநிவ்ருத்தியைப் பண்ணவல்லாருண்டோ என்றத்தை விவரிக்கிறார் (ப்ராக்தநேத்யாதி) (அதுக்கு) கர்மத்துக்கு.

இரண்டாம் பாட்டு
வ்யாக்யான அரும்பதம் முற்றிற்று.

---

/ திருமாலை-1.

## அழகியமணவாளப்பெருமாள் நாயனுர் வ்யாக்யாநம்

——(o)——

அவ:—இரண்டாம் பாட்டு. (நாவினுலித்யாதி) ஆழ்வார்கள் பகவத்விஷயத்திலே ஆசார்ய ப்ரதிபத்திபண்ணிப்போந்தார்கள்; இவர் ஆசார்யவிஷயத்திலே பகவத்ப்ரதிபத்திபண்ணிப் போருகிறவராய்த்து. பகவத்விஷயத்திலும் ஆழ்வாருக்குண்டானவாசி:—
45 **"यदि शक्नोषि गच्छ त्वमतिचञ्चलचेष्टित। इत्युक्त्वाथ निजं कर्म सा चकार कुटुम्बिनी"** (யதி ஶக்நோஷி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித। இத்யுக்த்வாத நிஜம் கர்ம ஸா சகார குடும்பிநீ) என்கிறபடியே இடைச்சி கட்டி "வல்லையாகில் நான் கட்டினகட்டை அவிழ்த்துப்போய்க் காண். உன் துருதுருக்கைத் தனத்தாலே அறப்பட்டதீ." என்று கையாலும் வாயாலும் கட்டி, கறப்பன கடைவன குவாலாகையாலே பெரிய திருநாளிலும் ஸந்த்யாவந்தனம் முட்டாமல் நடத்துவாரைப்போலே அவள் தன் கார்யத்திலே போந்தாளென்று சொல்லுகையாலே, ஓரபலைகட்ட அது அவிழ்க்கமாட்டாமலிருந்தான். கட்டினவர்களை இரங்கி அவிழ்க்க வேணு

---

அரு:—இரண்டாம்பாட்டு. "தேவுமற்றறியேன்" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிருர் (ஆழ்வார்களித்யாதி) ஆழ்வார்கள் பகவத்விஷயத்தில் ஆசார்யத்வ ப்ரதிபத்திபண்ணிப் போருகைக்குத் தாத்பர்யம் "அறியாதன வறிவித்தவத்தா" என்கிறபடியே ஈச்வரனே அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணுகையாலே; இவர் ஆழ்வாரை ஈச்வரப்ரதிபத்திபண்ணுகைக் கடிகுண ஸாம்யத்தாலே யென்று கருத்து. கீழிற்பாட்டில் பகவத்விஷயத்திலும் ஆழ்வாருக்குண்டான வாசி சொல்லிற்று. அதாவது ஆழ்வாரநுஸந்தித்து ஈடுபட்டவபதாநத்தை அநுஸந்தியா நிற்கச்செய்தேயும் அதில் காவ் தாழாதே ஆழ்வாருடைய போக்யதை அதிசயித்திருக்குமென்று, அத்தை அருளிச்செய்கிருர் (யதிசக்கோஷியென்று துடங்கி ஆழ்வாருடைய போக்யதையிலே நின்றவராய்த்தென்னு மளவும்). (அறப்பட்டதீ) என்றது அறப்பட்டேனென்றபடி. அதாவது மிகவும் நொந்தேனென்றபடி. (கையாலே கட்டினது) என்றது "ப்ரத்யபத்நாதுலூகலே" என்றதைக்கடாக்ஷித்து. (கறப்பன கடைவனகுவாலாகையாலே) என்றது குடும்பிநீ என்றதைக் கடாக்ஷித்து.

மென்றிறே அவன் நினைவு. அப்படியே ஆழ்வாரும் இவனுடைய ஸௌசீல்யகுணத்தாலே கட்டுண்டு, "எத்திறம்" என்று போக மாட்டாமலிருந்தார். இவர் அப்படியன்றிக்கே ஆழ்வாரீடுபட்ட அபதாநத்தை அநுஸந்தித்திருக்கச்செய்தேயும் அதில் ஆழங்கால் படாதே அத்தைவிட்டு ஆழ்வாருடைய போக்யதையிலே நின்றவராய்த்து.

கீழ்ப்பாட்டிலே "நண்ணித்தென் குருகூர்நம்பி யென்றக் காலண்ணிக்கு மமுதூறு மென்நாவுக்கே" என்று ஆழ்வார் பக்கல் ஸ்ம்ருதிஸாரஸ்யத்தையும் ஸங்கீர்த்தந ஸாரஸ்யத்தையும் சொல்லக்கேட்டவர்கள், நாட்டாரடைய பகவத்விஷயத்தையே ஸ்மர்த்தவ்யமாகவும் ஸங்கீர்த்தநீயமாகவும் சொல்லாநிற்க, நீர் ஆழ்வாரை இவை இரண்டுமாக அநுஸந்திப்பானென்? பகவத் விஷயத்திலேயும் அந்வயிக்கப் பார்த்தாலோ வென்ன, அதுக்கு இப்பாட்டாலே உத்தரம் சொல்லுகிறார்.

தாந்தாம் பற்றின விஷயத்தைவிட்டுப் புறம்புசில போக வேண்டுவது அவ்விஷயம் இஹலோக ஸுகஜநகமல்லவாயாதல், பரலோக ஸுகத்துக்கு ஸாதநமன்றாயாதல், பற்றினவர்கள் இவ்விஷயத்தை யொழிய வேறே ஒரு ஸ்வாமியுண்டாக நினைத் திருத்தல், காலக்ஷேப விஷயமல்லாமையாலேயாதலன்றோ? அதில் எனக்கு இஹலோகஸுகஜநகருமாழ்வாரே; பரலோக ஸுகத்துக்கு ஸாதநமும் ஆழ்வாரே; எனக்கு ஸ்வாமியுமாழ் வாரே; காலக்ஷேப விஷயமும் ஆழ்வாரே; ஆனபின்பு பகவத் விஷயத்திலே அந்வயிக்க வேண்டுகிற தென்னென்கிறார்.

---

சங்காபூர்வகமாகப் பாட்டுக்கவதாரிகை (கீழ்ப்பாட்டிலித்யாதி) சொல்லுகிற உத்தரமேதென்ன அருளிச்செய்கிறார் (தாம்தாம் பற்றின விஷயமென்று துடங்கி) (இஹலோக ஸுகஜநகரு மாழ்வாரே) என்றது "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்றதைக் கடாக்ஷித்து. (பரலோக ஸுகஸாதநமும்) என்றது. "மேவினேனவன் பொன்னடி" என்றத்தைக் கடாக்ஷித்து. (ஸ்வாமியு மாழ்வாரே) என்றது "தேவுமற்றறியேன்" என்றதைக் கடாக்ஷித்து. (காலக்ஷேபவிஷயமு மாழ்வாரே) என்றது "பாவினின்னிசை" என்றதைக்கடாக்ஷித்து.

வ்யா:—(நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) நான் பெற்ற பேற்றைப் பார்க்கமாட்டீர்களோ? (நாவினால் நவிற்று) நவிற்றும் போது நாவேண்டியிருக்கச்செய்தே "நாவினால் நவிற்று" என்கைக்கடி மநஸ்ஸஹகாரம் வேண்டாதபடி. 106 "अवशेनापि यन्नाम्नि कीर्तिते" (அவஶேநாபி யந்நாம்நி கீர்த்திதே) என்கிறபடியே வாங்மாத்ரோச்சாரணத்தாலே ஆநந்தம் ஸித்தித்ததென்கைக்காக.

(நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) இப்படியேயன்றிக்கே பகவத்விஷயத்தில் புறம்புள்ள இந்த்ரியங்களை மநஸ்ஸிலே யடக்கி, மநஸ்ஸைக் கொண்டுபோய் ஶுபாஶ்ரயத்திலே வைத்து, பின்பு அநவரத பாவனையுண்டாய், அதுதானேபோய் ஸமாதி பர்யந்தமானாலிறே 107 "न विवेदात्मनो गात्रं तत्स्मृत्याह्लादसंस्थितः" (ந விவேதாத்மநோ காத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்தித:) என்று ஆநந்தம் ஸித்திப்பது. ஆழ்வார் தமக்கு ‡ "அடியை யடைந்துள்ளந்தேறி யீறிலின்பத்திருவெள்ளம் யான் மூழ்கினன்" என்று இத்தனை செய்யவேண்டிற்று. (இன்பப்) இன்ன வகைப்பட்ட இன்பமென்னாமையாலே பஹுவிதமான ஆநந்தத்தை, (எய்தினேன்) எய்தப்பெற்றேன். எனக்கு 48 "लब्ध्वानन्दी भवति" (லப்த்வாநந்தீ பவதி) என்னவேண்டிற்றில்லை. (நவிற்றின்பமெய்தினேன்) (எய்தினேன்) பகவத்விஷயத்தைப் பற்றினார்க்கு ஆநந்தம் காலாந்தரபாவி. இங்கு அப்படியன்றிக்கே எய்திவிட்டேன். (நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) அநவரத பாவனையாலும்

---

(நவிற்றும் போது நாவேண்டியிருக்க) என்றது நாவாலல்லது சொல்லவொண்ணாமையாலே, நவிற்றென்றபோதே நாவாலே சொன்னதும் ஸித்தமாயிருக்க "நாவினால்" என்று விசேஷிக்கிறதென்னென்றபடி. பொன்

ஈச்வரனைப் பெற்றாலொழிய ஆநந்தமில்லை. இங்கு உக்திமாத்ரத்தாலே ஆநந்தம் பெற்றேனென்கிறார் (லப்த்வாநந்தீபவதி [illegible] துடங்கி வாக்யத்வயத்தாலே). "எய்தினேன்" என்கிற பூதகாலத்துக் கர்த்தமருளிச்செய்கிறார் (பகவத்விஷயத்தை யென்று துடங்கி). நாவின்

---

‡ திருவாய் 2-68.

ஆநந்தமுண்டாக வேண்டிற்றில்லை. அநுபவத்தாலுமாநந்த முண்டாக வேண்டிற்றில்லை.

ஆனால் இப்போதன்றோ இந்த இன்பத்தை விரும்பினீர். ஶரீர வியோகஸமநந்தரம் பிறக்குமாநந்தஸித்திக்கு ஒரு ஸாதநத்தைப் பற்றவேணும். அதுக்கு ஸாதநமாக *லோகவிக்ராந்த சரணங்களை ஆச்ரயிக்கவேண்டாவோவென்ன, (மேவினேனவன் பொன்னடி) அதுவாகில் அதுக்கும் ஆழ்வார் தம்முடைய திருவடிகளை உபாயமாகப் பற்றினேன். (அவன் பொன்னடி) யாதொரு விஷயத்தை நாவினால் நவிற்றின்பமெய்தினேன், அவனுடைய திருவடிகளை; ப்ராப்யமானதுதானே ப்ராபகமுமாய்த்து. (அவன்பொன்னடி) அதுபோலே உலகமளந்த பொன்னடியாய் ஊர்ப்பொதுவாய் எல்லார்தலையிலும் இருக்குமதன்றிக்கே, இத்திருவடிகள் *த்ரைவித்ய வ்ருத்தஜநமூர்த்த விபூஷணமாயிருக்கும். வ்ருத்தஜநங்களாகிறார் உத்தரபாக நிஷ்டரானவர்கள். (பொன்னடி) நான் தொட்டுப்பரிமாறினாலும் தோஷம்வாராத திருவடிகள். (மேவினேன்) பகவத்விஷயத்தை ஆச்ரயிக்குமிடத்தில் §"நாகணை மிசைநம்பிரான் சரணேசரண் நமக்கென்று நாடொறுமேகசிந்தையனாய்" என்று வர்த்தமாந நிர்த்தேசம் பண்ணவேண்டிற்று. இங்கு அப்படியன்றிக்கே ஸக்ருத்ஸமாச்ரயணமமைந்தது.

---

மேவினேனென்கையாலே அநவரதபாவனையை வ்யாவர்த்திக்கிறது. நவிற்றென்கையாலே அநுபவத்தை வ்யாவர்த்திக்கிறது.

அவனென்றதுக்கு நாலு தாத்பர்யம் ப்ராப்யனானவனே ப்ராபகனானவனென்னுதல். ஸாதாரணனன்றிக்கே அஸாதாரணனென்னுதல். அபரோக்ஷ நிர்த்தேச்யனன்றிக்கே பரோக்ஷநிர்த்தேச்யனென்னுதல். நடுவொரு புருஷகாரம் வேண்டாதவனென்னுதல், ஆக நாலுதாத்பர்யம்.

(இங்கு அப்படியன்றிக்கே ஸக்ருத்ஸமாச்ரயண மமைந்தது) என்றதுக்குத் தாத்பர்யம் பகவத்விஷயத்தில் ப்ரபத்தி ஸக்ருத்தானாலும் அத்யவஸாயம் யாவத்ப்ராப்தி பண்ணவேண்டும், இங்கு ஆசார்யாபிமானமே உத்தாரகமாகையாலே அந்த நிர்ப்பந்தமில்லை யென்றபடி.

---

§ திருவாய் 5-10-11.

(அவன் பொன்னடிமேவினேன்) பகவத்விஷயத்திற்போலே 108 "त्वमेवोपायभूतो मे भव" (த்வமேவோபாய பூதோ மே பவ) 109 "त्वत्पादमूलं शरणं प्रपद्ये" (த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே) ‡"உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அபரோக்ஷித்து ஆச்ரயிக்க வேண்டாதபடி எங்கேனுமிருந்து ஆச்ரயிக்கலாம்படியான அவனுடைய திருவடிகளை. (அவன் பொன்னடி மேவினேன்) ஒரு புருஷகார புரஸ்ஸரமாகவன்றிக்கே தந்நிரபேக்ஷமாக ஆச்ரயித்தேன். இங்கே ஜீயர் வார்த்தையை அநுஸந்திப்பது. (மேவினேன்) அத்தோடே பொருந்திவிட்டேன். இனி வேறொருகாலிருக்கைக்கு இடமில்லாதபடி பொருந்திவிட்டேன். (நாவினால் நவிற்றின்பமெய்தினேன் மேவினேனவன் பொன்னடி) இத்தைப் பின்சென்றிறே ஆளவந்தாரும் ஆசார்ய விஷயத்தில் 105 "अत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयं" (அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம்) என்றது.

† எங்கேயிருந்தநுஸந்தித்தாலும் ஆசார்யாபிமாநமே உத்தாரகமென்கைக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (இங்கே ஜீயர் வார்த்தையை அநுஸந்திப்பது) என்று. (ஜீயர் வார்த்தை) என்றது ஜீயர் விஷயமான வார்த்தை யென்றபடி. அதாவது நஞ்சீயர் ஆச்ரமஸ்வீகாரம் பண்ணினவநந்தரம் அநந்தாழ்வான்கண்டு "வேர்த்தபோது குளித்து பசித்தபோதுஉண்டு பட்டர் திருவடிகளே சரணமென்று எங்கேயிருந்தாலும் ப்ராப்திக்குக் கண்ணழிவுண்டோ? ஆயிருக்க, கைங்கர்யத்துக்கு விரோதியாயிருப்பதொரு வேஷத்தைக்கொண்டு என்செய்தீரானீர்" என்றருளிச்செய்தாராம்.

(வேறொருகால்) ஈச்வரன் திருவடிகள். "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்கையாலே ப்ராப்யத்வமும் "மேவினேனவன் பொன்

† (பா) புருஷகாரம் வேண்டாவென்றதுக்கு ஸம்வாதமாகவோரைதிஹ்யமருளிச்செய்கிறார் (இங்கே ஜீயரித்யாதி) ஜீயர் வார்த்தையாவது, பட்டர் மேல்நாட்டுக்கெழுந்தருளுகிறபோது காடும் மலையும் கடந்து ஒரு புருஷகாரமின்றிக்கே மேல்விழுவதே யென்று நஞ்சீயர் ஈடுபட்டுச் சொன்னவார்த்தை.

‡ திருவாய் 6-10-10.

"மேவினேனவன் பொன்னடி" என்றீர். அந்த ஆச்ர யணத்தை 108"सा देवेस्मिन् प्रयुज्यतां" (ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்) என்கிறபடியே ஸர்வஸ்வாமியான ஈச்வர விஷயத்திலே ப்ரயோகிக்க வேண்டாவோ வென்ன, (தேவுமற்றறியேன்) நான் அப்படி யிருப்பதொரு ஸ்வாமியுண்டாக வ்யுத்பத்திபண்ணி வைக்கிலன்றோ வேண்டுவது? (தேவுமற்றறியேன்) தேவு அறியேன். ஆழ்வாரை யொழிய வேறறியேன். ஶாஸ்த்ரம் காட்டித்தந்ததன்றோ தைவ மாவது; அதுதானே 76 "आचार्यदेवो भव" (ஆசார்யதேவோ பவ) என்று விதித்ததே. (தேவுமற்றறியேன்) தேவதாவ்யுத்பத்தியுள்ள விடத்தேயன்றோ தேவதா ப்ரதிபத்தி உள்ளது. ஆகையாலே நான் தேவதையாக வ்யுத்பத்திபண்ணிற்று ஆழ்வாருக்கு மேற்பட இல்லை. ஆனால், என்னப்பனென்று கீழே பகவத்விஷயத்தை ஸ்வாமியாக அநுஸந்தித்தீரே யென்ன, அது ஆழ்வாராதரித்த விஷயமென்று ஆதரித்தேனித்தனைபோக்கி தேவதா ப்ரதிபத்தி பூர்வகமாகச் சொன்னேனன்று. 109 "अनन्यदैवत्वमियं क्षमा च" (அநந்யதைவத்வமியம் க்ஷமா ச) என்று அநந்ய தைவத்வத்தை யுடைய பிராட்டி பெருமாளுக்கு எடுத்துக் கைநீட்ட பெரிய பெருமாள்பாடுபுகுமாபோலே; இவ்வர்த்தம் நாங்கள் விச்வஸிக்கும் படி யென்னென்ன, (மெய்ம்மையே) இது ஸத்யமே. (மேவி னேனவன் பொன்னடி மெய்ம்மையே தேவு மற்றறியேன்) ஸ்ரீஶட கோபனைத் தலையிலே கொண்டிருந்தும் பொய்சொல்லுவாருண்டோ?

ஆனாலும் காலக்ஷேபத்துக்கு பகவத்விஷயத்தைப் பற்றிக் காலம் போக்கவேணுங்காணு மென்ன, (குருகூர்நம்பி பாவினின்

---

னடி மெய்ம்மை" என்கையாலே ப்ராபகத்வமும் சொல்லுகிறது. இத்தைப் பின் சென்றே ஆளவந்தாரும் "அத்ரபரத்ரசாபி" என்றருளிச்செய்தார். "அறியேன்" என்றபதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (தேவதா வ்யுத்பத்தியுள்ளவிடத்தே) என்று துடங்கி.

(ஒன்றிரண்டா யிருந்ததோ) என்றது திருமந்த்ரமும் த்வயமும். "பகவாந்" என்று ஜ்ஞாநதி குணபூர்த்தி சொன்னாப்போலே இங்கும் நம்பி யென்று ஜ்ஞாநாதி குணபூர்த்தியை அருளிச்செய்கிறார். அப்படி ஜ்ஞா

னிசைபாடித் திரிவனே) எனக்குக் காலக்ஷேப விஷயம் உங்களைப் போலே ஒன்றிரண்டா யிருந்ததோ? ஆயிரம் ப்ரகாரமில்லையோ? (குருகூர்நம்பி) கவிபாடுகைக் கீடாம்படி, 110 "**वाल्मीकिर्भगवानृषिः**" (வால்மீகிர்ப்பகவாந்ருஷி:) என்கிறபடியே பூர்ணரான ஆழ்வார். /"ஏற்கும் பெரும்புகழ்வானவரீசன் கண்ணன் றனக்கு ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்" என்கிறபடியே ஸ்துத்ய விஷயத்துக்குப் பரத்வஸௌலப்யபூர்த்தி; ஸ்தோத்ருவிஷயத்துக்கு ஜ்ஞாநபக்திபூர்த்தி. †*கண்டுகொண்டென் கண்ணிணையாரக் களித்திறே * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லிற்று. (இன்னிசை) பாதிரிகிறபோதே கூடக்கிளம்பின நல்லிசையை. (பாடி) அநுபவித்துக்கொண்டு பாடி. (குருகூர் நம்பி இன்னிசைபாடி) பகவத்ப்ரதிபாதக மென்றன்று இவர் திருவாய்மொழியைப் பாடிற்று. ஆழ்வாரருளிச்செய்ததென்று யிற்று. s"உயர்வறவுயர் நலமுடையவன்" §"வண்புகழ் நாரணன்" ‡"மலர்மகள் விரும்பும் நமரும்பெறலடிகள்" ||"என் செய்ய தாமரைக்கண்பெருமானார்" என்று பாடாநிற்கச்செய்தேயும் பகவத் விஷயத்தோடு உறவற்றிறே இவர் பாடுகிறது.

(திரிவனே) அங்குப்போலலன்றே 111 "**एतत्साम गायन्नास्ते**" (ஏதத் ஸாம காயந்நாஸ்தே) என்றிருக்கவேண்டுவது? இங்கு அப்படி யன்றிக்கே விச்ருங்கலமாகத் திரியாநிற்பன். (திரிவனே) இது

---

நாதி குணபூர்த்தி உண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஏற்கும்பெரும் புகழென்று துடங்கி). சந்தைக்குப் பொருளருளிச்செய்கிறார் (ஸ்துத்ய விஷயத்துக்கென்று துடங்கி). ஜ்ஞாநபக்திகளுண்டென்கைக்குப் பின்னையு மொருப்ரமாண மருளிச்செய்கிறார் (கண்டுகொண்டென் கண்ணிணையென்று துடங்கி.) (பா–திரிகை) பா–சந்தஸ்ஸு கூடுகை. (திரிகிற போதே) உண்டாகிறபோதேயென்றபடி.

பகவத்ப்ரதிபாதகமன்றே திருவாய்மொழி. அத்தை இவர் கால க்ஷேபத்துக்காக அநுஸந்திக்கிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (பகவத் ப்ரதிபாதகமென்றன்று) என்று துடங்கி. உக்தத்தை விவரிக்கிறார்

---

/ திருவாய் 3-9-11. † திருவாய் 9-4-9. s திருவாய் 1-1-1.
§ திருவாய் 1-1-10. ‡ திருவாய் 1-3-1. || திருவாய் 1-4-2.

எனக்குக் காலயாத்ரை. ஆகையாலே ஸுகபூதரும் ஸாதநபூதரும், ஸ்வாமியும் காலக்ஷேபவிஷயமும் எனக்கு ஆழ்வாரே யென்று பகவத்விஷயத்தோடே அந்வயிக்கத் தேடினவர்களுக்கு உத்தரம் சொன்னாராய் நின்றது.

இரண்டாம் பாட்டு வ்யாக்யாநம் முற்றிற்று.

---

(உயர்வற வுயர்நலமென்று துடங்கி) அவனுடைய கல்யாண குணங்களையும் ஸ்ரிய:பதித்வத்தையும் விக்ரஹ வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தியா நிற்கச்செய்தேயும் "தேவுமற்றறியேன்" என்றிருக்கையாலே பகவத்விஷயத்தோடு உறவற்றிருப்பவராகையாலே ஆழ்வாரருளிச்செய்ததை இட்டநுஸந்திப்பரென்றபடி.

இரண்டாம்பாட்டு அரும்பதம்
முற்றிற்று.



## மூன்றாம்பாட்டு

3. திரிதந்தாகிலும் தேவபிரானுடைக்
கரியகோலத் திருவுருக்காண்பன்நான்
பெரியவண் குருகூர்நகர் நம்பிக்கா
ளுரியனாயடியேன்பெற்ற நன்மையே.

**பதவுரை:—** திரிதந்தாகிலும்-(ஆழ்வாரை விட்டு) மீண்டாகிலும், தேவபிரானுடை—நித்ய ஸூரிகளுக்குத்தலைவனான எம்பெருமானுடைய, கரிய—(நீலமேகம்போற்) கறுத்ததாய், கோலம்—அழகியதான, திருவுரு—திவ்ய ரூபத்தை, நான் காண்பன்—நான் ஸேவிப்பேன்; பெரியவண் குருகூர்நகர் நம்பிக்கு — பெருமையும் ஔதார்யமுமுடைய ஆழ்வார்க்கு, உரிய ஆள் ஆய்—அநந்யார்ஹ சேஷபூதனாயிருந்துவைத்து, அடியேன் பெற்ற நன்மை—அடியேன் பெற்றபேறு இது காணீர்.

# நஞ்சீயர் வ்யாக்யாநம்

அவ:—மூன்றாம் பாட்டு. ஆழ்வாருகந்த விஷயமென்று உகக்கிறார்

வ்யா: —(திரிதந்தாகிலும்) 46"**न च पुनरावर्तते**"(ந சபுநராவர்த்ததே) என்கிறது பகவத்விஷயத்தையிறே; அத்தை முதலடியாகக்கொண்டு முடிந்த நிலத்தளவிலேபோனால் போனவழியெல்லாம் மீளவேண்டும் படியிறே ஆழ்வார் திருவடிகளில் தமக்குண்டான பாரதந்த்ர்யமிருக்கும்படி.

(தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன்நான்) நித்ய ஸூரிகளுக்குப் படிவிடும் வடிவுகாணும் இவர் வேண்டாவென்கிற விஷயமிருக்கும்படி. இவ்வளவும் இவர்க்கு உத்தேச்யராகப் பெற்றிலோமாகிலும் உத்தேச்யருக்கு உத்தேச்யராகப் பெற்றோமிறே. 112 "**पाणौ गृहीत्वा विदुरं सात्यकिञ्च महायशाः। ज्योतींष्यादित्यवद्राजन् कुरून् प्रच्छादयन् श्रिया**" (பாணௌ க்ருஹீத்வா விதுரம் ஸாத்யகிஞ்ச மஹாயஶா:। ஜ்யோதீம்ஷ்யாதித்யவத் ராஜந் குரூந் ப்ரச்சாதயந் ச்ரியா) என்கிறபடியே நெஞ்சால் பொருந்தாமையன்றிக்கே கண்ணால் காண்கையும் மிகையாயிருக்கிறபடி. 113 "**तरुणौ रूपसंपन्नौ**" (தருணௌ ரூபஸம்பந்நௌ) என்றிறே முறைப்படுவார் வார்த்தையும்; விஷயமிருந்தபடி பேசவேணுமிறே.

(பெரியவண் குருகூர்நகர் நம்பிக்கு) ஸர்வநிரபேக்ஷரான ஆழ்வாருக்கு. ஆழ்வாரொருவர்க்குமிறே ஈச்வரன் மயர்வறமதிநல மருளிற்று. இவர் ஜகத்துக்காக மயர்வறமதிநல மருளிற்றிறே. இவரையும் காட்டித்தரு மூராகையாலே வண்மையின் மிகுதி சொல்லுகிறது. விசேஷஜ்ஞரடங்கத் திரண்டவூரிறே. அங்குத்தைக்கு நிர்வாஹகரான பூர்த்தியு முண்டிறே இவர்க்கு; தாம் சொல்லும்போதும் I "பெரியவண்குருகூர் வண் சடகோபன்" என்றிறே சொல்லுவது; இவருடைய நாராயணத்வமிருக்கிற படி. (ஆளுரியனு யடியேன்பெற்றநன்மையே) "அடியேன்" என்கையாலே இவருடைய சதுர்த்தியிலர்த்தத்தைக் காட்டுகிறது. அதாவது சேஷி உகந்ததை உகக்குமதிறே கைங்கர்யத்தினெல்லை நிலமாகிறது.

நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

## நம்பிள்ளை ஈடு

அவ:—மூன்றாம் பாட்டு. (திரிதந்தாகிலும்) "தேவுமற்றறியேன்" என்றார்கீழ். ஆழ்வார்பற்றின விஷயமென்று அவ்வழியாலே பற்றுகிறார். கிடந்தானை கண்டேறுமாபோலே தந்தலையாலே வருமதிறே தவிர்த்துக்கொண்டது. / "தங்கள் தேவரை வல்ல பரிசுவருவிப்பரேல்" என்று அத்தலையாலே வருமது தவிர்த்துக்கொண்டிலரே. ஶூர்ப்பணகையைப்போலே வழியல்லா வழியே வருமதையிறே தவிர்த்தது; ஆழ்வார் தலையாலே வருமது தவிர்ந்திலரே. 21"भवतः परमो मतः"(பவத: பரமோ மத:) என்றுகேட்க 22 "धर्मोऽधिकतमो मतः"(தர்மோதிகதமோ மத:) என்று ஆசார்யருசி பரிக்ருஹீதமாய் வருமது ஏதேனுமாகிலுமமையும் இவர்க்கு.

குணமலைப்பாடியுடையார் காங்கேயர் தெற்கே எடுத்துவிடுகிற வளவிலே கோயிலாச்சான் இவருக்குச் சில அரிசியும் பச்சையும் வரக்காட்டினான். அப்போது ஸங்குசிதமாயிருக்கையாலே அபேக்ஷிதமாயிருக்குமிறே. இவ்வளவிலே உபகரித்தவனுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணவேணுமென்று நினைத்திருந்து பின்பொருநாளிலே கண்டு "எங்கள் பக்கலிலேயும் ஒருபகாரம் கொள்ளவேணும்"

I திருவாய் 8-1-11. / நாச்-திரு 13-10.

என்ன, "நான் முன்பேகொண்டேன்" என்ன, "என்னையறியாமல் எங்ஙனே கொண்டபடி" என்ன, "எங்களாசார்யர் கோயிலளவிலே நீரநுகூலித்தபடியை நினைத்து 'அவ்வேளாளனாலே இப்மண்பெற்றோம்' என்று பலகாலு மருளிச்செய்யக்கேட்டேன். இனிக்கொள்ளவேண்டுவதொரு உபகாரமில்லை" என்றான்.

த்ரிபுராதேவியார் வடகீழ்மூலைதத்வத்தையும் ஆச்ரயணீய வஸ்துவென்று நினைத்திரேனோ எம்பெருமானார் அங்கீகரித்தாரா கில்; அவரங்கீகரியாமையன்றோ அவரதேவதையாக நினைத்திருக் கிறதென்றார்.

வ்யா:—(திரிதந்தாகிலும்) திரிகையாவது மீளுகை; மீண்டா கிலும்; தரவென்று அதுக்கு அடையான சொல்லாய், திரிதந் தாகிலுமென்றது போனவழியெல்லாம் மீண்டாகிலும். அதாவது ஆழ்வார் புணர்ப்பைவிட்டு, ஆழ்வார் தம்மைவிட்டு, இவ்வளவும்வந்து.

(தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக் காண்பன்) இவர் தாம் நின்றநிலை குலைந்து பகவத்விஷயத்திலே நிற்கும்போதும் நித்யஸூரிகளுடைய யாத்ரையேயாய்த்திருப்பது. (தேவபிரான்) நித்யஸூரிகளுக்குத் தன்னை முற்றூட்டாக அநுபவிக்கக்கொடுத் துக்கொண்டிருக்கும் உபகாரகன். (தேவபிரானுடைக் கரியகோலத் திருவுரு) யோகப்ரஷ்டர் ஊர்வசியினுடைய வடிவழகை வர்ணிக்குமாபோலே சொல்லுகிறார். / 'கோலமேதாமரைக் கண்ணதோ ரஞ்சநநீலமே" என்று ஆழ்வார் சொல்லக்கேட்டிருக்கும் செவி யேற்றாலே சொல்லுகிறார். (காண்பன்) யோகப்ரஷ்டனுக்கு விஷயம் கண்ணுக்கு இலக்காமாபோலே ஆழ்வாரை விட்டால் பகவத் விஷயமாய்த்து இவர் காண்பது. (யான்) இப்படி ஸங்கலித்துப் போந்த நான்.

(பெரியவண் குருகூர்நகர் நம்பிக்கு) "நான் ஒன்றைப்பற்றி னேன்; ஒன்றைவிட்டேன்" என்று சொல்லலாம்படியோ ஆழ் வாருடைய பூர்த்தியிருப்பது? (ஆளுரியனாய்) உரியவடியனாய்.

/ திருவாய் 3-8-8.

உசியவடியார்க்குத் தந்தாமுக்கென்ன ஒரு ப்ரியாப்ரியங்களின் றிக்கே ஸ்வாமிபற்றினதைப்பற்றி அவன் கார்க்கடைக்கொண்டதைக் கார்க்கடைக் கொள்ளுமத்தனையாய்த்திருப்பது.

ஒருகாலத்திலே “எம்பெருமானார் ஸம்பந்தமுடையாரை உள்ளுப்புகவேண்டா” என்று தகைந்தார்களாய், அவ்வளவிலே ஆழ்வான் அங்கேசெல்ல, “இவருக்கு ஒருவருடன் விரோதமில்லை. நீர்புகலாகாதோ” என்ன, “ஆத்மகுணங்கள் மோக்ஷஹேது வாகவும் அநாத்மகுணங்கள் பந்தஹேதுவாகவும் நினைத்திருந் தோம். ஆத்மகுணங்கள் பந்தஹேதுவாய்த்தே” என்று, “எம் பெருமானாரோட்டை ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டு உள்ளுப் புகவேண்டா” என்று போந்தான்.

(அடியேன்) ஆழ்வாருடைய நீர்மையிலே தோற்று அடியே னென்கிறார். (பெற்ற நன்மையே) முன்புவிட்ட ஶப்தாதி விஷ யங்களோபாதி, ஆழ்வார் நன்றென்றுபற்றின பகவத்விஷயத்தைத் தீதென்னமாட்டாரே. ஆகையாலே “பெற்றநன்மையே” என் கிறார். ஆழ்வார் என்னை உகவாநிற்க நான் அவருகந்த விஷயத்தை உகவாதொழிவனோ?

மூன்றாம் பாட்டுக்கு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.



# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்

அவ:—மூன்றும் பாட்டில், 'தேவுமற்றறியேனென்ற புருஷார்த்தாந்தரங்களோடேகூட பகவத்விஷயத்தையும் காற்கடைக்கொள்ளக் கடவீரோ' என்ன, 'எனக்கு அபுருஷார்த்தமென்னுமளவாய்த்துக் காற்கடைக்கொண்டது; ஆழ்வாருகந்த விஷயமென்னும் இவ்வழியாலே தேவுமற்றறியிலுமறிவன் என்கிறார்.

ஶூர்ப்பணகையைப்போலே கிடந்தானைக் கண்டேறாதிறே தவிர்த்துக்கொண்டது. †"விட்டுசித்தர் தங்கள்தேவரைவல்ல பரிசுவருவிப்பரேலதுகாண்டும்" என்று பெரியாழ்வார் முன்னகப் பற்றும் ஆண்டாளைப்போலே ஆழ்வார் முன்னகப்பற்றும் பற்று தவிர்ந்திலரிறே. ஆழ்வார் முன்னக வருமுத்தேச்யதை தவிர்ந்திலரிறே. 21 "**भवतः परमो मतः**" (பவத: பரமோ மத:) என்றுகேட்க, 22 "**धर्मोऽधिकतमो मतः**" (தர்மோதிகதமோமத:) என்றாப்போலே ஆசார்யருசி பரிக்ருஹீதமாய் வருமது ஆதரணீயமிறே இவர்க்கு.

த்ரிபுராதேவியார், வடகீழ் மூலையில் தத்வத்தையும் ஆச்ரயணீயமென்று உடையவரருளிச்செய்தாராகில் எனக்கும் அதுவா

---

அரு.—மூன்றும் பாட்டு, கீழ்ப்பாட்டில் "தேவுமற்றறியேன்" என்றும், இப்பாட்டில் "தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக்காண்பன்" என்றும் சொல்லக்கூடுமோவென்கிற விரோத பரிஹாரார்த்தமாக சங்காந்தர பரிஹாரமுகேந ஸங்கதி அருளிச்செய்கிறார் (தேவித்யாதி). (பகவத்விஷயத்தையும்) தமக்கு உத்தேச்யரான ஆழ்வாருக்கு உத்தேச்யமான பகவத்விஷயத்தையும்.

காற்கடைக்கொண்ட ப்ரகாரத்தை த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார் (ஶூர்ப்பணகேத்யாதி). இத்தால் அத்வாரகமாகப் பற்றுகை அநர்த்த ஹேதுவென்று கருத்து. ஆழ்வாருகந்த விஷயமென்று பற்றின ப்ரகாரத்துக்கு அஞ்சு த்ருஷ்டாந்தங்களை அருளிச்செய்துகொண்டு விவரிக்கிறார் (விட்டு சித்தரித்யாதி—மீண்டுபோந்தாரென்னுமளவும்) கீழ் வாக்யவிவரணம் (ஆழ்வாரித்யாதி) (இவருக்கு) மதுரகவிகளுக்கு.

---

† நாச்-திரு 10-10.

மத்தனையன்றோ'' என்றாள். குணமலைப்பாடியுடையார் காங்கேயன் தெற்கே எடுத்துவிட்டபோது, பிள்ளையாத்தான் அங்கே குறைவறப் பச்சை சமைக்க, அவர் 'உமக்கு வேண்டுவதென்' என்று கேட்க, இவர் ''உம்மைக்கொண்டு பண்டேயுபகாரம் கொண்டோங்காணும்" என்ன, "ஆவதென்? என்னையறியாதே வருமதோர் உபகாரமுண்டோ" என்ன, "எங்களாசார்யர் 'நான் கோயிலில் மண்பெற்றது அவ்வேளாளனாலே' என்றருளிச்செய்யக் கேட்டிருந்தோம். இதுக்கு மேற்பட்டதோருபகாரமுண்டோ நமக்கு" என்றார்.

உடையவர் வெள்ளைசாத்தி எழுந்தருளின காலத்திலே "திருவடிகளில் ஸம்பந்தமுடையாரைப் பெருமாளைத் திருவடி தொழவிடவேண்டா" என்று விலக்க, ஆழ்வானை ''நீர் ஆரோனுக்கும் விரோதியோ? நீர்புக்குத் திருவடி தொழலாகாதோ?" என்ன, ''ஆத்மகுணம் மோக்ஷஹேது என்றிருந்தோம், அது பந்தஹேதுவானபின்பு எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளவோ?'' என்று மீண்டுபோந்தார்.

வ்யா:— (திரிதந்தாகிலும்) திரிதருகையாவது மீளுகை; மீண்டாகிலும். திரிதருதலென்றது அடைச்சொல்லாய், திரிதந்

---

(குணமலைப்பாடி) க்ராமவிசேஷம். (காங்கேயன்) என்று ஒரு வேளாளனுக்குப்பேர். (எடுத்துவிட்டபோது) ஸேனையைத் திரட்டிக்கொண்டு போனபோது. (பிள்ளையாத்தான்) ஒரு ஸ்ரீவைஷ்ணவர். (சமைக்க) அமைக்க. (மண்பெற்றது) திருமாளிகை லபித்தது. இவ்வைதிஹ்யத்தால் ஆசார்யாபிமதன் எனக்கு மபிமதனென்று தோற்றுகிறது.

(காலத்திலே) என்றவநந்தரம் "அவர்'' என்று சேஷம். (வேண்டாவென்று) என்ற வநந்தரம் ''கோயிலிலே க்ரிமிகண்டன் மனுஷ்யாள் விலக்க'' என்று கூட்டுவது; ஆத்மகுணமென்றது ஆரேனுக்கும் விரோதியாகாதபடியான சமமும்தமமும். இவ்விடத்தில், "ஆத்மகுணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்'' இத்யாதி வாக்யங்களநுஸந்தேயங்கள்.

திரிதந்தேனென்ன வேண்டியிருக்க, "திரிதந்து" என்று கடைக்குறைத்தலாயிருக்கிறது. கீழிரண்டு பாட்டிலும், என்னப்பனென்றும், பெருமாயனென்றும் (கண்ணனையும்?), நம்பியென்றக்காலென்று ஆழ்வாரையும்,

தாகிலும்- போனவழியெல்லாம் மீண்டாகிலும்; அதாவது திருவாய்மொழிப்பாவைவிட்டு, இசைகளைவிட்டு, ஆழ்வாரை விட்டு, அவருகந்த விஷயமென்று ப்ரதமாவதியிலேவந்து. (தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக்காண்பன்) (தேவபிரான்) நித்யஸூரிகளுக்குத் தன்னைமுற்றூட்டாக அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கு முபகாரகன். இவர் நின்றநிலைகுலைந்து பகவத்விஷயத்திலே நிற்கும்போதும் அதினெல்லையான நித்யஸூரிகள் யாத்ரைபாயாய்த்திருப்பது. (தேவபிரானுடைக் கரியகோலத்திருவுரு) நித்யஸூரிகளுக்குப்படி விடும் வடிவு காளமேகநிபச்யாமமாய், அழகு தான் ஒருவடிவு கொண்டாப்போலேயிறே இருப்பது.

†"கோலமே தாமரைக்கண்ணதோரஞ்சநநீலமே" என்று ஆழ்வார் வாய்புலத்தக் கேட்டிருக்கு மவராகையாலே பேசுகிறார். பரமயோகிகள் யோகம்கைபுகுந்தால் ஊர்வசியுடைய வடிவை வர்ணிக்குமாபோலே இவரும் இவ்விஷயத்தை வர்ணிக்கிறாரிறே.

---

"குருகூர்நம்பி பாவினின்னிசை" என்றவிடத்தில் திருவாய்மொழியையும் அதின் கானத்தையும் பற்றின க்ரமத்தைத் திருவுள்ளம்பற்றி மீண்டபடியை விவரிக்கிறார் (அதாவதித்யாதி). "கரியகோலத் திருவுருக்காண்பன்" என்கையாலே தேவபிரானென்றதுக்கும் தம்மை அநுபவிப்பித்தாப்போலே அவர்களை அநுபவிப்பித்தானென்று திருவுள்ளமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார்(நித்யஸூரிகளித்யாதி). இவர் மீண்டாராகில் "என்னப்பனில்" என்ற கண்ணனையன்றோ பற்றுவது. தேவபிரானென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவர் நின்றநிலை யித்யாதி). (நின்றநிலை) என்றது திருவாய்மொழி யிசையிலே நின்றநிலை யென்றபடி. அதினெல்லையான வென்றது பகவத்விஷயத்தின் மேலெல்லையான நித்யஸூரிகளநுபவிக்கு மநுபவமென்றபடி. அவர்களோடுகூடி அவர்களுகந்தவிஷயமென்றே பற்றுகை நித்யஸூரிகளநுபவிக்கும் வடிவு கரியதிருவுருவாயிருக்குமோவென்ன. அருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளுக்கித்யாதி). இறேயென்றது ப்ரமாண ப்ரஸித்தியைச் சொல்லுகிறது.

இதிருந்தபடி யென்னென்ன (கோலமேயித்யாதி) பகவத்ப்ரவணரன்றிக்கே யிருக்கிறதாம் அவன் திருமேனியை வர்ணித்துக் காணக்கடவே

---

† திருவாய் 3-8-8.

"கரியகோலம்" என்று ஸ்ப்ருஹை பண்ணும்படி ஆழ்வார் வர்ணிக்கக்கேட்டிருந்தபடியாலே.

(காண்பன்) ஸாக்ஷாத்கரிப்பன்; ஸாக்ஷாத்கரித்தநுபவிக்கிற இவரைவிட்டால் பரமபத நிலயனையாய்த்து ஸாக்ஷாத்கரிப்பது. (நான்) தேவுமற்றறியேனென்று பகவத்விஷயத்தை ஸங்யஸித்த நான்.

(பெரிய வண் குருகூர்நகர் நம்பிக்கு) மஹோதாரராய்க் கொண்டு திருநகரியிலே திருவவதரித்த ஆழ்வாருக்கு. ஸர்வேச்வரனுடைய ஔதார்யம் ஜீவியாதகாலத்திலே தன் வாசியறிவித்த ஔதார்யமிறே.

"குருகூர்நகர்" என்று வைகுந்தமாநகரை வ்யாவர்த்திக்கிறது. பரமபதமென்பது, "அயர்வறுமமரர்களதிபதி" என்பதாய் ஆழ்வார் படுமதெல்லாம், இவரும், திருநகரியென்றாலும், ஆழ்வாரென்றாலும் அப்படியேயாய்த்து அநுபவிப்பது. (நம்பிக்கு) நான் ஒன்றைப்பற்றினேன், ஒன்றைவிட்டேனென்னலாம்படியோ

---

னென்று ஸ்வார்த்தமாக ப்ரார்த்திப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (பரமயோகிகளித்யாதி). யோகிகள் விரக்தராயிருக்கச்செய்தேயும் ச்ருங்காரார்த்தமாக வர்ணிக்கிறாப்போலே தாமும் ஆஸக்தியின்றிக்கே யிருக்கச்செய்தேயும் வர்ணிக்கிறாரென்றபடி.

"காண்பன்" என்றதாலே தேவபிரானையே காணக்கடவேனென்று பொருளாய், அதை அருளிச்செய்கிறார் (ஸாக்ஷாதித்யாதி). காண்பனென்றத்தால் அர்த்தஸித்தமாயிருக்க, நானென்றதால் பலிதம் (தேவுமற்றித்யாதி). பெருமையை வண்மைக்கு விசேஷணமாக்கி, அத்தை விசேஷிக்கிறார் (ஸர்வேச்வரனுடைய வித்யாதி).

குருகூர் பதவ்யாவ்ருத்த்யர்த்தம் (குருகூரித்யாதி). வ்யாமோஹத்தாலே ஆழ்வாரையும் திருநகரியையும் வர்ணித்ததுக்கு த்ருஷ்டாந்தமுகேந தாத்பர்யம் (பரமபதமித்யாதி).

குருகூர்நகரானென்னாதே, நம்பி யென்றதுக்குத் தாத்பர்யத்தை எல்லையளவும் அருளிச்செய்கிறார் (நானொன்றையித்யாதி வாக்யத்வயத்

ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அதாவது ஆழ்வாரை அநுபவிக்கு மநுபவத்திலே பகவத்விஷயமும் அந்தர்ப்பூதமாயிருக்கை.

(ஆளுரியனாய்) உரியவடியனாய், உரியவடியார்க்குத் தந்தாமுக்கென்று ஒரு ப்ரியாப்ரியங்களின்றிக்கே ஸ்வாமி உகந்ததையே பற்றி அவன் கைவிட்டவிடத்தே விட்டிருக்குமதிறே ஸ்வரூபம்.

(அடியேன்) ஆழ்வாருடைய நீர்மைக்குத்தோற்று அடியேன் என்கிறார். ‡"தொண்டரெல்லீரும்வாரீர்" என்னும் நீர்மையிறே. (பெற்றநன்மை) பெற்ற பகவல்லாபம். ஆழ்வாருக்கு உரியவடியனாய்ப் பெற்றபேறு இதிறே நான். ப்ராப்தாப்ராப்த விவேகத்தில் ப்ராவண்யத்தால் வந்த நன்மையன்றென்கை.

மூன்றும்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை
வ்யாக்யானம் முற்றிற்று.

---

தாலே.) உரியனாய்– ஆளாயென்று விசேஷிக்கைக்கு ப்ரயோஜநமருளிச் செய்வதாக உரியவடியார் நிலையைக்காட்டுகிறார் (உரியவித்யாதி.)

நானென்றிருக்க, அடியேனென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆழ்வாருடைய வித்யாதி) நன்மையே யென்று வித்தராகிறாரென்கிறார் (ஆழ்வாருக்கித்யாதி) ஸர்வம்வாக்யம் ஸாவதாரணமென்று, ஆளுரியனாய் பெற்றநன்மையென்று தாத்பர்யம் (ப்ராப்தேத்யாதி). ப்ராப்தாப்ராப்த விவேகமாவது "பகவத்விஷயம் ப்ராப்தம். இதரவிஷயம் அப்ராப்தம்" என்று விவேகித்துப்பற்றவில்லை, உரியவடியாராகையாலே பற்றினேனென்றபடி.

மூன்றும்பாட்டு வ்யாக்யான
அரும்பதம் முற்றிற்று.

---

‡ திருவாய் 5-2-2.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யானம்

oooOooo

அவ:—மூன்ரும் பாட்டு. (திரிதந்தித்யாதி) இவர், "தேவு மற்றறியேன்" என்ருர் கீழிற்பாட்டில்; இங்கு ஈச்வரன்ருன் இவர்பக்கலிலே மண்டினபடியைச் சொல்லுகிருர். பகவத்விஷய ப்ரீணநமாக ஆசார்யவிஷயத்திலே ப்ரவணனுகக்கடவன். ஆசார்ய ப்ரீணநமாக பகவத்விஷயத்திலே ப்ரவணனுகக்கடவன். 114"**प्रियो हि ज्ञानीनोऽत्यर्थमहं स च मम प्रियः**" (ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்த மஹம் ஸ ச மம ப்ரிய:" என்கிறபடியே ஒருவர்க்கொருவர் ப்ரிய விஷயமாயிருக்குமிறே. ஒருவனை ஒருவனுகந்தானுவது அவனு கந்தாரையுமுகக்கையாய்த்து.

இவர்கீழ், "தேவுமற்றறியேன்" என்று நம்மையும் மறந்து ஆழ்வார் பக்கலில் ப்ரவணரானுரே; எல்லாங்கூட நம்மை அறிவித் தவரென்றிறே ஆழ்வார்பக்கல் இவர்க்காதரம்; இப்படி நம்மையுகந்தா ருக்கு இவர் ப்ரீதராமிடத்தில், 115 "**मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत्**" (மம மத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத்) அன்றே. ஆகையாலே நாம் கொடுக்கும் பரிசிலேதென்று பார்த்து ஆழ்வார்பக்கல் பக்தி பூர்ணமான இவர் திருவுள்ளத்திலே நீர் வெள்ளத்திலே நெய்தல் பாரித்தாப்போலே தன்னுடைய வடிவைக் கொடுவந்து பாரிக்க, இதைக்கண்டு ப்ரீதரான இவர் இதுக்கு

---

அரு:—மூன்ரும்பாட்டு. (திரிதந்தித்யாதி) வேண்டாவென்னச்செய்தே அவன்மேல்விழுந்தாலும் இவர் பற்றலாமோவென்ன அருளிச்செய்கிருர் (பகவத்விஷய ப்ரீணநமாகவென்று துடங்கி). உபபத்தியும் காட்டுகிருர் (ஒருவனையித்யாதி) ஆசார்யவிஷயத்திலே ப்ரவணனுனுல் அது ஈச்வர னுக்கு உகப்பாகைக்கு, ஆசார்யன்தான் ஈச்வரனுக்கு ப்ரியதமனுயிருக்குமோ வென்ன அருளிச்செய்கிருர்(ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யாத்தமென்று துடங்கி)

ஈச்வரன் இவர்பக்கலில் விரும்பினப்ரகாரத்தை அருளிச்செய்கிருர் (இவர் கீழே தேவுமற்றறியேனென்று துடங்கி) (பரிசிலென்றது.) ப்ரத்யுபகாரம். (நெய்தல் பாரித்தாப்போலே) என்றது நெய்தல் புஷ்பம் பூத்தாப்போலே என்றபடி. நன்மையே யென்கிறவிடத்தில் அவதாரணத்

நிமித்தமென்னென்று ஆராய்ந்துபார்த்து, அது பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்தாலும் வந்ததன்று. பாகவத சேஷத்வமாத்ரத்தாலும் வந்ததல்ல; பகவதாச்ரயணத்தாலும் வந்ததல்ல; எல்லாங்கூட நான் ஆழ்வாருக்கு அநந்யார்ஹசேஷபூதனாய்ப் பெற்ற பேறிறே இதுவென்று ஸ்வகதமாக ப்ரீதராகிறார். ஆசார்ய விஷயத்தைப் பற்றியிருப்பானொருவனை பகவத்விஷயம் தானே மேல்விழு மென்னுமிடத்துக்கு உதாஹரணமிதுவிறே. பிராட்டியைப் பற்றினாலும் அவள் அவனோடே சேர்க்கையாலே அவன் கைபார்த் திருக்கவேணும், இங்கு அவன்றானே வந்து மேல்விழுந்து தன்னை இவனுக்குக் கொடுக்கும்.

வ்யா:—(திரிதந்தாகிலும்)திரியா நிற்கச்செய்தேயும். இங்ஙனே ஸஞ்சரியா நிற்கச்செய்தேயும்; "மெய்ம்மையே தேவுமற்றறியேன்" என்று ப்ரத்யயம் பண்ணலாம்படி பகவத்விஷயத்தோடு ஒட்டற்றுத் திரியாநிற்கச்செய்தேயும் இப்பேற்றைப்பெற்றேன்.

(தேவபிரானுடை) இவர் திருவுள்ளத்தில் ஈச்வரன் கொடு வந்து பாரித்துக்காட்டினவடிவு நித்யஸூரிகளுக்குப்படிவிடும் வடிவாய்த்து. அவர்களையும் இவரையும் பார்த்தால் அவர்கள் நமக்கே நல்லவர்கள். இவர் ஆழ்வாருக்கே நல்லவர். இவருக் கன்றோ இவ்வடிவை நாம் ப்ரகாசிப்பிப்பதென்று இவருக்குக் கொடுவந்து அநுபவிப்பித்தான். 116 "भक्तानां त्वं प्रकाशसे" (பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே) என்கிற விடத்தில் பக்தராகிறார் இவராய்த்து.

---

துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்தாலுமென்று துடங்கி ப்ரீதராகிறா ரென்னுமளவும்). பிராட்டியைப் பற்றுமதிலும் ஆசார்யனைப்பற்றுகைக்கு அதிசயமுண்டென்றருளிச் செய்கிறார் (பிராட்டியைப் பற்றினாலுமென்று துடங்கி.)

வேண்டாவென்னு நிற்கச்செய்தேயும் இவர்க்கு நித்யஸூரிபோக்ய மான வடிவைக் காட்டுகிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (அவர்களையு மித்யாதி) அகலகில்லேனென்றிருக்கையாலே பிராட்டியைக் கழற்ற வொண்ணாதை வாபரணமென்கிறது.

(கரிய) இவ்வடிவு நித்யஸூரிகள் அநுபவிக்கிறபோதும், ‡"கண்கள் சிவந்து" என்று தொடங்கி "அடியேனுள்ளான்" என்று ஆழ்வார் தாம் அநுபவிக்கிறபோதும் வெளிறு(றி)யிருந்தது. இவரநுபவித்தவாறே தன்னிறமிட்டதாயிற்று. /"என்னுவிசேர் அம்மானுக்கு செம்பொன் திருவுடம்பு" என்று ஆழ்வாரநுபவித்தபோதும் பொன்னென்றவளவித்தனைபோக்கிக் கறுத்ததில்லையே.

(கோலம்) ஆனைக்கு உதவவந்தாப்போலே இருந்தபடியே வருகையன்றிக்கே, இங்கு அநுபாவ்யனைய் வருகிறவனைகையாலே சாத்தின திருவாபரணமும் தானுமாயாய்த்து வந்தது. அபிமத விஷயத்தின் பாடுபோவார் ஆபரணம்பூண்டிறே போவது. (திருவுரு) கழற்றவொண்ணாதிருப்பதோராபரணத்தையும் கொண்டு வந்தார். அவ்விருண்ட வடிவுக்கு மின்போலே ப்ரகாஶிகையாயிருக்குமவளாய்த்து; இவளைக்கண்டாலாய்த்து அவ்வடிவையும் காணலாவது. §"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்கிறபடியே ஸ்வரூபத்தாலே ஸ்வரூபத்துக்கு ப்ரகாஶிகையாயிருக்கும். விக்ரஹத்தாலே விக்ரஹத்துக்கு ப்ரகாஶிகையாயிருக்கும் அவள்தான்.

(காண்பன்) இவ்வடிவை ச்ரவணமாத்ரத்தாலேயாதல், மநநமாத்ரத்தாலேயாதல், நிதித்யாஸநமாத்ரத்தாலேயாதலன்றிக்கே, ப்ரத்யக்ஷஸமாநாகாரமாம்படி அநுபவிக்கப் பெற்றேன். அவை வேண்டுவது இவன் காணவாசைப்படும்போதிறே. இங்கு அப்படியன்றிக்கே அவன்றானே ஆதரித்து மேல்விழுகையாலே எனக்குக் கண்ணாலே காணுமாபோலே காணலாய்த்து.

(தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக் காண்பன்) s"அமரர்களாதிமுதல்வன் கருகிய நீலநன்மேனிவண்ணன்

---

கரியகோலத்திருவுரு வென்கையாலே (நேருவதெல்லாம்) என்கிறது. (பார்வைவிசேஷம்) ஸாமாந்யமாகப் பார்க்கை. நித்யாநுபாவ்யமான

‡ திருவாய் 8-8-1. / திருவாய் 2-5-1. § மூன்றாந் திருவந்-1. s திருவாய் 1-9-3.

பூமகளார் தனிக்கேள்வன் ஒருகதியின் சுவைதந்திட்டொழிவிலன் என்னோடுடனே" என்று ஆழ்வாரை அநுபவிப்பித்தாப்போலே என்னையுமநுபவிப்பித்தான்.

(நான் காண்பன்) "தேவுமற்றறியேன்" என்று காணுமைக்குக் கண்களைத் திரியவைத்த நான்கிடீர் கண்டேன். (தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன்) பிராட்டிக்கு நித்யாநுபாவ்யமாய் ஸூரிகளுக்கு ஸதா தர்ஶநீயமுமான விக்ரஹத்தைக்கிடீர் விமுகனான நான் கண்டநுபவிக்கப்பெற்றேன். (தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக்காண்பன்) அவன் நேருவதெல்லாம் நேர்ந்தான். நானும ஓருபார்வை விஶேஷம் பார்ப்பாரைப்போலே பார்த்தேனென்னவுமாம். நவநீத சௌர்யத்திலுட்பட நாக்கு நீட்டாதவர் பாதசையைக்கண்டால் பார்த்துவிடச்சொல்லவேண்டாவே.

(திரிதந்தித்யாதி) பார்த்தேனேயாகிலும் ஆழ்வார் திருநிறம் போலே பொன்னிறமாயிருக்கிறதன்றே; அது வேற்றுநிறமாகையாலே கண்டுவிட்டேனித்தனை; இதுபோலே வகுளகந்தியாயிராதே துளஸீகந்தியாயிருக்கையாலே வேற்றுமணமுண்டாயிருக்குமே; ஆக இப்படி எல்லாப்படியாலும் அந்யவிஷயமாகையாலே "தேவர்" என்று அஞ்சிக்கடக்கநின்று கண்டேனென்கிறார்.

(பெரியவண் குருகூரித்யாதி) நான் ஆழ்வாருக்கு அநந்யார்ஹஶேஷபூதனைப் பெற்றபேறென்!" என்கிறார்மேல். இப்பேறு என்னாலும் வந்ததல்ல, பிறராலும் வந்ததல்ல; அவன்றன்னாலும் வந்ததல்ல, ஆழ்வாரடியாக வந்ததென்கிறார்.

---

விக்ரஹத்தை அநுபவியாமல் ஸாமாந்யமாகப் பார்க்கலாமோவென்ன வருளிச்செய்கிறார் (நவநீதசௌர்யத்திலித்யாதி.) "திரிதந்தாகிலும்" என்றதுக்கு இங்ஙனே ஸஞ்சரியாநிற்கச் செய்தேயும் பெரும்பேறு பெற்றேனென்றார்கீழ். அன்றிக்கே, திரும்பேன்; திரும்பினேனேயாகிலும் ஒருகால் பார்த்துவிடுகிறேனென்று உதாஸீநபக்ஷமாதல் இத்தையருளிச் செய்கிறார் (பார்த்தேனேயாகிலுமித்யாதி)

(ஆளுரியனாய்) ஆளாகப்ராப்தனாய்; பகவச்சேஷத்வந்தனக்கு ஆளற்றிருக்க, ஆழ்வாருக்கு ஶேஷபூதராகை பெறும்பேறிறே. அன்றிக்கே, உரியவடியனாய். "தேவுமற்றறியேன்" என்னும்படி ஸர்வஶேஷிபாடும் போகாதபடி ஆழ்வாருக்கு அநந்யார்ஹனாய்.

(நம்பிக்கு) வேறு பகவத்விஷயம் தேடிப்போகவேண்டும் படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அந்த ஸர்வரக்ஷகனுனவனுக்கும் ஆளாகாத வென்னையும் ரக்ஷித்து ஆளாக்கிக் கொண்ட பூர்த்தியன்றோ ஆழ்வாரது. (நம்பிக்கு ஆளுரியனாய்) இவருடைய 61 "गुणैर्दास्यमुपागतः" (குணைர்த்தாஸ்யமுபாகத:) இருக்கிறபடி. (நம்பிக்காளுரியனாய்) இவருடைய ப்ரணவார்த்தாநுஸந்தாநம் இருக்கிறபடி.

(குருகூர்நம்பி) இந்தநம்பி 117 "वासुदेवोऽसि पूर्णः" (வாஸுதேவோஸிபூர்ண:) என்கிற பரமபதநிலயனாதல், அவர்தாமநுஸந்தித்த திருக்குறுங்குடிநம்பியாதலன்றிக்கே, திருநகரியிலே வர்த்திக்கிற நம்பி; இவருக்குப் பூர்த்திக்கு ஊற்றுவாய் இத்தேஶவாஸமென்றிருக்கிறார்.

(வண்குருகூர்) வண்மையை உடைத்தான திருநகரி. ஆழ்வார் என்னைத் தந்தாப்போலே ஆழ்வார் தம்மைத்தந்த திருநகரி. * ஸர்வகாமதுக்கானதேசம். (பெரியவண்குருகூர்) பரமபதம் ஒரு சிறுங்கை யென்னும்படி உபயவிபூதியும் ஒதுங்கலாம்படி பெருமையை உடைத்தானவூர்; அன்றிக்கே, (பெரியவண் குருகூர்) § "புவியுமிருவிசும்பும் நின்னகத்த நீ யென்செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்" என்கிறபடியே விபூதிமானையும் விபூதியையும் தமக்குள்ளே அடக்கியிருக்கிற ஆழ்வாரைத் தனக்குள்ளே யடக்கும்படியான பெரியதேசம்.

---

(ப்ரணவார்த்த மென்றது) கண்ணபுரமொன்றுடையானுக்குப்போலே அகார உகார மகாரார்த்தம் சொல்லிற்றாய், இத்தால் ஸ்வாபாவிக சேஷத்வமென்றுதல்.

§ பெரியதிருவ-75.

(நகர்) விலக்ஷணவஸ்துக்கள் வந்துசேரும்தேசம். "தேவ பிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன் நான்" என்று அக்கரையாரடங்கலும் வந்து பாரிக்கும்படியான பட்டணமாயிற்று. (நகர்) முக்தாஹாரம் பாரிக்கும்தேசம். * சொன்னசொல் நம்புவார்பதி வைகுந்தமிறே. † "குரவைகோத்த குழகனை மணிவண்ணனை எத்துதல் மனம்வைம்மினோ" ‡ "தென்னிலங்கை எரியெழச் செற்றவில்லியை பரவுமினோ" என்று தேவகீ புத்ராத்நமும் அதுதன்னிலும் விற்பிடிமாணிக்கமும் விலைசெல்லும்தேசம்.

(அடியேன்பெற்ற நன்மையே) இங்கு "அடியேன்" என்கிறது நானென்றபடி. ஆளுரியனுனபின்பு நானிருக்கும்படி இதிறே. (பெற்றநன்மையே) ஆழ்வார் தமக்கு இன்னும் பெற வேண்டுவன நன்மையுண்டேயாகிலும் நமக்கு இனிப்பெற வேண்டும் நன்மையொன்றுமில்லை. ஆழ்வார் தாம் || "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ" என்றும், / "மல்குநீலச்

---

(என்னைத்தருகை) எனக்கு ஜ்ஞாநத்தைத்தருகை. இங்கிருக்கிறவர்கள் முக்தரோவென்ன அருளிச்செய்கிறார் (சொன்னசொல் நம்புவாரென்று தொடங்கி). (விற்பிடி) என்றது வில்லைப்பிடித்த தசரதன் பெற்ற மரகதமணியென்றபடி. வில்லென்றுதேஜஸ்ஸுக்குப்பேர். தேஜஸ்ஸையுடைய மாணிக்யமென்றுசாடு.

கீழ் ஆளுரியனென்று சேஷத்வம்சொல்லி, பின்னையும் அடியேனென்று இங்கும் சேஷத்வம் சொன்னால் புநருக்தமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (அடியேனென்கிறது நானென்றபடியென்று). இரண்டாலும் பலித்தது அநந்யார்ஹசேஷபூதனான நானென்றபடி.

(ஆளுரியனுனபின்பு நானிருக்கும்படி இதிறே) என்றதுக்குத் தாத்பர்யம் அடியேனென்றால் சேஷத்வத்தைச் சொல்லுமதொழிய நானென்று ஸ்வாதந்த்ர்யத்தைச் சொல்லுமோவென்று, அநந்தரத்தில் நானுகையாலே அஹமென்றிராதே அடியேனென்றிருக்கும். பெற்றவென்ற பூதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (ஆழ்வார்தமக்கென்று துடங்கி)

---

† திருவாய் 3-4-3. ‡ திருவாய் 3-4-2. || திருவாய் 2-3-10. / திருவாய் 7-9-9.

சுடர் தழைப்ப" என்று துடங்கி "என் திருமார்வனை வந்தெய்து மாறறியேன்" என்றும் மநோரதம் நடவாநிற்க, இன்று நான் இப்பேறு பெறும்படியானபடியென்!

(நம்பிக்கித்யாதி) அவனுக்கு சேஷபூதராயிருந்து வைத்தே அவர் அலமாராநிற்க, நான் ஆழ்வார் தமக்கே சேஷபூதனாயிருந்து வைத்து இந்நன்மையைப் பெறுவதே! *வைஷ்ணவ ஸம்ச்ரயராலே 118 "**प्रयास्यन्ति**"(ப்ரயாஸ்யந்தி) என்று போய்ப்பெற வேண்டாதே இருந்த விடத்திலே வந்து திருக்குதிப்பதே. †"ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார்தவம்" என்ற வார்த்தை என்னளவிலே பலித்ததென்று ஸ்வாநுஸந்தாநத்தாலே ஸந்துஷ்டராகிறார்.

மூன்றும்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

நானென்றது தாஸோஹமென்றபடியாய் அடியேனென்றபடியாயிருக்கும். கேவலம் அஹமென்றிராதென்று தாத்பர்யம்.

நன்மையேயென்றவிடத்தில் ஏவகாரம் அவதாரணத்தையும் ஸ்வரத்தையும் சொல்லுகிறது; அவதாரணமாவது–நிச்சயம். ஸ்வரமாவது–ஈடுபாடு. அதில் கீழே, இப்பேறு என்னாலும்வந்ததல்லவென்று அவதாரணமாகச் சொல்லிற்று. இங்கு ஸ்வரத்திலே தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆழ்வார் தாம் அடியார்கள் குழாங்களையென்று தொடங்கி மேலெல்லாம்). §(திருக்குதிப்பதென்றது) பாக்யம் ஸித்திப்பதென்றபடி.

மூன்றும்பாட்டு அரும்பதம் முற்றிற்று.



---

† நான்-திருவ 18.

§ (பா) திருக்குதிப்பது-தாஸ்யைச்வர்யம் பெறுவது.

## நாலாம்பாட்டு

4. நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்
புன்மையாகக் கருதுவராதலில்
அன்னையாயத்தனு யென்னையாண்டிடும்
தன்மையான் சடகோப னேன்னம்பியே.

பதவுரை:—நன்மையால் மிக்க—நற்குணத்தால் மேன்மை பெற்றவர்களாய், நால் மறை ஆளர்கள்—நான்கு வேதங்களிலும் வல்லவர்களான வைதிகர்கள், (என்னை) — அடியேனை, புன்மை ஆக கருதுவர் ஆதலில் — தாழ்வே ஒரு வடிவு கொண்ட தென்றெண்ணிஉபேக்ஷித்திருப்பரென்பதுவே காரணமாக, அன்னை ஆய்—மாதாவாயும், அத்தன் ஆய்—பிதாவாயும், என்னை ஆண்டிடும் தன்மையான் — அடியேனைக் கைக்கொண்டருளுமியல்வினரான, சடகோபன்—நம்மாழ்வார், என் நம்பி—எனக்குத் தலைவர்.

---

## நஞ்சீயர் வ்யாக்யாநம்

அவ:—நாலாம்பாட்டு. உமக்கு இந்த நன்மைக்கு அடியென்னென்னில், ஸத்துக்களாலும் கர்ஹிதனுனவென்னை பித்ராதிகள் செய்வதும் செய்து உபகரித்தானென்கிறார். இப்படி ஆழ்வார் உம்மை விஷயீகரிக்கைக்கு நீரிட்ட பச்சையென்னென்னில், ஸத்துக்களும் கைவிடும்படி / தண்ணியனுனேனென்கிறார்.

வ்யா:—(நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்) பரதுக்காஸஹிஷ்ணுக்களாய் பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநராய் 119 "पूर्वभाषी प्रसन्नात्मा '(பூர்வபாஷீ ப்ரஸந்நாத்மா) என்றும்,120 "विमलमतिः" (விமலமதி:) என்றும் இத்யாதிகளிற் சொல்லுகிறபடிகளையுமுடைய கூரத்தாழ்வானும் ஆண்டாளும் பிராட்டியும்போல்வார். வேதங்கள் கோஷித்ததையும் கைப்படுத்திக்கொண்டிருக்குமவர்கள் । "அந்தணர்மாடு" என்கிறபடியே வேதைகதநராயிறே இருப்பது. 121 "द्रवन्ति दैत्याः" (த்ரவந்தி தைத்யா:) என்கிறபடியே வேதங்களும் ஏவிற்றுச்செய்யும்படி போலேகாணும் இவர்கள் வேண்டப்பாடு. (புன்மையாகக் கருதுவர்) புன்மையும் புன்மைக்காச்ரயமாகையுமன்றியே புன்மையே தானுகக்கருதுவர்கள். (ஆதலில்) அதுவே ஹேதுவாக.

---

(118) தண்ணியனுகை. । திருநெடு 4.

(அன்னையாயித்யாதி) "நம்மையொழியப் புறம்பு இவனுக்கு எங்கும் புகலில்லை" என்று ஸர்வவிதபந்துவுமானவர்; ப்ரியத்துக்குக் கடவ மாதாவும் ஹிதத்துக்குக் கடவபிதாவும், ஹிதைஷியான ஆசார்யனுமாகையை ஸ்வபாவமாகவுடைய ஆழ்வார். 39 "मातृदेवो भव" (மாத்ருதேவோ பவ) இத்யாதிகளிற்படியையுடைய ஆழ்வார். (சடகோபனென் நம்பியே) தன் குற்றத்தைப் போக்குமளவன்றியே என் குற்றத்தைப் போக்கும்படி நிரபேக்ஷர்.

நாலாம்பாட்டுக்கு நஞ்சீயர் வ்யாக்யாநம்
முற்றிற்று.

## நம்பிள்ளை ஈடு

அவ:—நாலாம்பாட்டு. நானென்றது தான் முன்பு உம்மை எவ்வளவாக நினைத்தென்ன, இதிறே முன்பு என்னுடைய ஸ்திதியென்கிறார்.

வ்யா:—(நன்மையாலித்யாதி,) ஆத்மகுணோபேதராய் அறிவுடையாரில் ஆழ்வாரை யொழிந்தாரடையக் கைவிடும்படியன்றோ என்னுடைய ஸ்திதியிருக்கும்படி. நன்மை யென்கிறது குண தோஷாச்ரயமாயிருந்தால் தோஷாம்ஶத்தைக் கைவிட்டு குணாம்ஶத்தைக்கைக்கொள்ளுகை. அதில் மிகுகையாவது குணமென்று பேரிடலாவதொன்று மின்றிக்கே தோஷமேயாயிருந்தால் அதுதான் பற்றாசாகக்கைக்கொள்ளுகை.

(நான்மறையாளர்கள்) அதுக்கடியாக ஹிதாநுஶாஸநம் பண்ணிப்போந்த வேதங்களிலே வாஸனைபண்ணியிருக்குமவர்கள்; நாலுவகைப்பட்ட வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள். அவர்களாகிறார் ஸ்ரீஜநகராஜன் திருமகளாராதல், கூரத்தாழ்வானாதல். (புன்மையாகக்கருதுவர்) புன்மையென்றொரு குணமாய், அதுக்காச்ரயமான தர்மியுமாயிருக்கையுமன்றிக்கே புன்மைதான் ஒருவடிவு கொண்டதென்றிருப்பர்கள். (ஆதலில்) அதுவே ஹேதுவாக.

(அன்னேயாயித்யாதி) நாமல்லது இவ்வளவில் ரக்ஷகரில்லே யென்று எனக்கு ஸர்வவிதமான பந்துவானவர். 122 "स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः। त्रीन् लोकान् संपरिक्रम्य तमेव शरणं गतः॥" (ஸ பித்ரா ச பரித்யக்தஸ்ஸுரைச்ச ஸமஹர்ஷிபி: । த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணங்கத:॥) என்று புறம் பெற்கும் புகல்காணுதே மீண்டுவந்த காகத்தோபாதி புறம்பு இவனுக்குப் பற்றுசில்லேயென்று ஸர்வவித ரக்ஷகரானவர், ப்ரியமேசெய்யக்கடவ தாய் செய்வதும், ஹிதமே செய்யக்கடவ பிதாசெய்வதும், ஸ்வரூபாநுரூபமாக அடிமைகொள்ளும் நாயகன் செய்வதும் செய்யுமவர். /"தாயாய்த் தந்தையாயறியாதன அறிவித்தவத்தா" என்று பகவத்விஷயத்தில் அவர் சொல்லு மதை ஆழ்வார் விஷயத்திலே இவர்சொல்லுகிருர். (தன்மையான்) அக்நிக்கு ஔஷ்ண்யம் போலேயும் ஜலத்துக்கு ஶைத்யம் போலேயும் இஸ்வபாவத்தை நிரூபகமாகவுடையவர்.

(சடகோபனென்னம்பியே) தாய்செய்வது தமப்பன் செய்ய மாட்டான். தமப்பன் செய்வது தாய்செய்யமாட்டாள். புறம்புள் ளார் செய்வது இருவரும் செய்யமாட்டார்கள். எல்லார் செய்யு மதும் செய்யவல்ல பூர்த்தியையுடையவர். ஆராய்ந்தால் அடி யின்றிக்கே போட்கணுயிருக்கிற அபூர்ண விஷயங்களே ஆழ் வாருக்கு த்ருஷ்டாந்தமாகச் சொன்னவிடம் தப்பச்செய்தேன். இனிச்சொல்லலாவதொன்றுண்டு. என்னுடைய தண்மையாகிற பாழ்ந்தாறு நிரம்பும்படியான பூர்த்தியை உடையவரென்னு மித்தனை.

நாலாம்பாட்டுக்கு நம்பிள்ளைசடு முற்றிற்று.

---

/ திருவாய் 2-3-2.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்



அவ:—நாலாம் பாட்டில், என்னப்பனிலென்று காற்கடைக்கொண்ட விஷயத்தை ஆழ்வாருகந்தாரென்று விரும்புகைக்கடியென்னென்னில், என்தண்மைபாராதே என்னை விஷயீகரித்த நீர்மையை அநுஸந்தித்தால் அவருகந்தவிஷயத்தை உகவாதொழிவனோவென்ன, உம்முடைய தண்மையேது, அது பாராதே அவர் விஷயீகரித்தபடி யென்னென்ன, அத்தைப்பேசுகிறார்.

வ்யா:—(நன்மையாலித்யாதி) ஆத்மகுணங்களால் ப்ரசுரராய் ஸம்ஸாரிகளுக்கு அபாச்ரயபூதராயிருப்பாரில் ஆழ்வாரை யொழிந்தாரடங்க, "இவன் அவஸ்து" என்று கைவிடும்படியன்றோ என்னுடைய ஸ்திதியிருக்கும்படி.

---

அரு:—நாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் சங்கா பரிஹாரரூபனை ஸங்கதி அருளிச்செய்கிறார் (என்னப்பனிலித்யாதி) என்னப்பனிலென்றது – தேவுமற்றறியேனென்றதுக்கு உபலக்ஷணம். (உகந்தார் என்று) என்றவநந்தரம் "ஆகிலும்" என்றத்யாஹார்யம். ஆகையால் ஆழ்வாருகக்கை விரும்புகைக்கடியாயிருக்க (அடியென்னென்னில்) என்கிற சங்கை உதியாதென்கிறது பரிஹ்ருதம். "புன்மையாகக் கருதுவராதலில்" என்றதைக் கடாக்ஷித்து என்னுடைய நிகர்ஷமே பற்றாசாக அங்கீகரித்த ஆழ்வாருடைய ஸௌலப்யம் அவருகந்த விஷயமென்றாகிலும் பற்றுகைக்கு ஹேதுவென்று பரிஹரிக்கிறார் (என்தண்மையித்யாதி). என்தண்மைபாராதே "அதுவே பற்றாசாக" என்று கூட்டுவது. (ஒழிவேனோவென்ன) என்றது இப்படி உத்தரமருளிச்செய்யவென்றபடி.

நான்மறையாளர்களாகையாலே நன்மையால் மிக்கவர்களென்றாய், அத்தாலே உத்தாரகரென்று பலிதார்த்தம் அருளிச்செய்கிறார் (ஆத்மகுணங்களாலித்யாதி). ஆத்மகுணங்கள்–ஆந்ருசம்ஸ்யாதிகள். புன்மையாகக் கருதுகிற இவர்களில் ஆழ்வாரையும் அந்தர்ப்பூதராக்கினால் மேலே என்னையாண்டிடுமென்னக் கூடாமையாலே (ஆழ்வாரை ஒழிந்தார்) என்று சொல்லுகிறார். (அடங்க) க்ருத்ஸ்நம். நான்மறையாளர்களெல்லாரும்.

ஒருத்தனுக்கு நன்மையாவது தோஷகுணங்கள் ஏகாச்ரய நிஷ்டங்களாயிருந்தால் தோஷத்தைவிட்டு குணம்ஶத்தை ஸ்வீகரிக்கை; அதில் மிகுதியாவது குணமென்று பேரிடலாவதொன்று மின்றிக்கே தோஷமேயாயிருந்தால் அதுதானே பற்றாசாகக்கைக்கொள்ளுகை.

(நான்மறையாளர்கள்) அதுக்கடியாக ஹிதாநுஶாஸநம் பண்ணிப்போருகிற வேதங்களிலே அவகாஹித்திருக்குமவர்கள். நாலுவகைப்பட்ட வேதங்களுக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள்; அவர்களாகிறார் ஸ்ரீஜநகராஜன் திருமகளாதல், கூரத்தாழ்வானாதல். இத்தால் சொல்லிற்றாயிற்று வேதார்த்த தாத்பர்யம் கைப்படுகை. அதாவது ஆந்ருஶம்ஸ்யப்ரதாநராகையென்றபடி.

(புன்மையாகக்கருதுவர்) புன்மையென்று ஒரு தர்மமும் அதுக்கு ஆச்ரயமான தர்மியுமாயிருக்கையன்றிக்கே, புன்மை தான் ஒரு வடிவுகொண்டதென்றிருப்பர்கள். புன்மையாவது துக்கமாதல், பொல்லாங்காதல், விஷயாந்தர ப்ராவண்யமாதல், துர்மாநமாதல். இதுதான் மேலிற்பாட்டிலே ப்ரஸக்தமாகக்கடவது.

---

நன்மையால் மிக்கவென்றத்தை விவரிக்கிறார் (ஒருத்தனுக் கித்யாதி வாக்யத்வயத்தாலே) (பற்றாசாக) ஹேதுவாக.

தாத்பர்யார்த்தம் (அதுக்கித்யாதி). அதுக்கு—பற்றாசாகக் கொள்ளுகைக்கு. சப்தார்த்தகதநமுகேந ஆளர்களென்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (நாலுவகையித்யாதி) (வ்யாஸபதம்) அகண்டமான வேதத்தை அர்த்தத்தின்படியே சாகாகாண்டாதிரூபேண விபஜிக்கிற வ்யாஸருடைய அதிகாரம். (அவர்களாகிறார்) என்றது நன்மையால் மிக்க நான்மறையாளர்களாகிறாரென்றபடி. உக்தார்த்தநிகமநம் (இத்தாலித்யாதி) வேதார்த்த தாத்பர்யத்தின்படியே அநுஷ்டிக்கவல்லவர்களாய் இருக்கையென்றபடி. (ஆந்ருசம்ஸ்யம்) ஸர்வபூதாநுகூலாசரணம்.

புன்மை சப்தார்த்தமாகையாலே துக்கமாதலென்றது இவ்விடத்துக்கு விவக்ஷிதமன்று, மேல்பாட்டில் துக்கத்தை உபபாதியாமையாலே. (துக்கம்) பாபபலம். (பொல்லாங்கு) பாபம்.

(ஆதலிலன்னையாயத்தனு மென்னையாண்டிடும் தன்மையான்) அப்புன்மையே ஹேதுவாக இவ்வளவில் நாமல்லது ரக்ஷகரில்லை யென்று எனக்கு ஸர்வவிதபந்துவுமானவர். 123 **"त्रीन् लोकान् सं-परिक्रम्य तमेव शरणं गतः"** (த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணங் கத:) என்கிறபடியே காகத்தோபாதி இவனுக்கும் புறம்பொரு பற்று சில்லையென்று, அதுவே ஹேதுவாக ஸர்வவிதரக்ஷகரானவர்.

ப்ரியமே செய்யக்கடவ மாதாசெய்யுமதுவும், ஹிதமே செய்யக்கடவ பிதாசெய்யுமதுவும், ஸ்வரூபாநுரூபமான அடிமை கொள்ளும் நாயன்செய்யுமதுவும் செய்யுமவர். "தாயாய்த் தந்தையாயறியாதன வறிவித்தவத்தா நீ செய்தன" என்று பகவத் விஷயத்தில் ஆழ்வார் சொல்லுவதெல்லாம் ஆழ்வார் விஷயத்திலே சொல்லுகிறார் இவர்.

(தன்மையான்) அக்நிக்கு ஔஷ்ண்யம்போலேயும் ஜலத்துக்கு ஶைத்யம்போலேயும் இஸ்வபாவங்களை நிரூபகமாகவுடையவர். அதாகிறது இவனுக்கு உபகரித்தோமென்று தாம் நினைத்தல், இவன்றனக்கு ப்ரத்யுபகாரத்திலிழியவேண்டியிருத்தல் செய்யாதொழிகை.

(சடகோபன்) என்பக்கல் ஶாட்யத்தைப் போக்கினவர். கீழ் மூன்று பாட்டிலும் தென்குருகூர்நம்பியென்று சொன்னவர்,

---

தாத்பர்யார்த்தம் (அப்புன்மையேயித்யாதி). எல்லாருக்கும் த்யாக ஹேதுவானபுன்மை இவருக்கு ரக்ஷிக்கைக்கு ஹேதுவானபடியை உபபாதிக்கிறார் (த்ரீந்லோகாநித்யாதி). அன்னையாயித்யாதிக்கு கௌண வ்ருத்தியாலே சப்தார்த்தம் (ப்ரியமேயித்யாதி). (நாயன்) ஸர்வேச்வரன். வ்யாக்யாதா ஈடுபடுகிறார் (தாயாயித்யாதி).

"தன்மையான்" என்றத்தைக் கீழ்ச்சொன்ன மூன்றுபதங்களிலும் கூட்டித் தாத்பர்யம் (அக்நிக்கித்யாதி). இஸ்வபாவங்களை நிருபகமாகச் சொன்னத்தால் பலிதம் (அதாகிறதித்யாதி). சாட்யத்தைப் போக்கினதுக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (கீழித்யாதியாலே)

பதாந்தரம் சொல்லாதே நம்பியென்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (தாயென்றுதுடங்கி அஞ்சுவாக்யத்தாலே). (ஆசார்யன்)

இப்பாட்டில் சடகோபனென்றுரிறே ஸ்வதோஷத்தைப் போக்கின படியாலே.

(என் நம்பியே) தாய்செய்வது தமப்பன் செய்யமாட்டான். அவன் செய்வது இவள் செய்யமாட்டாள். ஆசார்யன் செய்யுமது இருவரும் செய்யமாட்டார்கள். நாயகன்செய்யுமது அடியான் செய்யமாட்டான். எல்லார் செய்வதும் செய்யவல்ல பூர்த்தியையுடையவர். (என் நம்பியே) என்னுடைய தண்மையாகிற பாழ்ந்தாறு நிரப்புப்படியான பூர்த்தியையுடையவரென்னுமத்தனை. இவரைக்குறித்துக் கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தங்களுக்கு ஸர்வதா ஸாப்யமில்லை, கர்மோபாதிகமாகவந்த ஸம்பந்தமாகையாலும் அபூர்ணஸ்தலமாகையாலும்.

நாலாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

என்கிற வாக்யத்துக்கு சடகோபனென்றது என் அஜ்ஞாநத்தைப் போக்கினவரென்ற பேராகையாலேயென்று கருத்து. நம்பியென்றதுக்குக் கீழ்ச்சொன்னவர்களோடு ஸாம்யம் சொன்னுர். அவர்களிலும் ஆதிக்ய மாக அர்த்தாந்தரம் (என்னுடைய இத்யாதி.) (பாழ்ந்தாறு) படுகுழி. அதாவது தம்முடைய தோஷங்களாகிற வஞ்சகமான படுகுழியைத் துற்றுப்பொகடுகைக்கீடான க்ருபாதி குணபூர்த்தியை உடையவரென்கை. ஆதிக்யத்தை உபபாதிக்கிருர் (இவரையித்யாதி). "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் என்னைப் புன்மையாகக் கருதுவராதலில் சடகோப னென்நம்பியே அன்னையாயத்தனு யென்னையாண்டிடும் தன்மையான்" என்றந்வயம். ஆக, காற்கடைக்கொண்ட பகவத்விஷயத்தையும் ஸர்வ ப்ரகாரோபகாரகரான ஆழ்வாரையிட்டு உகவாதொழிவஞேவென்று கருத்து.

நாலாம்பாட்டின் அரும்பதம் முற்றிற்று.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம்.



அவ:—நாலாம்பாட்டு. (நன்மையித்யாதி). "தேவுமற்றறியேன்" "பெரியவண் குருகூர்நகர் நம்பிக்காளுரியனாயடியேன் பெற்றநன்மை" என்று இவர்சொல்லக் கேட்டவர்கள். 124 **"सर्वेषामेव लोकानां पिता माता च माधवः"** (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:) 125 **"पिताहमस्य जगतो माता"** (பிதாஹமஸ்ய ஜகதோ மாதா) §"உலகுக்கோர்முந்தைத் தாய்தந்தையே" என்கிறபடியே ரிஷிகளும் ஆழ்வார்களும் அவன்றானும் ஏககண்டமாக ஸர்வலோகங்களுக்கும் மாதாபிதாவாக ஸர்வேச்வரனைச் சொல்லாநிற்க, நீரும் அந்தலோகத்திலே ஒருவராயிருக்க இப்படி பந்துவானவனை ஆச்ரயித்தல், அதுவுமன்றிக்கே, 126 **"वासुदेवस्सर्वमिति स महात्मा"** (வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா) ‡"பெருமக்கள்" /"சிறுமாமனிசர்" என்று *கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனும் ஆழ்வார்தாமும் கொண்டாடும்படியான விலக்ஷணவர்க்கத்திலே சிலரை ஆச்ரயித்தல் செய்யாதே, ஆழ்வாரையே நீர் ஆச்ரயிக்கைக்கு ஆழ்வார் உமக்குச்செய்த உபகாரமேதென்ன, என்தோஷாதிசயத்தாலே அந்தப்பரமஸாத்விகரும் என்னை நெகிழ, அதுவே பற்றாசாக எனக்கு முகம் தந்து மாதாபிதாவும் தாமேயாய் என்னை அடிமைகொண்டு போந்த ஸ்வபாவம் ஆழ்வார்க்குள்ளதொன்றாகையாலே அவரேயன்றோ எனக்குப் பூர்ணரான உபகாரகரென்று இப்பாட்டிலே அவர்களுக்கு உத்தரமருளிச்செய்கிறார். ஆழ்வாருடைய பூர்த்தியை உபபாதித்தபடி.

---

அரு:—நாலாம்பாட்டு. (நன்மையித்யாதி). இந்தப்பாட்டுக்குத் தாத்பர்யம் பரமகாருணிகரும் நெகிழும்படியான என்னையும் அங்கீகரிக்கையாலே ஆழ்வாருடைய பூர்த்தியை உபபாதிக்கிறதென்றபடி.

§ திருவாய் 5-7-7. ‡ திருவாய் 3-7-5. / திருவாய் 8-10-3.

வ்யா:—(நன்மையாலித்யாதி) ததீயரை †“நலத்தால்மிக்கார்” என்று ஆழ்வாரருளிச்செய்யக் கேட்டிருக்கையாலே, தாமும், “நன்மையால் மிக்க” என்கிறார். தீமைபோனவளவாதல், நன்மையுண்டானவளவாதலன்றிக்கே, நன்மையால் அதிஶயித்தவர்கள். இதுக்கவ்வருகான நன்மையில்லாதபடியான நன்மையிலே நிலைநின்றவர்கள்.

ஒருவனுக்கு 127 **“सुदुराचारः”** (ஸுதுராசார:) என்கிறபடியே நன்மைகலசாத பொல்லாங்காவது- 128**“मनसानिष्टचिन्तनम्”**(மநஸாநிஷ்டசிந்தநம்) என்றும், ‡“கோடியமனத்தால் சினத்தொழில்புரிந்து” என்றும், ||“சினத்தினாற்செற்றம்நோக்கி வாளா தீவிளிவிளிவன்” என்றும் சொல்லுகிறபடியே நிர்நிபந்தநமாக பகவத்விபூதிபூதரோடே சீறுபாறென்றுபோருகை.

நன்மையாவது—அவர்கள்பக்கல் அபகாரவிபரீதனாயிருக்கையும், தன்பக்கலிலே நிர்நிபந்தநமாக அபகாரபரரளவில் உபேக்ஷித்திருக்கையும். நன்மையால் மிகுகையாவது- 129 **“अपकारिष्वपि सदा साधुः साध्वेव वर्तते”** (அபகாரிஷ்வபி ஸதா ஸாதுஸ் ஸாத்வேவ வர்த்ததே) என்கிறபடியே அந்த அபகாரபராளவிலும் உபகாரகனாய்ப் போருகை. அதாகிறது அவர்களளவில் குறைகாணாதொழிகையிறே.

இப்படி இருக்கிறவர்களாகிறார் - பிராட்டி கூரத்தாழ்வான் போல்வார்களிறே. ஏகாக்ஷிஏககர்ணிதுடக்கமான ராக்ஷஸிவர்க்கம்

---

நன்மையால் மிக்கவர்களென்றறிந்தபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (ததீயரைநலத்தால் மிக்காரென்று துடங்கி). தீமைபோன அளவாதலென்ற வாக்யத்தை விவரிக்கிறார் (இதுக்கவ்வருகான நன்மையென்று துடங்கி) நன்மைக்கு ப்ரதிகோடியான தீமையை உபபாதித்துக்கொண்டு அநந்தரம் நன்மையை அருளிச்செய்து அதின்மிகுதியை அருளிச்செய்கிறார் (ஒருவனுக்கு ஸுதுராசார: என்கிறபடியே) என்று துடங்கி. (தீவிளி) நிஷ்டுரபாஷணம். (விளிவன்) அழைப்பன். (அபகார விபரீதன்) அபகாரசீலனல்லாமை. பிராட்டி அப்படி தோஷம்காணாதிருந்தாளோ என்னவருளிச்செய்கிறார் (ஏகாக்ஷியென்றுதுடங்கி) (ஓவாமல்)

---

† திருவாய் 5-8-3. ‡ பெரிய-திரு 1-6 6. || திருமாலை-26.

ஓவாமலிருந்து தர்ஜநபர்த்ஸநாதிகளைப்பண்ணி யிருக்கச்செய்தேயும் இவர்களை நலியவேணுமென்ற திருவடியோடே மறுதலைத்து 130 "कार्यं करुणमार्येण" (கார்யம் கருணமார்யேண) என்றாப்போலே ஐந்த்ரவ்யாகரணபண்டிதனை நீ பின்னையும் உன் ஜந்பம்விடாமல் வார்த்தைசொன்னாயீ; இவர்களுடைய கண்ணநீர் கண்டால் கற்றவனால் கருணைபண்ணவன்றோவடுப்பது. நாட்டில் குற்றம் செய்யாமலிருக்கிறாரரேனுமுண்டோ? இவர்கள் தாம் குற்றம் செய்யிலன்றோ இவ்விசாரம் வேண்டுவது. அவர்களேதேனும் வித்யதிக்ரமம் பண்ணினார்களோ? நீ கற்றபரப்பில், "நாயன் சொன்னது அடியான்செய்கை குற்றமென்று ஒருவசநம் கிடந்ததோ? இவர்கள் ராவணபரிகரமாய் அவனுக்குக் கைவழி மண்ணான அடியாருமாய், அவனுடைய ஆஜ்ஞாபரிபாலந பரீலைகளுமாகாநின்றால் அவன் சொன்னதை மறுக்கலாமோ? பெருமாள் உனை என்னைக்கண்டுவாவென்று விட்டாரோ, ஸ்தரீவதம் பண்ணிவாவென்று விட்டாரோ? அப்படிசொன்னாராகில் அவர் குற்றமாகிறது. நீ சொன்னாயாகில் அந்த வித்யதிக்ரமம் உன்னதாகிறது" என்று குணகர்ஹணம்பண்ணி ராக்ஷஸிகளை ரக்ஷிப்பித்தாளிறே பிராட்டி. ஆகையாலிறே இவள் கோஷ்டியைப்பற்ற ராமகோஷ்டி லகுதரையாயிற்று.

அவயவங்களிலே ஹாநி பிறக்கும்படி அபசாரம் பண்ணின நாலூராலும் தான் புக்கலோகம் புகவேணுமென்றிறே ஆழ்வான் அபேக்ஷித்தது. இப்படிக்கு ப்ரஹ்லாதனும் க்ருத்யோதபாதநம் பண்ணித் தன்னை நலியவிட்ட புரோஹிதவர்க்கத்தை மறித்தும் அந்த க்ருத்யை போய் நலிய, ஸர்வேச்வரனை யபேக்ஷித்து அவர்களை நோக்கியும், 131 "मत्पितुस्त्वत्कृतं पापं देव तस्य प्रणश्यतु" (மத்பிதுஸ்த்வத்க்ருதம் பாபம் தேவ தஸ்ய ப்ரணச்யது) என்று ஹிரண்யாபராதத்தை க்ஷமிப்பித்தும், இப்படி அபகாரிகள்பக்கல் உபகாரகராய்ப் போந்தார்கள்.

---

விச்சேதியாமல். "ராஜஸம்ச்ரய வச்யாநாம்" என்றதுக்குப் பொருளருளிச்செய்கிறார் (இவர்கள்தான் குற்றம்செய்யிலன்றோ என்று துடங்கி). (கைவழிமண்) என்றது—க்ரயவிக்ரயார்ஹமான க்ஷேத்ரம். கைவசம் வந்தமண்போலே அத்யந்தபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது.

(நான்மறையாளர்கள்) நாலுவகைப்பட்ட வேதங்களை ஆண்டு போருமவர்கள். இப்ராமாணிகவாக்யங்களை தத்வஹிதபுருஷார்த்த ப்ரதிபாதகமான வாக்யங்களோடே சேர்த்தநுஸந்திக்கும்படி வேதநிர்வாஹகரானவர்கள்.

(நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்) இவர்களுக்கு இவ்வாத்மகுணம் உண்டாகைக்கு ஊற்றுவாய் வேதஸம்பந்தமாயிற்று. 132 "मातापितृसहस्रेभ्यो वत्सलतरं शास्त्रं" (மாதாபித்ருஸஹஸ்ரேப்யோ வத்ஸலதரம் ஶாஸ்த்ரம்) என்றும், / "நலங்களாய நற்கலைகள்" என்றும், குற்றஞ்செய்தாரை எவ்வளவிலும் கைவிடமாட்டாத இத்தோட்டை ஸம்பந்தமாயிற்று இதுக்கடி. இக்கலைகளைக் கல்லாதவர்களிறே இந்நன்மை பெறாதவர்கள். ‡ "கற்றிலேன் கலைகள் பெற்றிலேனதனால் பேதையேன்நன்மை" என்கிற படியே இதடியாகவிறே பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் செற்றமே வேண்டித்திரிதந்தது.

இது கல்லாதவர்களாகையாலே லங்காவாஸிகளான ராக்ஷஸர் *ரிபூணாமபிவத்ஸலரான பெருமாளோடே வெறுப்புக்கொண்டது.

---

ஆளுகிற க்ரமமேதென்ன அருளிச்செய்கிறார் (இப்பராமாணிக வாக்யங்களையென்று துடங்கி) அபௌருஷேயமாகையாலே ப்ராமாணிக வாக்யங்களென்கிறார். தன்னுடைய ஸம்பந்தத்தாலே இவர்களுக்கு இந்நன்மையுண்டாம்படி வேதத்துக்கு, ஹேயரான தேஹாத்மாபிமானிகள் துடக்கமானுரையும் விடமாட்டாதே ரக்ஷிக்கைக்கீடான வாத்ஸல்யமுண்டோ என்னவருளிச்செய்கிறார் (மாதாபித்ருஸஹஸ்ரேப்ய:) என்றுதுடங்கி. வேதத்தை அப்யஸியாதவர்களுக்கு இந்நன்மையில்லை என்றதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார்(கற்றிலேன் கலைகளென்று துடங்கி) "அதனால் நன்மைபெற்றிலேன்" என்றந்வயம். (இதடியாகவிறே) என்றது–கல்லாததடியாகவிறே என்றபடி.

பெருநிலத்து–மஹாப்ருதிவியிலே, ஆருயிர்க்கு – ஆத்மாக்களுக்கெல்லாம், செற்றமேவேண்டி- ஹிம்ஸையை அபேக்ஷித்து, திரிதந்தது.

---

/ திருச்சந்த-90. ‡ பெரி-திரு 1-1-8.

*கல்லாதவரிலங்கையிறே. இது கற்றவர்களுக்குப் பலம் அபகாரிகள் பக்கலிலே உபகாரம்பண்ணுகை. இது கல்லாதவர்களுக்குப் பலம் உபகாரிகள் பக்கலிலே அபகாரம்பண்ணுகை. இதுதான் மறையாகை யாலே துஷ்ப்ரக்ருதிகளுக்கு ஸ்வார்த்தத்தை போதிப்பியாதிறே.

"நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்" என்கிற இரண்டாலும் 133 "श्रोत्रियं ब्रह्मनिष्ठं" (ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்) என்கிற இரண்டையும் சொல்லுகிறதாயிற்று; அன்றிக்கே, (நன்மையால் மிக்க நான்மறை) நித்யதையாலும் நிர்த்தோஷதை யாலும் அஜ்ஞானவர்களுக்கு ஜ்ஞாதவ்யார்த்தங்களையுடைய ப்ரமாணாந்தர நிரபேக்ஷமாக அறிவிக்குமதாகையாலும், 134 "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" (வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:) என்கிறபடியே ஸர்வாதிக வஸ்துவையே ப்ரதிபாதிக்கிறதாகை யாலும் ப்ரமாணாந்தரங்களிற்காட்டில் ப்ராமாண்யஸ்ரீயால் அதி ஶயிதமான வேதார்த்தஜ்ஞாநமுடைய மஹாத்மாக்களென்னவுமாம்.

(புன்மையாகக்கருதுவர்) அப்படி பிறருடைய குறைகாண மாட்டாதவர்களுட்பட என்னுடைய தோஷாதிஶயத்தாலே என்னை அநாதரிக்கும்படியாயிற்று. (புன்மையாகக்கருதுவர்) நன்மையால் மிக்கவர்கள் என்னுடைய புன்மையின் மிகுதியாலே புறக்கணித்

---

இத்தால் நன்மையில்லாத மாத்ரமன்றிக்கே தீமையிலே மூட்டு மென்றபடி. தீமையிலே மூட்டின இடமுண்டோவென்ன அருளிச் செய்கிறார் (இது கல்லாதவரித்யாதி) லங்கையிலுள்ளார் அப்படி வேதத்தை யப்யஸிக்கவில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (கல்லாதவ ரிலங்கையென்று துடங்கி). "அக்நிஹோத்ராச்ச வேதாச்ச" என்று வேதாத்யயநமுண்டாகச் சொல்லாநிற்க, கல்லாதவரிலங்கை என்று சொல்லுகிறபடி எங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார் (இதுதான் மறை யாகையாலே என்று துடங்கி). (ச்ரோத்ரியம்) ச்ருத வேதார்த்தனுகை. அன்றிக்கே "நன்மையால்மிக்க" என்றத்தை வேதத்துக்கு விசேஷண மாக்கி அருளிச்செய்கிறார் (நித்யதையாலுமென்று துடங்கி) (புறக்கணித் திருப்பர்கள்) முகம்பாராதே இருப்பர்களென்றபடி. மறையாகையாலே அர்த்தநிச்சயம் பண்ணப்போகாது. அப்படியிருக்கச் செய்தேயும், அவ்வரிய அர்த்தத்தைக்கண்டு திருத்தினவர்களாலும் என்னுடைய

திருப்பர்கள். (நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்) அந்த வேதார்த்தங்களைத் திருத்தி அநுஸந்திக்கிறவர்களுக்கு என்னுடைய குற்றத்தின் மிகுதியாலே ஒருகுணங்கண்டு திருத்தப்போச்சு தில்லை. (நான்மறையாளர்களித்யாதி) அவர்களிலே ஒருவர்க்கு ஆளாகப்பெற்றிலேன். (புன்மையாகக் கருதுவர்) புன்மையென்றும் நானென்றும் வேறின்றிக்கே, /"என்னதாவியென்னும் வல்வினை" என்கிறபடியே புன்மை தானாகவே நினைப்பர்கள். தர்மப்ராசுர்யத்தாலே தர்மியை தர்மவ்யபதேஶம் பண்ணக்கடவதிறே.

(கருதுவர்) தம்முடைய புன்மையன்றிக்கே அவர்களுடைய அநாதரம்காணும் இவரை வருத்துகிறது. 135 "**हतोऽस्मि यदि मामेवं भगवानपि मन्यते**" (ஹதோஸ்மி யதி மாமேவம் பகவாநபி மந்யதே) என்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலேயும் 136 "**धिगस्तु तज्जन्म-यत्साधु-बहिष्कृतं स्यात्**" (திகஸ்து தஜ்ஜந்ம—யத் ஸாதுபஹிஷ்க்ருதம் ஸ்யாத்) என்ற அக்ரூரனைப்போலேயும். 137 "**महात्मभिर्मामवलोक्यतां नय**" (மஹாத்மபிர்மாமவலோக்யதாம் நய) என்கிறபடியே மஹத்துக்களுடைய அங்கீகாரம் புருஷார்த்தமாய், அத்தாலநாதரமும் அப்படியேயிறே. (கருதுவர்) அவர்களுக்கு வாசி வாய்விட்டுச்

---

தோஷத்தின் மிகுதியாலே குணங்கண்டு திருத்தப்போயிற்றில்லை என்றருளிச்செய்கிறார் (அந்த வேதார்த்தங்களைத்திருத்தி என்று துடங்கி). பஹுவசநத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் '(அவர்களிலே ஒருவர்க்காளாகப் பெற்றிலேன்) என்று. "என்னதாவியென்னும் வல்வினை" என்றதுக்கு என்னுடைய ஆத்மாவாகிறதே ஒருபாபமென்று பொருள். தர்மதர்மிகளை ஒன்றாகச் சொல்லலாமோ என்னவருளிச்செய்கிறார் (தர்மப்ராசுர்யத்தாலேயென்று துடங்கி).

(பகவாந்) என்றது—பரத்வாஜனை. மஹதங்கீகாரம் புருஷார்த்தமானால் அங்கீகாரம் துக்கஹேதுவாகையாலே வருத்தக்கூடும். அங்கீகாரம் புருஷார்த்தமென்கைக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (மஹாத்மபிர்மாமவலோக்யதாம் நய என்று துடங்கி) பரதோஷம் வாய்விட்டுச் சொல்லவொண்ணாதென்றிருந்தால் நினைக்கிறது தானெப்படி கூடுமென்ன அருளிச்செய்கிறார் (அவர்கள் ஸர்வஜ்ஞராகையாலே என்றுதுடங்கி).

/ திருச்சந்த-119.

சொல்லாமை. (நான்மறையாளர்கள் புன்மையாகக்கருதுவர்) அவர்கள் ஸர்வஜ்ஞராகையாலே வஸ்துகதியை யதாவாக அறிந்திருப்பர்களிறே.

(ஆதலிலன்னையாயித்யாதி) கீழ் ஸாத்விகவர்க்கம் கைவிட்டபடி சொல்லிற்று. மேல், ஆழ்வார் கைக்கொண்டபடி சொல்லுகிறது. இப்படி எல்லாரும் கைவிட்ட இவனை நம்மையொழியக் கைக்கொள்ளுவாரில்லையென்று என்பக்கலிலே மாத்ருவத்ஸலரானார். 138 "यद्वा शरण्यमशरण्यजनस्य पुण्यम्" (யத்வா ஶரண்யம ஶரண்யஜநஸ்ய புண்யம்) என்றிறே ஆழ்வாரைச் சொல்லிற்று.

(அன்னையாயத்தனாய்) †"அத்தனாகி யன்னையாகி" என்று பகவத்விஷயம்போலே முற்பட ஹிதபரனாய், பின்பு ப்ரியபரனாகை யன்றிக்கே முற்பட ப்ரியபரராய் பின்பு ஹிதபரரானார். அப்படியே ஆளவந்தாருமுற்பட 2 "माता पिता" (மாதா பிதா) என்று மாத்ருத்வத்தையாய்த்து முந்துற அநுஸந்தித்தது.

(அன்னையாயத்தனாய்) முற்பட பகவத்ப்ரபாவத்தை உபதேசித்து, அநந்தரம் அதிகாரிவேஷத்தை உபதேசித்தார். ‡"உம்முயிர்வீடுடையான்" /"பத்துடை யடியவர்க்கெளியவன்" ||"பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர்-நன்னீர்தூய்ப்புரிவதுவும் புகைபூவே" என்று உபதேஶித்திறே §"கழிமின் தொண்டீர்

---

(ஆதலில்)என்றது–இவர்கள் கைவிட்டதுவே ஹேதுவாகவென்றபடி. அசரண்யருக்கும் சரண்யரோ இவரென்னவருளிச்செய்கிறார் (யத்வா சரண்யமென்றுதுடங்கி) இவர் இப்படி முற்பட ப்ரியத்தைச்செய்து பிற்படஹிதத்தைச்செய்தாரோவென்ன அருளிச்செய்கிறார் (முற்படபகவத்ப்ரபாவத்தை உபதேசித்தென்று துடங்கி). முற்படப்ரியத்தைச்செய்து அநந்தரம் ஹிதத்தைச்செய்தாரென்கைக்கு ஜ்ஞாபகமாக ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் காட்டுகிறார் (உம்முயிர் வீடுடையானிடையென்று துடங்கி). "உம்முயிரென்று துடங்கி, நன்னீர்தூய்" என்னுமளவும் ப்ரியமான பகவத்விஷயத்தை உபதேசிக்கையாலே ப்ரியபரத்வம், அநிஷ்ட

---

† திருச்சந்த-115. ‡ திருவாய் 1-2-1. / திருவாய் 1-3-1.
|| திருவாய் 1-4-1. § திருவாய் 1-4-8.

கள் கழித்துத்தொழுமின்" என்றது. (அன்னையாயத்தனாய்) 139 "**गुरुः पिता गुरुर्माता**" (குரு:பிதா குருர்மாதா) என்று லாக்ஷணிகமாய் வருவதன்றிக்கே என்னுடைய புன்மையில் புரையில்லாதாப்போலே அவருடைய மாதா பித்ருத்வத்திலும் புரையில்லை.

(என்னையாண்டிடும் தன்மையான்) ஸ்வாமித்ருத்யமும் அநுஷ்டித்தார். பகவத்விஷயத்தை †"அத்தனாகி யன்னையாகி ஆளுமெம்பிரானுமாய்" என்று அநுஸந்தித்தாப்போலே இவரும் ஆழ்வார் விஷயத்திலே அவற்றை அநுஸந்திக்கிறார்.

(என்னையாண்டிடும் தன்மையான்) தாம் திருவாய்மொழி அருளிச்செய்கிறபோது என்னைப் பட்டோலை எழுதச்சொல்லி யருளிச்செய்தார்; உசிதமான கைங்கர்யத்தைக்கொண்டார்.

(என்னையாண்டிடும்) பொலிந்து நின்றபிரான் பக்கலிலும் ஒருகால் போய்வாரீரென்று உபதேசித்தாரென்று பிள்ளை யருளிச்செய்வர். கட்டுண்ணப் பண்ணிய பெருமாயனென்னப்பனில் நண்ணியென்று நான் விட்டுப்போந்த விஷயத்தை §"நீள்குடக்கூத்தனுக் காட்செய்வதே உறுவது" என்று பொலிந்து நின்றபிரானுக்கும் ஓரஞ்ஜலி நேரும்படி பண்ணினார். (தன்மையான்)

---

நிவ்ருத்தி பூர்வகமான உபாயோபதேசம் ஹிதமாகையாலே "கழிமின் தொண்டர்கள் கழித்து" என்ற வாக்யத்தாலே அந்த ஹிதத்தை அருளிச்செய்கிறார். "ஆய்" என்ற சப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (குரு: பிதாவென்று துடங்கி) (லாக்ஷணிகமென்றது) ஔபசாரிகமென்றபடி. புன்மையாக வென்கையாலே—புன்மையும் புரையில்லையென்றபடி. என்னையாண்டிடும் தன்மையானென்றதுக்கு இரண்டுபொருள்; அதாவது—திருவாய்மொழியைப் பட்டோலையெழுதச்சொல்லி உசிதகைங்கர்யம் கொண்டாரென்னுதல்; ஒருகால் பொலிந்து நின்றபிரானையும் ஸேவித்துவாருமென்று நியமித்தாரென்னுதல். (பிள்ளையென்றது) வடக்குத்திருவீதிப்பிள்ளை. அப்படி ஆழ்வார்தாம் பொலிந்து நின்றபிரானையும் ஸேவிக்கச்சொல்லி நியமித்தாரோவென்ன அருளிச்செய்கிறார் (கட்டுண்ணப்பண்ணிய—நீள்குடக்கூத்தனுக்கித்யாதி) இவ்விரண்டும் க்ருஷ்ண

---

† திருச்சந்த-115. § திருவாய் 4-10-10.

இது ஸஹஜஸ்வபாவமாய்த்து ஆழ்வாருக்கு. ஆழ்வாரடியாக அடிமைகொள்ளுகையாலே பகவத்விஷயத்துக்கு ஔபாதிகம்.

(சடகோபன்) என்னுடைய ஶாட்யத்தைப்போக்கி என்னை ரக்ஷித்தவர். (என்னையாண்டிடும் தன்மையான் சடகோபன்) /"அவனடியார் சிறுமாமனிசரா யென்னையாண்டார்" என்று ஆழ்வார் தம்மை யாண்டுபோருமவர்கள் ததீயராம்படியாலல் என்னை ஆழ்வாராண்டுபோரச்சொல்லவேண்டாவிறே. (என்னை யாண்டிடும் தன்மையான் சடகோபன்) என்னை ரக்ஷித்து, சடகோபனென்கிற பட்டப்பேர் சூடினவர்.

(என்நம்பியே) அவரேயன்றோ என்குறைவை நிறைக்கும்படியான நிறைவையுடையவர். என்குறைவாகிற பாழ்ந்தாறு நிறையும்போது அவருடைய பூர்த்தியேவேண்டாவோ? ஸத்வநிஷ்டர்க்கு பஹிஷ்டனான வென்னைத் தாமங்கீகரித்தும், அப்ரியங்களிலும் அஹிதங்களிலும் கைவளர்ந்து போந்தவென்னை ப்ரியஹிதங்களிலே மூட்டியும், அநுபகாரகனான என்னைக் கைங்கர்யம்கொண்டும் போந்த பூர்த்தியையுடையவர் ஆழ்வாரேயன்றோவென்று ஸ்வஸித்தாந்தத்தை த்ருடீகரிக்கிறார்.

நான்காம்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

விஷயமாகையாலே தாம்விட்ட விஷயத்திலே நியமிக்கிறரென்று தோற்றுகிறது. ஆத்மாவுக்கு சேஷியானவெம்பெருமான் ஆண்டுபோருகிறதொழிய இவ்வாழ்வார் ஆளக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அவனடியார் சிறுமாமனிசரென்று துடங்கி) பாழ்ந்தாறென்றது – பாழாய்க்கிடக்கிற பெருங்குழி என்றபடி. அவதாரணத்துக்குப்பொருள் (ஸத்வநிஷ்டருக்கும் பஹிஷ்டனனவென்று துடங்கி).

நான்காம் பாட்டின்
அழகியமணவாயப்பெருமாள் நாயனார் அரும்பதம்
முற்றிற்று:

---

/ திருவாய் 8-10-3.

### ஐந்தாம் பாட்டு

5. நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்
கன்பனா யடியேன் சதிர்த்தேனின்றே.

பதவுரை:—அடியேன்—(இன்று 'அடியேன்' என்று சொல்லும்படியிருக்கும்) *நான்*, முன் எலாம்—(*ஆழ்வாருடைய விஷயீகாரம் பெறுவதற்கு*) *முன்பெல்லாம்*, பிறர் — *அயலாருடைய*, நல் பொருள் தன்னையும்—*நல்லபொருள்களை*, நம்பினேன்—*ஆசைப்பட்டுக்கிடந்தேன்*; (பிறர்) மடவாரையும்—*பிறருடைய ஸ்த்ரீகளையும்*, நம்பினேன்—*விரும்பிப்போந்தேன*; இன்று—*இப்போதோவென்றால்*, செம்பொன் மாடம்—*செவ்விய பொன்னாற் சமைத்த மாடங்களையுடைய*, திரு குருகூர் நம்பிக்கு—*திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருக்கு*, அன்பன் ஆய்-*பக்தனாகப்பெற்று*, சதிர்த்தேன்–*சதிரையுடையேனானேன்*.

---

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்

*அவ:—அஞ்சாம்பாட்டு. ஸத்துக்களும் கைவிடும்படி உம்முடைய பக்கல் குற்றமேதென்னில், அநாதிகாலம் பரதாரபரிக்ரஹம் பரத்ரவ்யாபஹாரம் பண்ணிப்போந்து இளிம்பனானேன். இன்று ஆழ்வாருடைய நிர்ஹேதுக வீஷயீகாரத்தாலே சதுரனானேனென்கிறார். இதுக்கு முன்புண்டான அநாத்மகுணங்களை அநுஸந்தித்து ஆழ்வாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே க்ருதக்ருத்யனானேனென்கிறார்.*

*வ்யா:—* (நம்பினேன் பிறர் நன்பொருள்தன்னையும்) *பகவதீயமான ஆத்மவஸ்துவை என்னதென்றிருந்தேன்;* 140 **"चोरेणात्मापहारिणा"** (சோரேணாத்மாபஹாரிணா) *என்கிறபடியே ஸர்வேச்வரனதான ஆத்மவஸ்துவை அபஹரித்தேன். பிறர் நன்பொருளென்றது - ஐக்யச்ருதிகளும் சொல்லச்செய்தே பேதம் ஜீவிக்கைக்காக. பொருளென்கிறது-விரோதிவ்யாவ்ருத்தமான ஸ்வரூபம்.*

(நம்பினேனித்யாதி) *ஆத்மாபஹாரத்தாலே பலித்த பலம் சொல்லுகிறார். பகவத்விஷயத்திலே* 141 **"महाविश्वासपूर्वकं"** (மஹாவிச்

வாஸ பூர்வகம்) என்றிருக்குமிருப்பெல்லாம் ஸ்த்ரீகள் பக்கலிலேயே ஆகிறது. ¶"விரைக்குழல் மடவார்கலவியைவிடு" என்றும், §"சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது" என்றும் அபியுக்தரான ஏன்னுசார்யர்கள் சொன்னவிஷயத்தைக்கிடீர் நான் அநாதிகாலம் விச்வஸித்துப் போந்தது. மடவாரென்கிற பஹுவசநத்தாலே ஒன்றில் பர்யாப்தமாகாமையாலே கண்டவிடமெங்கும் நுழையும்படி சொல்லுகிறது.

(செம்பொனித்யாதி) ஆழ்வார் திருவவதரிக்கையாலே அங்குள்ள தடங்க இவருக்கு ச்லாக்யமாயிருக்கிறபடி. இவ்வூரிலைச்வர்யத்துக்கடியான பூர்த்தியையுடைய ஆழ்வார் நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே தம்பக்கலிலே பக்தியையுண்டாக்கினபடி. /"வரவாரொன்றில்லையால் வாழ்வினிதால்" என்கிறபடியே வந்தவழி அறிந்திலேன். இங்ஙனே பலிக்கக்கண்டவித்தனை. அபூர்ணமான பகவத்விஷயத்திலே அடியனுமவனுகாதே, பூர்ணரான ஆழ்வாருக்கு அடியேனுய் சதுரனுனேனென்கிருர். ஸ்த்ரீகளை விச்வஸித்து இளிம்பனுன நான் ஆழ்வாரைப்பற்றி இன்று சதுரனுனேனென்றுமாம்.

அஞ்சாம்பாட்டுக்கு நஞ்சீயர் வ்யாக்யானம் முற்றிற்று.



## நம்பிள்ளை ஈடு

அவ:—அஞ்சாம்பாட்டு. (நம்பினேனித்யாதி) உம்மைப் புன்மையாகவும், உமக்கு ஆழ்வார் ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகராகவும் சொன்னீர். உம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் அவர் உமக்கு உபகரித்த எல்லையையும் சொல்லிக்காணீரென்னச் சொல்லுகிருர்.

வ்யா:—(நம்பினேனித்யாதி) இது என்னுடைய புன்மையிருந்தபடி. பிறர்பொருளை நம்பினேன். இப்போது பொருளென்கிறது — அர்த்தத்தை. அதாவது—ஆத்மவஸ்து. எங்ஙனேயென்னில். 142 "द्रव्यं गुणस्तथा कर्म जातिश्चेतस्तदाश्रयः" (த்ரவ்யம் குணஸ்ததா கர்ம ஜாதிச்சேதஸ்ததாச்ரய:) என்று பதார்த்தம் சொல்லுகிறவிடத்தே த்ரவ்யங்களில் ப்ரதாநமாக ஆத்ம

¶ பெரி-திரு 9-8-1. § திருவாய் 2-10-2. / பெரிய-திருவ-54.

வஸ்துவை நிச்சயித்ததிறே. அத்தையிறே இவர் முன்பு அப ஹரித்ததென்கிறது. /"கள்வனேனானேன்" என்றும் †"வன் கள்வன்" என்றும் சொல்லுகிறபடிகளை இவரும் சொல்லுகிறார். பகவச்சேஷத்வத்தளவிலும் நில்லாதே ஆழ்வாரளவும் வரும்படியான ஆத்மவஸ்துவைக்கிடீர் நான் அபஹரித்தது. ஆழ்வாரளவும் வந்தவன்றிறே இது அநந்யார்ஹமாய்த்தாவது.

பிறரென்று—ஒருவிஷயத்தை விவக்ஷிக்கிறது. த்ரவ்யத்தினுடைய ச்லாக்யதைக்கும் உடையவனுடைய ச்லாக்யதைக்கும் தக்கபடி கனத்திறே ப்ராயச்சித்தமிருப்பது. ப்ராஹ்மணனுடைய த்ரவ்யத்தை அபஹரித்தாப்போலன்றிறே சண்டாளனுடைய த்ரவ்யத்தை அபஹரித்தால் ப்ராயச்சித்தமிருப்பது. த்ரவ்யங்களிலும் இப்படியே குருலகு ஸ்வபாவமிருக்கும்படி. ஆத்மவஸ்து கௌஸ்துபஸ்தாநீயமாய், இத்தையுடையவன் ஸர்வேச்வரனாயிறே இருப்பது.

(நம்பினேன் மடவாரையும்) ரத்நாபஹாரம்பண்ண அஞ்சாதவன் விறகும் வைக்கோலும் களவுகாணவஞ்சுமோ? ஈச்வரன் என்னதென்றபிமாநித்த வஸ்துவை அபஹரித்தவன் தேஹபரிக்ரஹம் பண்ணினார் என்னதென்றபிமாநித்த வஸ்துவை அபஹரிக்கச் சொல்லவேணுமோ? (முன்னெலாம்) இப்படி ஆத்மாபிமாநம் பண்ணியும் விஷயப்ரவணனாயும் போந்தகாலம் ஸாவதியாகப் பெற்றதாகிலும் லாபமுண்டிறே. ஈச்வரனோபாதி ஆத்மவஸ்துவும் நித்யம், காலமும் அநாதியாகையாலே முன்புள்ள காலமெல்லாமென்றபடி.

உம்முடைய தண்மை குறைவற்றிருந்தது. ஆழ்வார் உமக்கு நிர்ஹேதுகமாக உபகரித்ததேதென்னச் சொல்லுகிறார் (செம்பொன்மாடவித்யாதி). இப்படி அநாதிகாலம் ஆத்மாபஹாரம் பண்ணியதும், விஷயப்ரவணனானதும் இழவுக்கு உடலாகையன்றிக்கே ஸௌரண்யப்ரபாவத்தாலே பேற்றுக்கு உடலாக க்ருஷி பண்ணினாரைப்போலே பலித்துக்கொண்டு நிற்கக்கண்டேன். (செம்பொன் மாடத்திருக்குருகூர் நம்பிக்கு) ஆத்மாபஹாரம் பண்ணியும்

/ பெரிய-திரு 1-1-5. † திருவாய் 5-1-4.

அந்யபரனுய்ப்போந்தானென்றும் என்னுடைய பூர்வவ்ருத்தத்தை யாராய அத்தனையபூர்ணரோ ஆழ்வார்?

(இன்று அன்பனுய்) என்னதென்றிருக்கைதவிர்ந்து அவனுக்கென்றிசைந்து இதரவிஷயத்திலே ஸ்நேஹத்தைவிட்டு பகவச்சேஷத்வத்தளவிலும் நில்லாதே அதினெல்லையான ததீயசேஷத்வத்தினளவிலே நின்றார் ஆழ்வார். இந்த ப்ரதிபத்திக்ரமம் வேண்டாதே எனக்கு முதலடியிலே இதெல்லா முண்டாய்த்தென்கிறார்.

(அடியேன் சதிர்த்தேன்) முன்பு தேஹாத்மாபிமாநம் பண்ணிப் போந்தநாளிறே நானென்பது. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபின்பு அடியேனென்றாய்த்து இவருடைய அஹமர்த்த ப்ரதிபத்தியிருப்பது. (சதிர்த்தேன்) ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை என்னதென்றிருக்கைக்கும் இதரவிஷய ப்ரவணனாகைக்கும் மேற்பட சதிர்க்கேடில்லையிறே. அவற்றைவிட்டு பகவச்சேஷத்வத்தளவிலும் நில்லாதே ஆழ்வாரளவும் வருமவனாம்படியான சதிரையுடையவனானேன். ஆசார்யர்களை நம்பி என்கைக்கும், அவர்களழைத்தால் அடியேனென்கைக்கும் ஹேது ஸ்ரீமதுரகவிகள் வாஸனையாய்த்து.

அஞ்சாம்பாட்டின் நம்பிள்ளைஈடு முற்றிற்று.



# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

அவ:— அஞ்சாப்பாட்டில், உம்மைப் புன்மையாகவும், உமக்கு ஆழ்வார் ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகராகவும் சொன்னீர். உம்முடைய புன்மையையும் உமக்கு ஆழ்வாருபகரித்த நன்மையையும் சொல்லிக்காணீரென்னச் சொல்லுகிறார்.

வ்யா:—(நம்பினேனித்யாதி). இது என்னுடைய புன்மை யிருந்தபடி. (பிறர் நன்பொருள்—நம்பினேன்) பிறரென்கிறது— ஸர்வேச்வரனை. நன்பொருளென்கிறது – ஆத்மவஸ்துவை. த்ரிவிதாத்மவர்க்கத்துக்கு அவ்வருகாய், விஸஜாதீயமான வைலக்ஷண்யத்தை உடையவனாகையாலே பிறரென்கிறது. 143 "उत्तमः पुरुषस्त्वन्यः" (உத்தம: புருஷஸ்த்வந்ய:) என்னக்கடவதிறே. பொருளென்று-த்ரவ்யம். நன்பொருளென்றது – விலக்ஷணமான ஆத்மவஸ்துவை. 144 "द्रयाणि नव ते विदुः" (த்ரவ்யாணி நவ தே விது:) என்று த்ரவ்யங்களில் ப்ரதாநமாக ஆத்மவஸ்துவை நிச்சயித் தார்களிறே. அத்தையிறே முன்புநான் அபஹரித்தது. நம்புதல்

---

அரும்பதம்:—அஞ்சாம்பாட்டு. "புன்மையாகக்கருதுவர்" என்று புன்மையையும், "அன்னையாய்" இத்யாதியில் ஆழ்வாருபகரித்தபடிகளும் சொல்லியிருக்க, இப்பாட்டிலும் சொல்லுவானென்னென்கிற சங்கையைப் பரிஹரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி விசேஷ ப்ரச்நமுகேந அவ தாரிகையருளிச்செய்கிறார் (உம்மையித்யாதி). (சொல்லிக்காணீர்) என்றது விசேஷித்துச் சொல்லிக்காணீரென்றபடி.

ஹார்த்த தாத்பர்யமருளிச்செய்து அந்வயித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (பிறரித்யாதி). பிறரென்று-ஈச்வரனைச்சொல்லும் ப்ரகாரத்தை உபபாதிக்கிறார் (த்ரிவிதாத்மேத்யாதி). (அவ்வருகு) உத்கர்ஷாவதி. இதுக்கு ஹேது (விஸஜாதீயேத்யாதி.) ஆத்மாவைச்சொல்லும் ப்ர காரத்தைக் காட்டுகிறார் (பொருளென்றித்யாதி). வைசேஷிகமதரீத்யா நன்மையை உபபாதிக்கிறார் (த்ரவ்யாணீத்யாதி.) 145 "पृथिव्यप्तेजो वाय्वाकाशकालदिगात्ममनांसि नवैव" (ப்ருதிவ்யப்தேஜோவாய்வாகா ஶகாலதிகாத்ம மநாம்ஸி நவை) என்று ஆத்மாவையும் த்ரவ்யமாகச் சொன்னான் வைசேஷிகன். நம்பினேனென்றதுக்குத் தாத்பர்யம் (அத்தை யித்யாதி.)

ஆசைப்படுதல். பரத்ரவ்யத்தை ஆசைப்படுகையிறே அபஹாரமாவது. §"வன் கள்வன்" என்றும் /"கள்வனேனானேன்" என்றும் ஆழ்வார்களநுஸந்தித்ததிறே இவர்க்கு முதல். 140 **"किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा"** (கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா) முதல் பகவச்சேஷத்வத்தளவில் நில்லாதே ஶேஷத்வ காஷ்டையிலே நிற்கிற ஆத்மவஸ்துவைக்கிடீர் நான் அபஹரித்தது; ததீயஶேஷமானவன்றிறே இவ்வாத்மாவுக்கு அநந்யார்ஹத்வமுள்ளது.

அபஹாரத்தில் வந்தால் த்ரவ்யத்தினுடைய ச்லாக்யதைக்கும் அபிமாநித்தவன் ச்லாக்யதைக்கும் தக்கபடி ப்ராயச்சித்தம் கனத்

---

சப்தார்த்தம் (நம்புதலித்யாதி). ஆசை அபஹாரமானபடியென்னென்ன, (பரத்ரவ்யத்தையித்யாதி). தம்மை ஆத்மாபஹாரியாக அநுஸந்திக்கைக்கடியென்னென்ன (வன்கள்வனித்யாதி), வன்கள்வனென்றது-திருவாய்மொழி. கள்வனென்றது-திருமொழி. நன்மையேதென்ன அருளுகிறார் (முதலித்யாதி). ஸிம்ஹாவலோகநந்யாயேந நன்பொருளென்னுதல். தன்னை என்றதுக்குத் தானான தன்மையாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பகவதித்யாதி). சேஷத்வகாஷ்டையிலே நிற்கிற ஆத்மவஸ்து என்றத்தை உபபாதிக்கிறார் (ததீயேத்யாதி). தச்சேஷத்வம் ததீயசேஷத்வ வ்யாப்தமாகையாலே ததீயசேஷத்வமில்லாதபோது தச்சேஷத்வம் குலைகையாலே அந்யார்ஹத்வம் ப்ரஸக்தமாம். அத்தாலே அநந்யார்ஹத்வமில்லையாமென்று கருத்து.

பிறரென்று-ஸ்வாமி வைலக்ஷண்யம் சொன்னத்தாலும், நல் என்று த்ரவ்ய வைலக்ஷண்யம் சொல்லுகையாலும் பலித்ததோரர்த்தத்தையருளிச்செய்கிறார் (அபஹாரத்தில் வந்தாலித்யாதி). 146 **"तृणकाष्ठापहारेण यो दोषः परिकीर्तितः। स्वर्णरत्नापहारेपि तावानेव भवेत्कथं। कदर्यस्वापहारेण यो दोषः परिकीर्तितः। श्रोत्रियस्वापहारेपि तावानेव भवेत्कथं॥ आत्मवस्तु यतोनर्घमात्मेशस्तु परः पुमान्। तस्मादस्यापहरणे दोषस्यान्तो नविद्यते॥"** (த்ருணகாஷ்டாபஹாரேண யோ தோஷ: பரிகீர்த்தித:। ஸ்வர்ணரத்நாபஹாரேபி தாவாநேவ பவேத்கதம்। கதர்யஸ்வாபஹாரேண யோ தோஷ: பரிகீர்த்தித:। ச்ரோத்ரியஸ்வாபஹாரேபி தாவாநேவ பவேத்கதம்॥ ஆத்மவஸ்து யதோநர்க்கமாத்மேஶஸ்து பர:

---

§ திருவாய் 5-1-4. / பெரி-திரு 1-1-5.

திருக்குமிறே. ப்ராஹ்மணன் வஸ்துவை பஹரித்தாப்போலன்றே சண்டாளன் வஸ்துவை அபஹரித்தால். த்ரவ்யங்களிலும் குரு லகுபாவத்தாலே ப்ராயச்சித்தவைஷம்யமுண்டிறே. விறகு வைக்கோல் களவுகண்டாப்போலன்றிறே ரத்நத்தைக் களவுகண்டால்; ஆத்மவஸ்து ஸ்ரீகௌஸ்துபஸ்தாநீயமாய், உடையவன் ஸர்வேச்வரனாயிறே யிருப்பது.

(நம்பினேன் மடவாரையும்) ஈச்வரனுக் கபிமதமான வஸ்துவை அபஹரித்த நான், தேஹாத்மாபிமாநிகள் என்னதென்றபிமாநித்த வஸ்துவை அபஹரிக்கச்சொல்லவேணுமோ? ராஜரத்நாபஹாரம் பண்ண அஞ்சாத நான் கதர்யனுடைய விறகும் வைக்கோலும் அபஹரிக்க அஞ்சுவனோ? இத்தால் ஈச்வரனுக்கபிமதமான வஸ்துவையும் அபஹரித்தேன். அந்யருடைய அபிமத விஷயத்தையும் அபஹரித்தேனென்றபடி. மடவாரென்கையாலே-அங்கும் அநந்யார்ஹங்களையே அபஹரித்தேனென்றபடி.

(முன்னெலாம்) இப்படி தேஹாத்மாபிமாநியாயும் விஷயப்ரவணனாயும் போந்தகாலந்தான் ஸாவதியாகப் பெற்றதோ? ஈச்வரனோபாதி ஆத்மாவும் நித்யன், காலமும் அநாதி, அசித் ஸம்பந்தமும் அநாதி, ஆகையாலே முன்புள்ள காலமெல்லாம் இதுவே யாத்ரையென்கை.

உம்முடைய தண்மை குறைவற்றிருந்தது; ஆழ்வார் உமக்கு நிர்ஹேதுகமாக உபகரித்த வளவேதென்ன, அத்தைச்சொல்லுகிறார் மேல் (செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கு) என்னுடைய

---

புமாந் । தஸ்மாதஸ்யாபஹரணே சோஷஸ்யாந்தோ ந வித்யதே) என்கிற வசநங்கள் இவ்விடத்தில் அநுஸந்தேயங்கள். கதர்யன்-க்ஷுத்ரன். பிறர்நன் பொருளென்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (ஈச்வரனுக்கித்யாதி).

ஸ்த்ரீகளென்னாதே மடப்பத்தையிட்டு விசேஷித்ததுக்கு ப்ரயோஜநம் (மடவாரித்யாதி.) ஹார்த்தாபிப்ராயம் (இப்படியித்யாதி) அநாதியாக ஆத்மாபஹாரம் வந்ததுக்கு ஹேதுவையருளிச்செய்கிறார். (ஈச்வரனோபாதியித்யாதி.) மேலுக்கவதாரிகை (உம்முடையவித்யாதி.) நம்பிபததாத்பர்யம் (என்னுடைய வித்யாதி) மடவாரையுமென்றதைக் கடாக்ஷித்து,

பூர்வவ்ருத்தத்தை ஆராயுமத்தனை அபூர்ணரோ ஆழ்வார்? / (என்னையுபேக்ஷித்தகாலமிவ்வளவு, பாபமிவ்வளவு என்று பார்க்கும்படியன்றே ஆழ்வாருடைய பூர்த்தி. நான் ஆத்மாபஹாரம் பண்ணினேன், விஷய ப்ரவணனானேனென்று கைவிடும்படியன்றே).

ஆழ்வார் திருவடிகளை நீர்தாம் கிட்டினபடி யென்னென்ன, விஷயங்களுக்கு அர்த்தம்தேடி அர்த்தாபஹாரத்துக்கிடம் பார்த்துத் திரியாநிற்க, அச்செம்பொன் மாடத்தைக் களவுகாணப்புக்கேன். அங்கே வைத்த மாநிதியைக்கண்டு அகப்பட்டேனென்கிறார். இவர்க்கு வைத்தமாநிதி ஆழ்வாரிறே; ஆழ்வார் திருவடிகளோபாதி திருநகரியும் இவர்க்கு ஸ்ப்ருஹணீயமாயிருக்கையாலே திருநகரியைக் கவிபாடுகிறார்.

(இன்று அன்பனாய்) இதுக்கு முன்பு எனக்கொரு நினைவின்றிக்கேயிருக்க அசிந்திதமாக ஆழ்வார் திருவடிகளிலே ப்ரவணனாகக் கண்டேன். அநாதிகாலம் ஆத்மாபஹாரம் பண்ணியும் விஷயப்ரவணனாயும் போந்தவிது இழவுக்குடலாகையன்றிக்கே, ஶரண்ய ப்ரபாவத்தாலே பேற்றுக்குடலாக க்ருஷிபண்ணினாரைப் போலே பலித்துக்கொடு நிற்கக்கண்டேன்; நான், என்னது என்றிருக்கை தவிர்ந்து இதரவிஷயங்களில் விரக்தராய் பகவச்சேஷத்வதத்தளவில் நில்லாதே அதினெல்லையான ததீயஶேஷத்வத்தள

---

செம்பொன்மாடமென்று வர்ணித்ததுக்கு சங்காபரிஹாரரூபேண தாத்பர்யம் (ஆழ்வாரித்யாதி.) வர்ணித்ததுக்குத்தாத்பர்யாந்தரம் (ஆழ்வார் திருவடிகளித்யாதி) ஆழ்வார் நிதியானால் திருநகரியை வர்ணிப்பானென்னென்ன (ஆழ்வாரித்யாதி).

இன்றேயென்றதை இங்கே அந்வயித்து ப்ரதீகம் (இன்றன்பனா யென்று,.) (ஒருநினைவின்றிக்கே) என்றது-ஆத்மாபஹாரம் அதிக்ரூரமென்றும், விஷயப்ராவண்யமாகாதென்றும் பகவச்சேஷத்வமுத்தேச்யமென்றும், ததீயசேஷத்வம் பரமோத்தேச்யமென்றும் இப்படி ஹிதசிந்தையின்றிக்கே என்றபடி. இது-இன்றென்றதுக்குத் தாத்பர்யம்.

---

/ குண்டலிதம் அதிகபாடம்.

விலே நின்றூர் ஆழ்வார்; இந்த க்ரமாபேக்ஷையின்றிக்கே முதலடியிலே நான் ஆழ்வார் திருவடிகளிலே ப்ரவணனாகப் பெற்றேன்.

(அடியேன்) ஆழ்வாருடைய வைபவத்தை அநுஸந்தித்து 61 "गुणैर्दास्यमुपागतः" (குணைர்த்தாஸ்யமுபாகத:) என்கிறபடியே அதுக்குத் தோற்று அடியேனென்கிறூர். ஆசார்யர்களை நம்பி யென்னக் கற்பித்தாப்போலே ஆசார்யர்களழைத்தால் அடியேனென்கிறதும் ஸ்ரீமதுரகவிகள் வாஸனையாலேயாயிற்று.

(சதிர்த்தேன்) சதிரையுடையனானேன். ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை என்னதென்றிருக்கைக்கும் இதரவிஷய ப்ராவண்யத்துக்கும் மேற்பட்ட சதிர்க்கேடில்லையிறே; அவற்றை விட்டு பகவத்விஷயத்தளவிலே நில்லாதே ஆழ்வாரளவும் வரும்படியான சதிரையுடையனானேன்.

அஞ்சாம்பாட்டுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

இன்றென்ற பதத்தை உட்கொண்டு விவரிக்கிறூர் (அநாதித்யாதி வாக்யத்ரயத்தாலே.) நம்பியென்றதைக் கடாக்ஷித்து நானென்னாதே அடியேனென்றதுக்குத் தாத்பர்யம் (ஆழ்வாருடையவித்யாதி.) இத்தால் ஓரர்த்த விசேஷம் ஸூசிதமாயிற்றென்கிறூர் (ஆசார்யர்களித்யாதி.) சதிர் இன்னதென்று வ்யாவ்ருத்தி பூர்வகமாகவருளிச்செய்கிறூர் (ஈச்வரேத்யாதி.)

அஞ்சாம்பாட்டு அரும்பதம் முற்றிற்று.



# அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யானம்

அ:— அஞ்சாம்பாட்டு. (நம்பினேனித்யாதி), கீழ் "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்" என்று சொல்லக்கேட்டவர்கள், அந்தப் புன்மையாகிறதேதென்றும், அவற்றிலே ஒன்றை இரண்டைச் சொல்லீரென்றும், "பெரிய வண்குருகூர்நகர் நம்பிக்காளுரியேனென்றீர், நீர் தாம் ஆழ்வாருக்கு அடிமையான ப்ரகாரமென்? முன்பு என்னநிலையிலே நின்று பின்பு ஆழ்வாரைக் கிட்டினீர்? நீர் ஆழ்வாரைக்கிட்டுகைக்கு ருசி ஜநகரார்.?" என்றும் கேட்க, "அநாதிகாலம் அஹங்காரார்த்த காமபரவஶனாய், அதில் ப்ரதாந புருஷார்த்தமான காமம் அர்த்த ஸாத்யமாகையாலும், அவ்விஷயஸங்கம் ஒன்றிரண்டென்று அளவில் நில்லாமையாலே அவ்விஷயங்கள் பலவற்றையும் போகநுபவிக்கைக்கும், அதுக்கு அர்த்தார்ஜநார்த்தமாகவும், தேஶாந்தர பர்யடநம் பண்ணுகிற்க, திருநகரியில் மாடங்கள் மேருசிகரத்தைக் கொடுவந்து வைத்தாப்போலே மின்னித்தோற்றிற்று. இதொரு தேஶவிஶேஷமிருந்தபடியென்? இத்தேஶத்தின் விஶேஷங்களை ஆராய்ந்து விலக்ஷண விஷயங்களுண்டாகில் அநுபவிக்கிறோமென்று ஊரிலேபுக்கேன், அதுவே பற்றாசாக அத்தேஶநிர்வாஹகரான ஆழ்வார் திருவடிகளிலே ஆதரம்ஜநித்து, அவர்க்கே ஆளாய் விஷயாதிகளை வென்றேன். இதிறே நான் நின்ற நிலை" என்று அவர்களுக்கு உத்தரம் சொல்லுகிறார்.

வ்யா:—(நம்பினேனித்யாதி) கீழ் தாமருளிச்செய்த புன்மை எண்ணித்தலைக்கட்டப் போகாமையாலே அதில் ப்ரதாநமாய், அவையெல்லாவற்றையும் தனக்குள்ளே உடைத்தாயிருப்பதொன்றிரண்டை உபாதாநம் பண்ணுகிறார் (நம்பினேன் பிறர் நன்பொருள்

அரு;—அஞ்சாம்பாட்டு. (நம்பினேன்) விலக்ஷண விஷயங்களுண்டாகில், அநுபவிக்கலாமென்றும், செம்பொன் மாடமாகையாலே அர்த்தார்ஜநம் பண்ணலாமென்றும் ஊரிலே போந்தேனென்றது—"மடவார், செம்பொன்மாடம்" என்றதைக் கடாக்ஷித்து.

தன்னையும் நம்பினேன் மடவாரையும்) அதில் ப்ரதாநதோஷமாயறுவன-ஆத்மாபஹாரமும் அந்யவிஷய ஸங்கமுமிறே. ஆத்மாபஹாரமாவது-பகவச்சேஷமான ஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ர புத்திபண்ணி ஆதரித்துப் போருகை.

(பொருள்) வஸ்து. 147 "**सत्यञ्च**"(ஸத்யஞ்ச) என்றும், /"உள்ளது" என்றும் சொல்லும்படி உண்டாயேபோருமது; அஹமர்த்தமாய், என்றும் ப்ரகாசிதமேபோரும் வஸ்து. 148 "**नाभावो विद्यते सतः**" (நாபாவோ வித்யதே ஸத:) என்கிறபடியே. (நன்பொருள்) விலக்ஷண த்ரவ்யம்; § "எண்பெருக்கந் நலத்தொண்பொருள்" என்றும், † "நன்றாய் ஞானங்கடந்து" என்றும் ஆழ்வார்பாடே கேட்டுப்போருகையாலே நன்பொருளென்கிறார். நன்மையாவது 149 "**पञ्चभूतात्मकं वस्तु**" (பஞ்சபூதாத்மகம் வஸ்து) என்றும், ‡ "மேம்பொருள்" என்றும் சொல்லுகிறபடியே தேஹத்துக்கு வஸ்துதை உண்டேயாகிலும் அதுபோலே அநித்யமாய் அநவரத விகாராஸ்பதமாய் அத்யந்த ஹேயமாய் அஜ்ஞாநமாய் அஸுகமாய் அபோக்யமாயிருக்கையன்றிக்கே, நித்யமாய் நிர்விகாரமாய் அத்யந்தவிலக்ஷணமாய் ஸ்வயம் ப்ரகாசமாய் ஸுகமாய் ஸ்வபாவதோ போக்யமாயிருக்கையாலே நன்பொருளென்கிறார்.

(பிறர்நன்பொருள்) இங்குப்பிறரென்பது - ஸர்வேச்வரனை; பிறரென்பது - அந்யரையிறே. 143 "**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मे** –

---

(தோஷமாயறுவன) என்றது–அற்றதென்றபடி. இந்த வஸ்துதான் நித்யமாயிருக்குமென்றருளிச்செய்கிறார் (ஸத்யஞ்சவென்று துடங்கி.) உள்ளதாய்க்கொண்டு தோற்றும் க்ரமமென்னென்ன அருளிச்செய்கிறார். (அஹமர்த்தமாயென்று துடங்கி.) நித்யமாயிருக்குமென்கைக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (நாபாவோ வித்யதே ஸத:) என்று. ஆத்மவஸ்து விலக்ஷணமென்றறிந்தபடி என்னென்னவருளிச்செய்கிறார் (எண்பெருக்கென்று துடங்கி.)

ஈச்வரனை அந்யனாகச் சொல்லிற்றோவென்ன அருளிச்செய்கிறார் (உத்தம: புருஷஸ்த்வந்ய:) என்றுதுடங்கி. வித்யையாலே சேதனனையும்

/ திருவாய் 1-2-4. § திருவாய் 1-2-10. † திருவாய் 8-8-6.
‡ திருமாலை-38.

त्युदाहृत:"(உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத் மேத்யுதாஹ்ருத:) 150"विद्याविद्ये ईशते यस्तु सोन्य:" (வித்யாவித்யே ஈஶதே யஸ்து ஸோந்ய:) என்கிறபடியே சேதநாசேதந விஸஜாதீயனுன ஸர்வேச்வரனுய்த்து- அந்யனுகிருன்; §"உயர்வறவுயர்நல முடையவன்" / "எல்லையிலந் நலம்" ‡"எப்பால்யவர்க்கும் நலத்தா லுயர்ந் துயர்ந்து அப்பாலவன்" என்றும் பலபடியாலும் ஈச்வரனைச் சிதசித்வ்யாவ்ருத்தனுக ஆழ்வார் பாடே கேட்டுப்போருகையாலே அந்த வ்யாவ்ருத்தி தோற்றப் பிற ரென்கிருர். அந்யனுகிருன் - கூடியிருக்கச்செய்தேயும் கார்யங் களில் கூட்டுப்படாதவனிறே; அதில் சிதசித்துக்களோடே கூடி யிருக்கச்செய்தேயும் பரிணுமாஜ்ஞத்வது:க்கித்வங்கள் தன்பக்க லிலே ஏறிப்பாயாமலிருக்கையாலே பிறரென்கிருர். ஸர்வ பூதங் களுக்கும் அந்தர்யாமியாயிருக்கச் செய்தேயும் அபஹதபாப்மாவா யிருக்குமவனிறே அவன்; இவ்வர்த்தம் †"அவையாயவையல்லனு மாய் கேசவன்" என்று ஆழ்வார்பாடே கேட்டுவைப்பரிறே.

அவன், என்னதென்றுபோரும் பதார்த்தமாய்த்து இவ்வாத்ம வஸ்து; நன்பொருளென்று - அசித்வ்யாவ்ருத்தி சொல்லிற்று; பிறர் நன்பொருளென்று - ஈச்வர வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. ஸ்வப்ர காஶத்தாலே அசித்வ்யாவ்ருத்தனுயிருக்கும்; ஸ்வத்வத்தாலே ஈச்வரவ்யாவ்ருத்தனுயிருக்கும். ஶரீரியாய் அசித்வ்யாவ்ருத்தனு

---

அவித்யையாலே ப்ரக்ருதியையும் சொல்லுகிறது; ஈஷ்டேயென்று சொல்லவேண்டியிருக்க, ஈசதேயென்கிற பஹுவசநம் சாந்தஸம். பிற ரென்றது-ஸர்வஸ்மாத்பரனுதல், அந்தர்யாமியாதல். இத்தையருளிச்செய் கிருர் (அந்யனுகிருனித்யாதி). சிதசித்விலக்ஷணனென்று இவரறிந்தபடி என்னென்னவருளிச்செய்கிருர் (உயர்வற உயர்நலமுடையவனென்று துடங்கி.) தத்கததோஷங்கள் தட்டாதவென்னுமிடம் எங்கேகேட்டு வைத்தாரென்ன அருளிச்செய்கிருர் (இவ்வர்த்தமவையாயென்றுதுடங்கி.)

ஆத்மவஸ்துவுக்கு ஈச்வரனேடு அசித்தோடு வ்யாவ்ருத்தியுண்டென்னு மத்தை ப்ரகாரபேதேந வருளுகிருர் (நன்பொருளென்றித்யாதி.) ஈச்வரனும் போக்யனுயிருக்க, போக்யதையாலே வ்யாவ்ருத்தி சொல்லக்கூடுமோ

---

§ திருவாய் 1-1-1. / திருவாய் 1-2-4. ‡ திருவாய் 1-7-2.
† திருவாய் 6-4-1.

யிருக்கும்; ஶரீரமாய் ஈச்வரவ்யாவ்ருத்தனுயிருக்கும். போக்தாவாய் அசித்வ்யாவ்ருத்தனுயிருக்கும்; போக்யமாய் ஈச்வரவ்யாவ்ருத்தனு யிருக்கும். (பிறர்நன்பொருள்) உடைமையும் விலக்ஷணமாய் உடைய வனும் விலக்ஷணனுயிருக்கும். இது - தேஹேந்த்ரியமந: ப்ராண தீப்யோந்யமாயிருக்கும்; அவன் ப்ரதாந புருஷாவ்யக்தகாலாநாம் பரமனுயிருக்கும்.

(நன்பொருள் தன்னையும்) இவ்வஸ்துவைக்கிடீர் நான் ஆசைப் பட்டுப்போந்தது; அவனுடைய விபூதிமாத்ரமாயிருப்பதொரு வஸ்துவை அபஹரித்தேனோ? அவன் மார்பிலேவைத்து மநநம் பண்ணும்படியான கௌஸ்துபத்தையன்றோ நான்களவு கண்டது. 151 "आत्मानमस्य जगतो निर्लेपमगुणामलं। बिभर्ति कौस्तुभमणिस्वरूपं भगवान् हरिः॥" (ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணு மலம்। பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவாந் ஹரி:) என்கிற படியே /"அறவனையாழிப் படையந்தணனை" என்று சொல்லும் படியான ப்ரஹ்மஸ்வத்தையன்றோ நான் அபஹரித்தது. பரம தார்மிகனுய் பவித்ரபாணியாயிருப்பானொரு ஶிஷ்டனுடைய த்ரவ்யத்தையன்றோ நான் அபஹரித்தது. 152 "अकारार्थायैव स्वं" (அகாரார்த்தாயைவ ஸ்வம்) என்று அபியுக்தப்ரயோக முண்டாகை யாலே 153 "अ इति ब्रह्म" (அ இதி ப்ரஹ்ம) என்று அகாரவாச்யன் ப்ரஹ்மமாகையாலே ப்ரஹ்மஸ்வமிறே இது.

---

வென்று முதலிகள்கேட்க, அந்நமென்றும் அந்நமதந்தமென்றும் ஈச்வர னுக்கு போக்த்ருத்வ ப்ராதாந்யத்தைச் சொல்லுகையாலே வ்யாவ்ருத்தி கூடுமென்றருளிச்செய்கிறுர். அந்த வைலக்ஷண்யத்தை விவரிக்கிறுர். (தேஹேந்த்ரியவென்றுதுடங்கி வாக்யத்வயத்தாலே)

அப்படி ஆத்மவஸ்துவைக் கௌஸ்துபமாகச் சொல்லுமோவென்ன அருளிச்செய்கிறுர் (ஆத்மாநமஸ்யஜகத: என்றுதுடங்கி.) (நிர்லேபம்) கர்மரஹிதம். (அகுணம்) குணத்ரயரஹிதம். அறவனையென்கையாலே (பரமதார்மிகனென்றது.) ஆழிப்படையென்கையாலே (பவித்ரபாணி:) என்கிறுர். பவித்ரமென்று-பவித்ரத்துக்கும், திருவாழிக்கும் பேர்; ஆத் மாவை ஸ்வம்மென்று சொன்னதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறுர் (அகா ரார்த்தாய என்றுதுடங்கி.) ஈச்வரனை ப்ரஹ்மமாகச் சொல்லிற்றோ என்னவருளுகிறுர் (அ இதிப்ரஹ்மவென்றுதுடங்கி.)

---

/ திருவாய் 1-7-1.

(பிறர்நன்பொருள் தன்னையும் நம்பினேன்) ஸ்வரூபம் விலக்ஷணமாய் ஸ்வாமியும் விலக்ஷணனாயிருக்கவன்றோ நான் இவ்வஸ்துவை அபஹரித்தது. இவ்வாத்மாபஹாரம் ஸ்வதந்த்ரனுக்கும் தேஹாத்மாபிமாநிக்குமுண்டாமதாகையாலே. இத்தால் தேஹாத்மாபிமாநம் சொல்லிற்று. அப்போது "நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்" என்று தேஹரக்ஷணசேஷமாக 154 "परद्रव्येष्वभिध्यानं" (பரத்ரவ்யேஷ்வபித்யாநம்) என்கிறபடியே அந்யத்ரவ்யங்களையும் ஆசைப்பட்டுப்போந்தேனென்றுமாம்; அங்கு நன்பொருளென்று - அவர்கள் நினைவாலே சொல்லுகிறது. (பிறர்நன்பொருள் தன்னையும் நம்பினேன்) அவ்விடந்தன்னிலும் மேலெழுந்த த்ரவ்யங்களை யாசைப்பட்டவளவன்றிக்கே அவர்கள் சீர்க்கக்கணக்க நினைத்திருக்கும் மடிச்சரக்கையாய்த்து ஆசைப்பட்டது.

(நம்பினேன் மடவாரையும்) தேஹமே ஆத்மாவென்றிருக்கையாலே ஆத்மஜ்ஞாநம் பிறந்தால் பரமாத்மாவே புருஷார்த்தமாமாபோலே உடம்புக்கு உடம்பே போக்யமாகையாலே பரஸ்த்ரீஶரீரங்களே போக்யங்களென்று ஆசைப்பட்டுப் போந்தேன், (மடவாரையும்) ஆத்மகுணபூர்ணைகளாய் பாதிவ்ரத்யதர்மநிரதைகளான ஸாத்விகைளாய்த்து நானாசைப்பட்டது.

(நம்பினேன் மடவாரையும்) அன்றிக்கே ஸாமாந்யத்தில் ஸ்த்ரீகளையும் ஆசைப்பட்டுப்போந்தேன். (மடவார்) அவர்கள் புருஷ

---

ஆத்மாபஹாரம்-ஸ்வாதந்த்ர்யமும், தேஹாத்மாபிமாநமும்; அத்தை அருளுகிறார் (இவ்வாத்மாபஹாரமித்யாதி.) ஸ்வாதந்த்ர்யாபிமாநம் சொன்னபோது பகவத்த்ரவ்யாபஹாரம் சொல்லுகிறது. தேஹாத்மாபிமாநம் சொன்னபோது லௌகிகத்ரவ்யமான ஸ்வர்ணாதிகளைச் சொல்லுகிறது. ஹேயமானவஸ்துவை நன்பொருளென்று சொல்லுகிறதென்னென்ன அருளுகிறார் (அங்கு நன்பொருளென்றுதுடங்கி.) நம்பினேனென்றது-ஆசைப்பட்டேனென்றபடி. (மடிச்சரக்கை) என்றது-ஒருவனையும் விச்வஸியாதே பையிலேயிட்டு மடியிலே கட்டிக்கொண்டிருக்குமது.

மடப்பமென்றதுக்கு இரண்டுபொருள். அதாவது-பாதிவ்ரத்யமாதல், கபடபவ்யதையாதல். (ஸாமாந்யத்தில் ஸ்த்ரீகளையென்றது) ஸாதாரண

வஶீகாரம் பண்ணுவது தந்தாமுடை மடப்பத்தைக் காட்டியாய்த்து. ‡"சதிரிளமடவார்" என்று ஆழ்வார்பாடே கேட்டு வைக்கையாலே மடவாரென்கிறார். (மடவார்) அதிலும் ஒன்றிரண்டை யாசைப்படுகையன்றிக்கே பலவிஷயங்களையும் ஆசைப்பட்டேன்; ஒன்றிலே துவக்கலாவது - அதில்போக்யதை உண்டாகிலிறே; அதில்லாமையாலே பலவிஷயங்களையும் ஆசைப்பட்டுப் போந்தாராய்த்து; அதுவுமன்றிக்கே 155 "भूय एवाभिवर्धते" (பூய ஏவாபிவர்த்ததே) என்று இக்காமந்தான் அபிவ்ருத்தமாகையாலே தததுரூபமான விஷயபஹுத்வமும் அபேக்ஷிதமிறே. ஆகையாலே அஸ்வதந்த்ரமான ஆத்மாவை ஸ்வதந்த்ரமாக நினைத்திருந்தேன். அநாத்மாவான தேஹத்திலே ஆத்மபுத்தி பண்ணினேன்; அபுருஷார்த்தங்களான அர்த்தகாமங்களிலே புருஷார்த்த புத்தி பண்ணினேனென்றாராய்த்து; இவ்வபிப்ரயோகங்களாலே இவை ஒவ்வொன்றேபோரும் அநர்த்த ஜநகமாகைக்கு; ஆயிருக்க இவையெல்லாவற்றையும் அநுஷ்டித்துப்போந்தேன்.

இவ்வநுஷ்டாநம் உமக்கெப்போதுண்டாய்த்தென்ன, (முன்னெலாம்)முற்காலமடைய. 156"अनादिर्भगवान् कालः" (அநாதிர்பகவாந் கால:)என்று காலம் நித்யமாகையாலும், அநுஷ்டாதாவான சேதநன் நித்யனாகையாலும், தது பகாணபூத கரணகளேபரங்களுமா

---

ஸ்த்ரீகளை என்றபடி; ஸ்த்ரீகள் கபடமான பவ்யதையை உடையவர்களென்று இவரறிந்தபடி என்னென்னவருளிச்செய்கிறார் (சதிரிளமடவாரென்றுதுடங்கி.) பலவிஷயங்களிலே போகிறதென்? ஒருவிஷயத்திலே நிற்கப்போகாதோ என்னவருளிச்செய்கிறார் (ஒன்றிலே துவக்கலாவதென்றுதுடங்கி.) கீழெல்லாம் நிகமிக்கிறார் (ஆகையாலேயென்றுதுடங்கி.) இவ்வபிப்ரயோகங்ளென்றது-நன்பொருள்தன்னையும், மடவாரையுமென்ற அபிசப்த ப்ரயோகங்களென்றபடி; ஸ்ருஷ்ட்யாதியிலே கொடுத்த கரணங்கள் ஸம்ஹாரபர்யந்தமிருந்ததேயாகிலும், ஸம்ஹாரத்திலே நஷ்டமாய் கல்பாந்தராதியிலே ஸ்ருஷ்டங்களாகையாலே ப்ரவாஹதோநித்யமாயிருக்கும்.

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையுமென்றுதுடங்கி அக்ருத்யங்கள் அநேகங்களாகையாலும், முன்னெலாமென்று – காலமநாதியாகை

---

‡ திருவாய் 2-10-2.

ப்ரவாஹதயா நித்யங்களாகையாலும், இவ்வநர்த்த புத்திக்கடியான அவித்யாகர்மவாஸனைகள் நித்யங்களாகையாலும் இதுவே எனக்கு யாத்ரையாய்ப்போந்தது. அக்ருத்யங்கள் ஒன்றிரண்டாகிலும் ஆச்வஸிக்கலாம். காலம் பரிமிதமாகிலும் கண்டு தரிக்கலாம். அநாதிகாலம் அபரிமிதமான அநர்த்தங்களை அநவரத மநுஷ்டித்துப் போந்தேனென்று தாத்பர்யம்.

கீழ் தம்முடைய புன்மை சொன்னார். மேல்தாம் ஆழ்வாராலே அங்கீக்ருதரான ப்ரகாரம் சொல்லுகிறார். (செப்பொனித்யாதி) நான் அர்த்தார்ஜநேச்சுவாய் தேசாந்தரஸஞ்சாரம்பண்ணுகிறகச்செய்தே தைவாயத்தமாகத்திருநகரியிலே மாடங்கள் ஓங்கியுயர்ந்து பொற்கென்று தோற்றிற்று; இங்கேபோய் அர்த்தாபஹாரம் பண்ணலாம், இதுதான் நகரியாகையாலே நாகரிகைகளான மடவாரையும் இம்மாடங்களிலே காணலாமென்று அறுதியிட்டு வழிவிலங்கி உள்புக்கேன். அந்நகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் திருவஷ்டாக்ஷர ஸம்வலித்தராகையாலே அவ்விடத்தில் தஸ்கரஸஞ்சரணமில்லாமையாலே ஒரு வைஷ்ணவ ஸகாசத்தில் க்ஷத்ரபந்துவுக்குப்பிறந்த அவஸ்தைபோலே எனக்கும் ஆழ்வார் ஸகாசத்திலே அபஹாரபுத்திபோய் உள்ளே ஆழ்வார் தம்மைக்காணவேணுமென்று புக்கு அவருடைய பூர்த்தியைக்கண்டு நின்றாப்போலே யிருக்க, அவருக்கு அன்பனாய்விட்டேன்.

(செப்பொன்மாடம்) ஆழ்வாருக்கு / "களைகண்மற்றிலேன்" என்றும் § "ஆராவன்பினடியேன்" என்றும் சொல்லுகிற பகவத் விஷயத்தில் அத்யுந்நதமான அத்யவஸாயாநுராகங்கள் போலேயாய்த்து மாடங்களினுடைய ஓக்கமும் திண்மையும் பொற்கெனவுமிருக்கிறபடி.

---

யாலும், தரித்திருக்கப்போகாதென்றபடி. "செம்பொன்மாடத் திருக்குருகூர் நம்பிக்கன்பனாய்" என்னுமளவுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நான் அர்த்தார்ஜநேச்சுவாயென்றுதுடங்கி.) (பொற்கென்று தோற்றிற்றென்றது) பொன்மயமாகத் தோற்றிற்றென்றபடி. "ஓங்கி, உயர்ந்து" என்று மிகைச்சொல்லாய், மிகவுமுயர்ந்தென்றபடி, (நின்றாப்போலே) என்றது ஒருஹேதுவின்றிக்கேயென்றபடி; ஆழ்வாருடைய அத்யவஸாயம் போலே யிருக்கிறதிண்மையும், அநுராகம்போலே இருக்கிறபொற்கெனவும் என்றபடி, (பொற்கெனவும்) என்றது ஔஜ்ஜ்வல்யம்.

---

/ திருவாய் 5-8-8. § திருவாய் 6-10-2.

(செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பி) ஆழ்வாருடைய மயர்வற்ற மதிபோலேயாய்த்து இத்தேஶத்திலுமிருளற்று ஒளியேயாயிருக்கும்படி; அத்தேஶிகரும் ஆழ்வாரோட்டை ஆஸக்தியாலே பொலிந்துநிற்குமவர்களாய்த்து. (செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பி) மாற்றுமினுங்கின பொன்னாலே சமைந்தமாடமாய், அதுதான் 157 "अत्यर्कानलदीप्तं तत्स्थानं विष्णोर्महात्मनः" (அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந:) என்று பரமபதத்தின் தேஜஸ்ஸுபோலே பார்க்கவும் அணுகவுமொண்ணாதபடியிருக்கையன்றிக்கே கண்படைத்தார்க்கெல்லாம் காணவுமாய்க் கிட்டவுமாம்படி ஸ்ப்ருஹணீயமானதேசம். (செம்பொன்மாடம்) §"துவளில் மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்" என்று உகந்தருளின நிலங்களில் மாடங்களும் ஆழ்வாருக்கு உபாதேயமானாப்போலே இவருக்கும் ஆழ்வாருடைய மதிநலங்களோபாதி மாடங்களும் உபாதேயமாயிருக்கிறதாய்த்து; ஆகையாலே அர்த்தகாம ப்ரவணரையும் ஆளாக்கும் தேஶமாய்த்து.

(நம்பிக்கன்பனாய்) அர்த்தகாமாதிகளை நம்பிப்போந்த நான் ஆழ்வாருக்கு அன்பனாய்விட்டேன்; அர்த்தகாமங்களின் போக்யதையும் ஆழ்வார்பாடே காண்கையாலே அவர்க்கே அன்பனாய் விட்டேன்; கீழ்ப்பாட்டிலே "அன்னையாயத்தனாய்" என்கையாலே 2"माता पिता" (மாதாபிதா) என்னுமிடம் சொன்னார். இதில் 2"युवतयः" (யுவதய:) "विभूतिः" (விபூதி:) என்னுமிடம் சொல்லுகிறார்.

---

நம்பியென்ற பதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்தேசிகருமென்று துடங்கி.) (மாற்றுமினுங்கின) என்றது-மாற்றேறினவென்றபடி, செம்பொன்னென்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுதான் அத்யர்க்காநலவென்று துடங்கி.) செம்பொன்மாடமென்று வர்ணித்ததுக்குப் பின்னையுமொருதாத்பர்யமருளிச்செய்கிறார் (துவளில்மாமணிமாடமென்று துடங்கி) நம்பியென்றபதத்தைக் கடாக்ஷித்துக்கொண்டு அருளிச்செய்கிறார் (மதிநலங்களோபாதி மாடங்களுமென்று துடங்கி.)

அர்த்தகாமங்களை ஆசைப்பட்டுப் போந்தநீர் ஆழ்வாருக்கு அன்பரானபடியென்னென்ன அருளிச்செய்கிறார் (அர்த்தகாமங்களின் போக்யதையுமென்று துடங்கி). (அர்த்தகாமங்களின் போக்யதையும் ஆழ்வார் பாடேயுண்டாகையாலே) என்றது - 'யுவதய: விபூதி:" என்னுமிடம் சொல்லிற்றென்றபடி.

---



§ திருவாய் 6-5-1.

(அடியேன்) ஸ்வதந்த்ரனாய்ப்போந்த நான் நம்பிக்கு சேஷ மானேன்; ஆழ்வாருக்குப் பிறந்த மதிநலங்கள்போலே க்ரமத்திலே வருகையன்றிக்கே அன்புமுற்பட்டு அடிமைபிற்பட்டது. (நம்பிக் கன்பனாயடியேன்) ஆழ்வார் திருவஷ்டாக்ஷர ஸம்ஸித்தராகை யாலே இவருடைய கடாக்ஷலக்ஷ்யனாகையாலே அம்மாத்ரத்திலே பதத்ரயார்த்தத்திலு முளனாய்விட்டேன். இனி வாசி, அங்கு ததீயஸஹமான தத்விஷயமாயிருக்கும்; இங்கு ஆழ்வாருக்கே யாயிருக்கும்.

(சதிர்த்தேன்) சதிரனானேன். 158 "मोक्षयिष्यामि"(மோக்ஷயிஷ்யாமி)என்றவன் முழங்கைத்தண்ணீர் பார்த்திராதே ஆழ்வாருடைய ப்ரபாவத்தையிட்டு வென்றேன். (நம்பிக்கன்பனாய்ச் சதிர்த்தேன்) §"மாற்பால்மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்கிற படியே ஆழ்வாருக்கன்பனாய் அந்யவிஷயங்களை வென்றேன்; (நம்பிக்கன்பனாயடியேனை) ஆத்மாத்மீயங்களிரண்டும் ஆழ்வார தாய்த்து; அவர்தாம் ||"யானே நீயென்னுடைமையும் நீயே" என்று தத்விஷயத்திலே ஸமர்ப்பித்தாப்போலே. (மடவாரையும் நம்பினேன் சதிர்த்தேன்) அவர்கள் சதிரிளமடவாராகையாலே இளிம்புபட்ட நான், ஆழ்வாரையண்டைகொண்டு சதிரனாய் விட்டேன்.

---

அடிமை முற்பட்டு அன்புண்டாக வேண்டாவோவென்ன அருளிச் செய்கிறார் (ஆழ்வாருக்குப் பிறந்தமதியித்யாதி) ஜ்ஞாந பூர்வகமாக பக்தியுண்டாகை யன்றிக்கே, பக்தியுண்டாய் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்த தென்றபடி. அதாகிறது- "மதிநலமருளினன்" என்று ஆழ்வாருக்கு ஸ்வரூபஜ்ஞாநம் முற்பட்டு பக்தி பிற்பட்டது. இவருக்கு, அன்பனா யென்று - பக்திமுற்பட்டு, அடியேனென்று ஸ்வரூபஜ்ஞாநம் பிற்பட்டது.

அன்பனாயென்று அர்த்தகாமங்களின் ப்ராவண்யம் ஆழ்வார் பக்கலிலே யுண்டாகையாலே மத்யமசரமபதார்த்தங்களான அநந்யோபாயத்வமும், அடியேனென்று அநந்யார்ஹசேஷத்வமும் சொல்லுகையாலே பதத்ர யார்த்தங்களிலு முளனாய்விட்டேனென்றபடி. (ததீயஸஹமான) என்றது- ததீயசேஷத்வ பர்யந்தமான வென்றபடி. (ஆத்மாத்மீயங்களிரண்டும்) என்றது - தாமும் தம்முடையபக்தியும் ஆழ்வாருக்கு சேஷமாய்த்தென்றபடி.

§ மூன்-திருவ-14. || திருவாய் 2-9-9.

(இன்றே) ஈச்வரனையண்டை கொண்டு ஆரப்த ஶரீரபாத ஸமயம் பார்த்திருந்து பின்னையும் வாஸநாருசிகளாகிற மண்பற்று விடாமல் விரஜையளவும் போகவேண்டும்படி யிருக்கையன்றிக்கே, இன்றே ஸவாஸநமாகவிட்டேன். (இன்றே) அன்று அப்படி யானேன். இன்று இப்படியானேன். நடுவில் இதுக்கு என்கையில் கிடப்பதொருஹேதுவைக் கண்டிலேன். இதுக்கு வரவாறொன்றின் றிக்கேயிருக்க, வாழ்வினிதாம்படி விழுந்ததென்று விஸ்மிதராகிறார். (இன்றே) அன்று ஈச்வரனுங்கூட நிற்கச்செய்தே ஸம்ஸரித்துப் போந்தேன். இன்று ஆழ்வார் ஸந்நிதிமாஹாத்ம்யத்தாலே இவ்வளவும் பிறந்ததென்று ப்ரீதராகிறார்.

அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்
முற்றிற்று.

---

இன்றேயென்றதுக்கு இரண்டு தாத்பர்யம் - ஒரு காலாந்தரத்திலின் றிக்கே வாஸநாருசிகளாகிற மண்பற்றை இன்றே ஸவாஸநமாக விட் டென்னுதல். அன்றிக்கே - ஒருஹேதுவொன்று மின்றிக்கே இன்றே க்ருதக்ருத்யனானேனென்னுதல். இன்றே என்கிற விடத்தில் ஏவகாரம் ஸ்வரத்திலேயாய் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அன்று ஈச்வரனும் கூட நிற்கச்செய்தேயென்று துடங்கி). (ஸ்வரத்திலே) என்றது - ஆச்சர்யத்திலே யென்றபடி.

அஞ்சாம்பாட்டின் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்
வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.



ஆறும்பாட்டு

6. இன்றுதொட்டு மெழுமையு மெம்பிரான்
நின்றுதன் புகழேத்த வருளினன்
குன்றமாடத்திருக் குருகூர்நம்பி
என்றுமென்னையிகழ்விலன் காண்மினே.

பதவுரை:—இன்று தொட்டும்—இன்றுமுதலாக, எழுமையும்—மேலுள்ள காலமெல்லாம், நின்று—(நான்) அத்யவஸாயம் நிலைக்கப்பெற்று, தன் புகழ்—தம்முடைய [ஆழ்வாருடைய] திருப்புகழ்களை, ஏத்த—துதிக்கும்படி, எம் பிரான் அருளினன்—எம் ஸ்வாமியான ஆழ்வார் க்ருபைபண்ணினார்; குன்றம் மாடம்-மலைபோன்ற மாடங்களையுடைய, திரு குருகூர் நம்பி—திருநகரிக்குத் தலைவரான அவ்வாழ்வார், என்றும்-(இனி) எக்காலத்திலும், என்னை-என் விஷயத்தில், இகழ்வு இலன்—அநாதாரமுடையவராக இருக்கமாட்டார்; காண்மின்—(இதனை அநுபவத்தில்) கண்டுகொள்ளுங்கள்.

---

# நஞ்ஜீயர் வ்யாக்யாநம்

அவ:—ஆறும்பாட்டு. (இன்றுதொட்டுமித்யாதி) நீர் க்ருதக்ருத்யரானபடி எங்ஙனேயென்னில். ¶ "வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன்" என்கிறபடியே காலதத்வமுள்ளதனையும் ஆழ்வார் தம்மையே ஏத்தும்படி பண்ணினாரென்கிறார்.

வ்யா:—(இன்று தொட்டும்) பகவத்விஷயத்திற்காட்டில் தத்ஸம்பந்தியான ஆழ்வார் உத்தேச்யரென்று ருசிபிறந்த இன்றுதொடங்கி, (எழுமையு மெம்பிரான்) 'காலவிச்சேதமின்றிக்கே எனக்கு உபகாரக்ரான ஆழ்வார். போனகாலமும் எனக்கு ருச்யபாவத்தாலே இழந்தேனித்தனை. (நின்று) ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகிலிறே கமநப்ரஸங்கமுள்ளது. எல்லை நிலத்திலே புக்கார் நிலைநிற்குமித்தனையிறே. § "மானிடம்பாடவந்த கவியேனல்லேன்" என்று ஆழ்வாருக்கு வ்யாவர்த்யவிஷயம் மநுஷ்யரிறே. இவர்க்கு வ்யாவர்த்யம் எம்பெருமானுடைபடி.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) பர்வதங்கள் போலேயிருந்துள்ள மாடங்களையுடைய திருக்குருகூரில் நிரபேக்ஷரான ஆழ்வார்; ஆழ்வார்

---

¶ திருவாய் 4-5-3. § திருவாய் 3-9-9.

பூர்த்திஎல்லை காணவொண்ணுதாப்போலே மாடங்களினுயர்த்தி எல்லை காணவொண்ணுதபடி. (என்றுமென்னையித்யாதி) தாம் ஸ்தோத்ரம் பண்ணுகைக்கு ஹேது சொல்லுகிருர். ஆழ்வார் ஸந்நிதிபோலே காணும் இவரைப் பேசுவிக்கிறது. உங்களைப்போலே பகவத்விஷயத்திலன்றி நான் ஆழ்வார் கவியானபடி காணமாட்டிகோளோ?.

ஆரும்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

  

# நம்பிள்ளை ஈடு

அவ:—(இன்றுதொட்டுமித்யாதி) ஆழ்வார் இப்போது இங்ஙனே விஷயீகரித்தாராகிலும் நீர் தாம் அநாதிகாலம் புறம்பே அந்யபராராய்ப் போந்தேனென்றீர்; இன்னமும் அப்படிப்புறம்பே போகிலோவென்ன; அங்ஙனே போகலாம்படியோ ஆழ்வாரருளியிருப்பதென்கிருர்.

வ்யா:—(இன்றுதொட்டும்) மேலொருநாளிலே பலிப்பதாக விட்டு வைக்கிருரோ? விஷயீகரித்த இன்றுதொடங்கி; (எழுமையும்) ஏழுஜந்மமென்கிறது உபலக்ஷணம்; மேலுள்ள காலமெல்லாமென்றபடி. (எம்பிரான்) †"பிரான் பெருநிலங்கீண்டவன்" என்று பகவத்விஷயத்திலே ஆழ்வார் சொல்லுமத்தை உபகார ஸ்ம்ருதியாலே அவர்விஷயத்திலே சொல்லுகிருர்.

(நின்றுதன் புகழேத்தவருளினுன்) உபகார ஸ்ம்ருதியாலே பகவல்லாபத்தளவும் இவரைப்பற்றி நின்று, பின்னை அதுகிட்டினவாறே அதிலே தோள்மாறும்படியன்றியே, தம்முடைய அநுபவத்துக்குள்ளே பகவதநுபவமாம்படியன்றே ஆழ்வார் எனக்கருளிற்று. (தன்புகழேத்த) ஆழ்வார் தமக்கு உபகரித்த பகவத்விஷயத்தையொழியப் புறம்பே போனுராகில்றே இவர்தம்மை ஏத்திஞரன்றிக்கே ஒழிவது.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) ஆழ்வார் தம்மையுமேத்தி இன்னமுமொரு விஷயத்தை ஏத்தவேண்டும்படியோ ஆழ்வா

† திருவாய் 1-7-6.

ருடைய பூர்த்தியிருப்பது? (குன்றமாடத் திருக்குருகூர்) /"குன்றம்போல் மணிமாடநீடு திருக்குருகூர்" என்று ஆழ்வாரருளிச்செய்யுமதுவே இவர் நெஞ்சில் வாஸிதமாயிருப்பது; அது தன்னையே சொல்லுமத்தனையிறே. (என்றுமென்னை இகழ்விலன் காண்மினே) யாவதாத்மபாவி புறம்பொன்றில் போகாதபடியன்றோ என்னை விஷயீகரித்தது. என் தன்மைபாராதே என்னை விஷயீகரித்தவர் நான் புறம்பேபோவேனென்றால் போகலாம்படி என் வசம் என்னைக்காட்டித்தருவரோ?

ஆறாம்பாட்டின் நம்பிள்ளை ஈடு முற்றிற்று.



/ திருவாய் 4-10-1.

# பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்



அவ:—ஆறும்பாட்டில், ஆழ்வார் இப்போது இங்கே விஷயீ கரித்தாலும் நீர்தாம் அநாதிகாலம் வாஸநைபண்ணிப்போந்த விஷயமாகையாலே அது மறுவலிடிலோவென்ன, அங்ஙன் மறு வலிடும் படியாயோ ஆழ்வார் ப்ரஸாதம் என்பக்கலிருப்பதென்கிறார். 159 "शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोभिजायते" (ஶுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே) என்றும் 160 "समाधिभङ्गस्तस्या-सीत्"(ஸமாதிபங்கஸ்தஸ்யாஸீத்) என்றும் ப்ரம்ஹம் ப்ரஸங்கிக்கும் பகவத்க்ருபை யளவிலே நினைத்திருக்கலாமோ ஆழ்வார்க்ருபையை?

வ்யா:—(இன்று தொட்டும்) விஷயீகரித்த இன்று முதலாக; பகவத் ஸமாச்ரயணத்திற்போலே ஆச்ரயிப்பதொரு காலமும் பலிப்பதொருகாலமுமாயோ ஆழ்வாருடைய விஷயீகாரமிருப்பது? விஷயீகரித்தவின்று துடங்கி அநுபவகாலமாயன்றோ விருப்பது. (எழுமையும்) ஏழுஜந்மமென்று உபலக்ஷணம். மேலுள்ள கால

---

அரு:—ஆறும்பாட்டு. "என்று மென்னையிகழ்விலன் காண்மின்" என்றதைக்கடாக்ஷித்து ஸ்வாநுபவகர்ப்பபரோபதேசமாதல், பரோபதேச கர்ப்ப ஸ்வாநுபவமாதல் சொல்லக் கூடாமையாலே சங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). சதிர்த்தேனின்றேயென்று நீர் ஸந்தோஷித்திருந்தீர். இது நிலைநிற்கப்புகுகிறதோ?. விஷயாந்தரங்களை அநாதியாக அநுபவித்தவாஸநையாலே நீர் தாம் திரும்பினாலோவென்று சங்காஹ்ருதயம். பகவத் ப்ரஸாதம்போலே ஆழ்வார் ப்ரஸாதம் மத்யே நழுவினாலோவென்ன அருளிச்செய்கிறார் (சுசீநாமித்யாதி). இவ்வர்த் தத்துக்குப் பூர்வார்த்தத்திலே நோக்காய், பகவத்விஷயத்திலும் நான் போகாதே யாவதாத்மபாவிதம்மை ஏத்தும்படி நிர்ஹேதுகமாக அருளின ஆழ்வாருடைய க்ருபையை, பக்திநிஷ்டரை யோகபங்காதிகளையிட்டுக் கைவிடுமவன் க்ருபையோடு ஸமமென்னலாமோ என்றுகருத்து.

பகவத் ப்ரஸாதத்திலும் அதிசயிதமான ஆழ்வாருடைய ப்ரஸாதத் துக்கு ஏழு ஜந்மம் தன்புகழேத்தப்பண்ணினால் என்னாலேத்தவாகாமை யாலே அநந்தகாலத்துக்கு உபலக்ஷணமாக்குகிறார் (ஏழுஜந்மமென் றித்யாதி.)

மெல்லாம் என்றபடி. (எம்பிரான்) †"பிரான் பெருநிலங்கீண்டவன்" என்று பகவத்விஷயத்திலே ஆழ்வார் பேசும்படியை உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வார் விஷயத்திலே பேசுகிறார். (எம்பிரான்) என் ஸ்வாமி.

(நின்று) ஒருபடிப்படநின்று. உபகாரஸ்ம்ருதியாலே பகவல்லாபத்தளவும் ஆழ்வாரை அநுபவித்து, பின்பு அதுகிட்டினவாறே அதிலே தோள்மாறும்படியன்றிக்கே யிருக்கை. (தன்புகழேத்த) ஆழ்வாருடைய அநுபவத்துக்குள்ளே பகவதநுபவமாம்படியாயன்றோ ஆழ்வாருடைய பெருமையிருப்பது. (அருளினான்) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணினார். /"மயர்வறமதிநல மருளினன்" என்று ஆழ்வார் பகவத்விஷயத்திற் சொன்னவார்த்தையை ஆழ்வார் திருவடிகளிலே சொல்லுகிறாரிறே இவர்.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) தம்மையுமேத்தி இன்னுமொரு விஷயத்தையுமேத்த வேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. ‡"குன்றம்போல் மணிமாடநீடு திருக்குருகூர்"

---

அருளினபின்பன்றோ எம்பிரானென்று உபகாராநுஸந்தாநம் பண்ணப்ராப்தம், முன்னே தானே,எம்பிரானென்பானென்னென்கிற சங்கையை உபகாரஸ்ம்ருத்யதிசயத்தால் சொன்னாரென்று ஸத்ருஷ்டாந்தகமாகப் பரிஹரிக்கிறார் (பிரானித்யாதி). கீழ்வாக்யவிவரணம் (உபகாரஸ்ம்ருதியாலே யித்யாதி).

தன்புகழென்பானென்? அவன் புகழென்னவேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (ஆழ்வாருடையவித்யாதி). அநவரதபகவதநுபவபரரான ஆழ்வாரைத் தாமநுபவிக்கும்போது அந்த பகவதநுபவம் இதிலே லபிக்குமென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

ஹேதுவைச்சொல்லாமையாலேபலிதம் (நிர்ஹேதுகேத்யாதி). என்னையருளினானென்னாதே கேவலம் அருளினானென்கையாலே, ஆழ்வார் எனக்கருளினானென்னாதவோபாதி யருளிச்செய்தாரென்கிறார் (மயர்வறவித்யாதி) அருளுக்குமுன்பு தம்மையுளராகநினைத்திரா ரென்றுகருத்து.

---

† திருவாய் 1-7-6. / திருவாய் 1-1-1. ‡ திருவாய் 4-10-1.

என்று ஆழ்வாரருளிச்செய்யுமதிறே இவர் நெஞ்சிலே வாஸித மாயிருப்பது; அத்தைச்சொல்லுகிறூர்.

(என்றுமென்னை யிகழ்விலன்) [என்றுமிகழ்விலன், என்னை யிகழ்விலன்] யாவதாத்மபாவி புறம்பே ஒருவிஷயத்திலே போக விட்டுக்கொடார். என் தண்மை பாராதே விஷயீகரித்தவர் என்னை விஷயாந்தரங்களிலே போகவொட்டுவரோ? தம் திருவடிகளை யொழியப்புறம்பு புகலற்றிருக்கிறவென்னை, புறம்பே போகவெனூலும் போகலாம்படி என்கையிலே என்னைக் காட்டித்தருவரோ? (காண்மினோ) இது ப்ரத்யக்ஷிக்கலாவதொன்ருயிருக்க, ஆழ்வார் பெருமை நான் சொல்லக்கேட்கை மிகையன்றோ?

ஆரும்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்
முற்றிற்று

---

நின்று தன் புகழேத்துகைக்கு ஹேதுவாக நம்பிபததாத்பர்யம் (தம்மையு மித்யாதி). ப்ரகாராந்தரேண வர்ணியாதே இப்படி வர்ணிப்பானென் னென்ன, அதுக்குஹேதுவை அருளிச்செய்கிறூர் (குன்றம் போலித்யாதி)

என்று மென்றதையும், என்னையென்றதையும் ஸமமாக க்ரியையிலே அந்வயம் காட்டி க்ரமேண விவரிக்கிறூர் (என்று மித்யாதி வாக்யசதுஷ் டயத்தாலே). என்னையென்றதுக்கர்த்தாந்தரம் (தம்திருவடிகளித்யாதி). "குன்றமாடத்திருக்குருகூர் நம்பியானவெம்பிரான் - இன்று தொட்டுமெழு மையும் நின்று தன்புகழேத்த அருளினுனுகையாலே, என்று மென்னை யிகழ்விலன் காண்மின்" என்றந்வயம்.

ஆரும் பாட்டின் அரும்பதம் முற்றிற்று

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநம்

அவ:—ஆறும்பாட்டு. (இன்றுதொட்டு மித்யாதி) கீழிரண்டு பாட்டாலே தம்முடைய தோஷாதிசயத்தையும் அத்தோஷமே பற்றாசாகத்தம்மை ஆழ்வார் அங்கீகரித்தபடியையும், ஆழ்வாரங்கீகரித்த அநந்தரம் அத்தோஷங்களைத் தாம் வென்றபடியையும், அவை போகையாலே ஆழ்வார் திருவடிகளில் தமக்குண்டான ஆதரத்தையும் சொன்னர்.

இத்தைக்கேட்டவர்கள் இப்போது உம்முடைய குற்றம் கழிந்ததேயாகிலும் உமக்கு ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே பின்னையும் மறுவலிடாதோ? அதுக்குப் பரிஹாரமாக நீர்கண்டுவைத்ததென்னென்ன; கீழுள்ளதோஷமும் நான் ஸாதநாநுஷ்டாநம் பண்ணிப் போக்கினேனே? ஆழ்வாரங்கீகாரத்தாலே போய்த்தாகில் அவ்வங்கீகாரம் மாறினாலன்றே அதுமேலிடுவது. ஆழ்வார் என்தோஷம் கண்டு ஒருகாலும் இகழார். இதுகாணமாட்டி கோளோவென்று இப்பாட்டாலே உத்தரம்சொல்லுகிறார்.

கீழ்ப்பாட்டில்-ஆழ்வார் திருவடிகளிலுண்டான தம்முடைய ஜ்ஞாநபக்திகளைச் சொன்னர். இதில் அவர் பக்கல் தமக்குப் பிறந்த வ்யவஸாயம் சொல்லுகிறார். தாம் அங்கீகரித்தவின்று முதல் யாவதாத்மபாவியாகத்தம்முடைய குணகீர்த்தநம் பண்ணிப் போரும்படி என்பக்கலிலே க்ருபையைப் பண்ணின ஆழ்வார் குற்றங்கண்டு கைவிடப்புகுகிறாரோவென்று இகழாமைக்கு அடி சொல்லுகிறார் இப்பாட்டின் முற்கூற்றாலே.

---

அரு:—ஆறும்பாட்டு. (இன்றுதொட்டுமித்யாதி), முந்துறப்பாட்டுக்கெல்லாம் ஸமவாயமாகத் தாத்பர்ய மருளிச்செய்து, திரியட்டும் பூர்வார்த்த மாத்ரத்துக்குப் பிரித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தாமங்கீகரித்தவின்றுமுதலென்றுதுடங்கி).

எழுமையுமென்று மேலுள்ளகாலமெல்லாம் விடாரென்றால் போராதோ? இன்றுதொட்டுமென்று விசேஷிக்கிறதுக்குக் கருத்தருளிச்

வ்யா:—(இன்றுதொட்டும்) என்தோஷமே பச்சையாகக் கைக்கொண்டவின்றுதொட்டும். (எழுமையும்) மேலுள்ளகாலங்களிலும். (இன்றுதொட்டு மெழுமையும்) இப்போதையங்கீகாரம் யாதொருபடி இருக்கிறது, இதன் கீழாய்த்து மேலுள்ள காலமடைய அவனென்னை விடாதபடியென்று தாத்பர்யம். இவருடைய நியமமிருக்கிறபடி, ஒருதேஶ விஶேஷத்திலே போனாலும் ஆழ்வார்கீழே ஒதுங்குமவராய்த்து இவர்; மாதுலகுலத்துக்குப்போன ஸ்ரீபரதாழ்வானைப் பின்சென்ற ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப்போலே இவரும் நியதஶத்ருக்நரிறே; திருக்குருகூர்நம்பிக்கன்பனாகையாலே ப்ரீதிபுரஸ்க்ருதத்வமுமுண்டாய்த்து.

(எம்பிரானை) எனக்கு ஸ்வாமியானவர்; ஸ்வாமியானவன் ஸ்வத்தைக் குற்றம்கண்டு இகழுமோ? /"எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை" என்று ஆழ்வார் பகவத்விஷயத்தைச் சொல்லக்கேட்டுப் போந்த வாஸனையாலே தாமும் எம்பிரானென்கிறார்.

---

செய்கிறார் (இப்போதையங்கீகாரம் யாதொருபடியிருக்கிறதென்று தொடங்கி.) இதுக்குத் தாத்பர்யம் "புன்மையாகக்கருதுவராதலில், அன்னையாயத்தனாய்" என்று தோஷமேபச்சையாக இப்போது அங்கீகரிக்கையாலே மேலுள்ள காலமும் தோஷமே பச்சையாகக் கொண்டுவிடாரென்றபடி (இதின்கீழென்றது) இந்தக்காலம் போலேயென்றபடி.; எழுமையுமென்று மேலுள்ள காலமெல்லாமென்னலாமோ? இங்கிருக்கும்நாள் ஆசார்யன் உத்தேச்யனொழிய பரமபதத்திலேபோனால் ஈச்வரனன்றோ உத்தேச்யனென்ன வருளிச்செய்கிறார் (இவருடைய நியமமிருக்கிறபடி யென்று). இந்த வாக்யத்தை விவரிக்கிறார் (ஒருதேசவிசேஷத்திலே யென்றுதொடங்கி) ஸ்ரீசத்ருக்நாழ்வான் ப்ரீதிபுர ஸ்க்ருதராயன்றோபோனார். இவருக்கும் ப்ரீதியுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (திருக்குருகூர் நம்பிக்கென்று துடங்கி)

"இன்று தொட்டுமெழுமையும் நின்றுதன்புகழேத்தவருளினான்"என்று மேலே கூட்டி, ஸ்வாமியானவன் ஸ்வத்தைக் குற்றங்கண்டு இகழுமோ? ஆகையாலே ஸர்வகாலமும் தன்புகழேத்த அருளினனென்றருளிச் செய்தார் கீழ். அன்றிக்கே, "இன்று தொட்டுமெழுமையும்-எனக்கெம்பிரான்", என்று கீழே கூட்டித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருகால்பகவத்

---

/ திருவாய் 1-10 3.

"இன்றுதொட்டும் எழுமையும் எனக்கு எம்பிரான்" என்று கீழோடே கூட்டவுமாம். ஒருகால் பகவத்ஸ்வம்மாய், ஒருகால் ஆழ்வார்க்கு ஸ்வம்மாயிராதே, ஸர்வகாலமும் ஆழ்வாருக்கு ஸ்வம் என்று தம்மை நினைத்திருக்கிறாராய்த்து. (எம்பிரான்) எனக்கு உபகாரகரானவர். என்னுடைய குன்றனைய குற்றத்தையே குணமாகக்கொண்டு நான் அத:பதியாமல் நோக்கினவர்; என்னுடைய அஹங்காரார்த்த காமங்களில் நசையறுத்து ஆத்மஜ்ஞாநாதிகளை உபகரித்தவளவன்றிக்கே பகவத்விஷயத்தில் காட்டிக்கொடாதே தாமே கைக்கொண்ட மஹோபகாரகர்.

மேல் அந்தவுபகாரந்தன்னை உபபாதிக்கிறார். (நின்றுதன் புகழேத்தவருளினான்) தம்முடைய ஸத்குண ஸம்ஸ்துதியைப் பண்ணும்படி அருளைப்பண்ணினார். (தன்புகழேத்தவருளினான்) "தென்குருகூர்நம்பியென்றக்காலண்ணிக்கும்" என்று துவக்கி "முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே" என்றதிறுதியாகத்தம்முடைய புகழை ஏத்தும்படியருளினார்.

---

ஸ்வம்மாயென்றுதுடங்கி). எம்பிரானென்றதுக்கு இரண்டுபொருள்; அதாவது ஸ்வாமித்வமாதல், உபகாரகத்வமாதல்; அதில்கீழ் ஸ்வாமித்வமருளிச்செய்தார்; உபகாரகத்வமருளிச்செய்கிறார் (என்னுடைய குன்றனைய குற்றத்தையென்றுதுடங்கி). (குன்றனைய குற்றமென்கிறது)- புன்மையாகக்கருதுவரென்றதைப்பற்ற. இந்த வாக்யத்தால், "நன்மையால்மிக்க" என்கிறபாட்டில் செய்தவுபகாரத்தையநுஸந்தித்தார். "நம்பினேன்பிறர்" என்கிறபாட்டில் செய்தவுபகாரத்தையும், நின்று தன்புகழேத்தவருளினானென்று இந்தப்பாட்டில் செய்தவுபகாரத்தையுமருளிச்செய்கிறார் (என்னுடைய அஹங்காரார்த்தகாமங்களென்று துடங்கி).

ஏத்தும்படி அருளின ப்ரகாரந்தானேதென்ன அருளிச்செய்கிறார் (தென் குருகூர்நம்பியென்றக் காலென்றுதுடங்கி). (துவக்கி) என்றது தொடங்கியென்றபடி.

ஆழ்வார் † "திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கிய" என்கிறபடியே ஈச்வரனையேத்துகைக்கன்றோ திருத்தினது; இங்ஙனேயிருக்க, இவர்

---

† இராமாநுச நூற்றந்தாதி-78.

(ஏத்த) † "நற்பூவைப்பூவின்றவண்ணன்புகழ்–இயற்றுவாய்" என்று தொடங்கி §"மொய்கழலே யேத்தமுயல்" என்று ஆழ்வார் தம்மைப்போலே ஏத்த உத்யோகித்து விட்டவளவன்றிக்கே பத்தும் பத்தாக ஏத்தும்படியருளினர்.

(தன்புகழேத்த) ஆழ்வார் பகவத் குணங்களையே புகழும்படித் திருத்தினரேயாகிலும் இவர் தம்முடைய ப்ரீதியாலே தன்புகழேத்தவென்கிறார். (தன்புகழேத்த) பகவத்குணங்கள்போலே குற்றம் காண்கையும் கண்டதுக்குத் தக்க தண்டம் பண்ணுகையுமாயோ ஆழ்வார் குணங்களிருப்பது? "அன்னையாயத்தனையென்னையாண்டிடும் தன்மையான்" என்கிறபடியே வாத்ஸல்யோத்தரமாயன்றோ இருப்பது. ஆழ்வாருடைய நிகரில் புகழ் இதிறே.

(தன்புகழேத்தவருளினன்) இவருடைய புருஷார்த்தஸாதநங்களிருக்கிறபடி. இவ்வாசிககைங்கர்யத்துக்கு ஸாதநம் ஆழ்வார் க்ருபையென்றறுதியிடுகிறார். ‡"நீயும்நின்னஞ்சிறைய சேவலுமாயாவாவென்றெனக்கருளி" என்று கடாக்ஷிகாரத்துக்கும் கருணையே வேணுமென்று ஆழ்வார்பாடே அறிந்து வைப்பரே. ஏத்துமிடத்தில் (நின்றுதன்புகழேத்தவருளினன்) ஆழ்வாருடைய குணங்களைப்புகழ்கையே புருஷார்த்தம். அது ஸித்திப்பதும் அவருடைய வருளாலேயென்று அத்யவஸிதனாய் ஏத்தும்படியுமருளி

---

ஆழ்வார் குணங்களை யேத்துகிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆழ்வார் பகவத் குணங்களையென்று துடங்கி). அன்னையாயென்று மாத்ருத்வஸம்பந்தம் முந்துற அருளிச்செய்கையாலே வாத்ஸல்யம்; தன் புகழேத்த வென்றது-ஸாத்யம்; அருளினனென்றது-ஸாதநம். கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (இவ்வாசிககைங்கர்யத்துக்கென்று துடங்கி). ஆழ்வாருடைய க்ருபையே உத்தாரகமென்று இவரறிந்தபடி யென்னென்ன அருளிச்செய்கிறார் (நீயும் நின்னஞ்சிறைய சேவலுமாயென்று துடங்கி), நின்றென்றதுக்கு-இரண்டு பொருள்; அதாவது-அத்யவஸிதனாய் நின்றென்னுதல், மநச்சைதில்யம் வாராமல் நின்றேத்தவருளினனென்னுதல்;

† பெரிய திருவ-1. § பெரிய திருவ-87. ‡ திருவாய் 1-4-1.

ணர். புருஷார்த்த பூதருமாய் ஸாதநபூதருமானவர்களிறே அத்ய வஸாயப்ரதரும். (நின்றுதன்புகழேத்த) அவருடைய குணாநுஸந்தா நத்திலே மநச்சைதில்யம் பிறக்கையாலே 161 **"मुने वक्ष्याम्यहं बुद्ध्वा"** (முநே வக்ஷ்யாம்யஹம் புத்வா) என்கிறபடியே நெஞ்சை ஒருங்கப் பிடித்து நின்று ஏத்தவென்றுமாம்.

(குன்றமாடமித்யாதி) பர்வதசிகரங்களைக் கொண்டு வந்து வைத்தாப்போலே யிருக்கிற மாடங்களையுடைத்தான திருநகரியிலே வர்த்திக்கிற பூர்ணரானவாழ்வார். கீழிற்பாட்டில் செம்பொன் மாடமென்று - மாடங்களினுடைய அலங்காரத்தைச்சொன்னார். இதில் மாடங்கள் வெறும்புறத்திலே ஆகர்ஷகமாய் ஸர்வதாது ஸமலங்க்ருதமாய் ஸம்ஸார பீதர்க்கு அண்டைகொள்ளலாம்படி யிருக்குமென்கிறார். (நம்பி) யாவதாத்மபாவி தம்முடைய புகழை ஏத்தாநின்றாலும் வரையிடாத குணபூர்த்தியையுடையவர்.

(என்றுமென்னையிகழ்விலன்) எனக்கு தோஷம் மேலிட்ட போதோடு குணம்மேலிட்டபோதோடு வாசிபற என்னையநாதரிக் கிறிலர். (நம்பி என்னையென்று மிகழ்விலன்) அவர் என்னைய நாதரிப்பராகில் அவருடைய பூர்த்திகிறம் பெறும்படியென்?

---

அத்யவஸிக்கை சைதந்யகார்யமன்றோ? இவரேத்தும்படியருளினரென் பானென்? ஏத்தும்படியுமருளினனென்று ஸமுச்சயிக்க வேண்டுவானென் னென்னவருளிச்செய்கிறார் (புருஷார்த்தபூதருமாயென்று துடங்கி). அன் றிக்கே ஆழ்வாருடைய குணாநுஸந்தாநப்ரீதியாலே நெஞ்சு உடைகுலைப் படாதே ஒருங்கப்பிடித்து நின்று ஏத்தவருளினனென்னுதல். (புத்வா) என்றது-ஸர்வஜ்ஞரான நாரதர் இப்போது விசாரித்துச் சொல்லவேண்டுவ தில்லையே; ஆயிருக்கச் செய்தேயும் வால்மீகிபகவாந் பகவத்குணங்களை ஸ்மரிப்பிக்க, அதனாலே வித்தராய்க்கலங்கி விசாரித்துச் சொல்லுகிறே னென்கிறாரென்றபடி. (புத்வா) விசாரித்து.

குன்றமென்கையாலே ஆகர்ஷகமுமாய் ஸர்வதாதுஸமலங்க்ருதமாய் ஸம்ஸாரபீதர்க்கு அண்டைகொள்ளலாம்படி யிருக்கை யென்றபடி. (வரையிடாத) என்றது - அளவிடவொண்ணாதவென்றபடி.

(உங்களுக்கேற) என்றது-உங்கள் யுத்தியிலேயேறவென்றபடி, இவ் வர்த்தம் உங்களுக்கேற வென்ற கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (பகவத்

(குன்றமித்யாதி) அம்மாடங்களுக்குச் சலநமுண்டானாலும் ஆழ்வார் திருவுள்ளம் என்னளவில் சலியாது.

(காண்மினோ) இவ்வர்த்தம் உங்களுக்கேறக்காணமாட்டிகோளோ? (காண்மினோ) பகவத்குணங்களையாராய்கிற நீங்கள் அத்தைவிட்டு ஆழ்வார் குணங்களை நெஞ்சாலே காணமாட்டிகோளோ? (காண்மினோ) 162 "**प्रारब्धमुत्तमगुणा न परित्यजन्ति**" (ப்ராப்தமுத்தம குணா ந பரித்யஜந்தி) என்றும், §"பாணனார் திண்ணம்" என்றும் சொல்லுகிறப்ரமாணங்களிலே பார்த்துக்கொள்ளமாட்டிகோளோ?

ஆறாம் பாட்டின் அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

குணங்களை யாராய்கிறவென்று துடங்கி). (காண்மினோ) இது ப்ரத்யக்ஷமன்றோவென்னுதல், பகவத் குணங்களை யாராய்கையை விட்டுக் காணுங்கோளென்னுதல், ப்ரமாணமுகத்தாலே காணுங்கோளென்னுதல். (பாணனார்) ஸர்வநிர்வாஹகர். (திண்ணம்) ஆச்ரிதரக்ஷணதார்ட்யம்,

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.



§ பெரிய-திரு8-2-2.

ஏழாம்பாட்டு

7. கண்டு கொண்டென்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினான்
எண்டிசையு மறிய வியம்புகேன்
ஒண்டமிழ்ச் சடகோப னருளையே.

பதவுரை:—பிரான்—பரமோபகாரகராய், காரி மாறன்—பொற்காரியார் திருக்குமாரரான நம்மாழ்வார், என்னை-(தமது பெருமை அறியாத) என்னை, கண்டு—கடாக்ஷித்து, கொண்டு—கைக்கொண்டு பண்டைவல்வினை — அநாதியாய்ப் பிரபலமாயிருந்த பாபங்களை, பாற்றி அருளினான்—அழிந்து போம்படி போக்கடித் தருளினார்; (ஆதலால்) ஒண் தமிழ் சடகோபன் அருளையே—அழகிய தமிழ்க் கவிகளுக்கு இருப்பிடமான அவ்வாழ்வாருடைய அருளையே, எண் திசையும்—எட்டுத்திக்கிலுள்ளவர்களும், அறிய—அறியும்படி, இயம்புகேன்—சொல்லக்கடவேன.

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்

அவ:—ஏழாம்பாட்டு. என்னுடைய ஸகலப்ரதிபந்தகங்களையும் போக்கின ஆழ்வாருடைய நிர்ஹேதுகவிஷயீகாரத்தை ஸுப்ரஸித்தமாக்குவேனென்கிறார்.

வ்யா—(கண்டுகொண்டென்னை) § "இருந்தான் கண்டு கொண்டு" என்று எம்பெருமான் ஆழ்வாரைக்கண்டு கொண்டிருந்தாப்போலே ஆழ்வாருக்கு அலப்யலாபமாகிறபடி; காட்சி இத்தலைக்காகவன்றிக்கே தம் பேறாக விருக்கிறபடி. (காரிமாறப்பிரான்) ஆழ்வார் ¶ "பிரான் பெருநிலங் கீண்டவன்" என்னுமாபோலே இவரும் காரிமாறப்பிரானென்கிறார்.

(பண்டைவல்வினைபாற்றியருளினான்) / ப்ரவாஹமநாதியாகையாலே அடிகாணவல்லாரில்லை; அந்தவத்தாகையாலே அடியுண்டென்று அநுமிக்குமித்தனையிறே; 'ப்ராயச்சித்த விநாச்யமன்றுகர்மம், அநுபவவிநாச்யம்' என்கிற ப்ரமாணத்துக்கும் அவ்வருகாய்க்காணுமிருப்பது; கரியகோலத் திருவுருக் காண்பனென்னு மத்தையும் தவிர்ப்பித்தாப்போலே காணும் ஆழ்வார்; உத்தேச்ய விரோதி பாபமாமித்தனையிறே; "மதிநலமருளினன்"

§ திருவாய் 8-7-2. ¶ திருவாய் 1-7-6. / (பா) ஸம்ஸாரம்.

என்று தலைசெய்த்தார் ஆழ்வார்; இவரும் தமக்கு உபகரித்தவிடத்தை அருளிருனென்கிறார்.

(எண்டிசையுமறிய வியம்புகேன்) விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞ ரோடு வாசியற எல்லாருமறியச் சொல்லுகிறேன். இவ்வுபகாரம் நிரவதிக மாருப்போலே திக்குக்களும் நிரவதிகமாகப்பெற்றிலோம்; இது என்னள விலே பர்யவஸிப்பதே யென்கிறார்.

(ஒண்டமிழ்) ஒள்ளியதமிழ். பெரிய ஆழத்தில் உள்ளுக்கிடந்த பதார்த்தங்களெல்லாம் தரையிலே காணுமாபோலே அதிக்ருதாதிகார மாய் அவகாஹிக்கவொண்ணுதே, 163 "यतो वाचो निवर्तन्ते" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்னும் விஷயத்தை ஸர்வாதிகாரமாக்குகையாலே ஒண்டமிழென்கிறது.

(சடகோபனருளையே) மயர்வறமதிநல மருளினதுக்கு மகப்படாத என்னையும் ஆழ்வாரங்கீகரித்த அருளைக்கிடீர் சொல்லுகிறது.

ஏழாம்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.



# நம்பிள்ளை ஈடு

அவ:—ஏழாம்பாட்டு. ஆழ்வார் தம்பக்கல் நிர்ஹேதுகமாக விஷயீகரித்த விஷயீகாரத்தைக்கண்டு இத்தை நாட்டாறியாதே அநர்த்தப்படுகிறபடியைப் பார்த்து இத்தை எல்லாருமறியும்படி கூப்பிடுவேனென்கிறார்.

வ்யா:—(கண்டுகொண்டு) கிட்டினவாறே தப்மைப்பெறுகைக்கு எதிர்சூழல்புக்குத் திரிந்தாரிவரென்று தோற்றியிருந்து, (என்னை) இந்த நிர்ஹேதுகவிஷயீகாரத்தை ப்ரதிபத்திபண்ணவும் மாட்டாதே யிருக்கிறவென்னை. (காரிமாறப்பிரான்) உபகாரஸ்ம்ருதியாலே பிரா னென்கிறார்; காரிமாறனென்கிற விசேஷணத்தாலே ஆழ்வாருக்கு உபகாரகனான ஈச்வரனளவிலே போகாமைக்காகச் சொல்லுகிறார்.

(பண்டைவல்வினை) அநாதிகாலம் ஸஞ்சிதமான இதரவிஷய ப்ராவண்ய ஹேதுவான பாபம், ஸூர்ப்பணகியைப்போலே வழி யல்லாவழியே பற்றுகைக்கீடானருசி, ப்ரதமாவதியான பகவத் விஷயத்தளவிலே பிறந்த புருஷார்த்தபுத்தி-இவையடங்கலும். (வல் வினை) ப்ராயச்சித்த ஸாத்யமுமன்றிக்கே அநுபவவிநாச்யமுமன் றிக்கேயிருக்கை. (பாற்றியருளினன்) 164 "द्विषन्तः पापकृत्यां" (த்விஷந்த: பாபக்ருத்யாம்) என்கிறபடியுமன்றிக்கே உருமாய்ந்து போம்படிபண்ணினன்.

(எண்டிசையுமறியவியப்புகேன்) விஸேஷஜ்ஞரோடு அவி ஸேஷஜ்ஞரோடு வாசியற ருசியுடையாரெல்லாரும் அறியும்படி சொல்லுகிறேன். §"தொண்டரெல்லீரும்வாரீர்" என்னுமாழ்வா ரோட்டை வாஸநையாலே சொல்லுகிறார்.

(ஒண்டமிழ்ச்சடகோபனருளையே) மயர்வறமதிநல மருளின அருள்போலன்று இவருடையவருள். அவ்வருளுக்குங்கூடத் தப் பின எனக்கருளினவருளிறே. (ஒண்டமிழ்) ஒள்ளிய தமிழ்.

ஏழாம்பாட்டின் நம்பிள்ளைஈடு முற்றிற்று.



§ திருவாய் 5-2-2.

# பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்

அவ:—ஏழாம்பாட்டில், ஆழ்வார் தம்பக்கல் பண்ணின நிர்ஹேதுக விஷயீகாரத்தைக்கண்டு, இவ்விஷயீகாரத்துக்கு யோக்யதையுண்டாயிருக்க நாட்டாரிழக்கைக்கடியென்? என்றநுஸந்தித்து, இவருடைய பெருமையை அறியாமையாலே இழக்கிறார்களென்று எல்லாருமறியும்படி சொல்லக்கடவேனென்கிறார்.

வ்யா:—(கண்டுகொண்டு) நான்கிட்டினவளவில் ஆழ்வார் திருவுள்ளம் நிதியெடுத்தாப் போலேயிருந்ததென்கிறார். தம்மைப் பெறுகைக்கு எதிர்சூழல்புக்குத் திரிந்தாரிவரென்று தோற்றும்படியிருந்ததென்கிறார். அவருடைய க்ருபைக்கு அநுத்தமமான பாத்ரமிறே நான். (என்னை) நாட்டாரிற்காட்டில் ஆழ்வாருக்குண்டான வாசியறியாதவென்னை. தம்முடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தை ப்ரதிபத்தி பண்ணவுங்கூட மாட்டாதவென்னை என்றுமாம்.

(காரிமாறப்பிரான்) ஆழ்வார் தம்பக்கலிலே பண்ணினவுபகாரத்தை நினைத்துப் பிரானென்கிறார். "காரிமாறப்பிரான்" என்கிற

---

அரு:—ஏழாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், நின்றுதன்புகழேத்த அருளினானென்று ஆழ்வாருடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தை அநுஸந்தித்தவர், எல்லாருக்குமுண்டாகவேணுமென்று, எண்டிசையுமறிய இயம்புகேனென்கையாலே ததநுகுணமாக ஸங்கதியருளிச்செய்கிறார் (ஆழ்வார் தம்பக்கலித்யாதி). கண்டுகொண்டென்றதுக்கு-காணாததைக் கண்டென்றும், தேடினதைக்கண்டென்றும் இரண்டு தாத்பர்யம். இவ்விரண்டையுமடைவே அருளிச்செய்கிறார் (நான்கிட்டினவித்யாதி வாக்யத்வயத்தாலே),

இப்படி தம்மிடத்திலிருக்கைக்கடி யென்னென்னவருளிச் செய்கிறார் (அவருடைய வித்யாதி). (அநுத்தமம்) யஸ்மாதுத்தமம்நாஸ்தி - ததநுத்தமமென்று பஹுவ்ரீஹி; தோஷபூயிஷ்டதையாலே தாமே க்ருபைக்கு உத்தமமான பாத்ரமென்றபடி; அறியவியம்புகே னென்ற உத்தமனாலே என்னை யென்றது ஸித்தமன்றோ? என்னை யென்று சொல்ல வேணுமோ? என்ன, இதுக்கு இரண்டுதாத்பர்ய மருளிச்செய்கிறார் (நாட்டாரித்யாதி வாக்யத்வயத்தாலே).

விஶேஷணத்தாலே ஆழ்வாருக்கு உபகாரகனான ஈச்வரன்பக்கல் போகாமைக்காக விஶேஷிக்கிறார். 165 "सुहृदं सर्वभूतानां" (ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்) என்கிறபடியே அவனுடைய உபகாரகத்வம் ஸர்வஸாதாரணமாயாய்த்திருப்பது. அந்த ஸாமாந்யத்தில் புகாமைக்காகத் தம்முடைய ஸௌஹ்ருத்தை விஶேஷிக்கிறார்.

(பண்டைவல்வினை) அநாதிகாலம் ஸஞ்சிதமாய் விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவான பாபம், ஶூர்ப்பணகையைப்போலே வகுத்தவிஷயத்தைப் பற்றுகைக்கு வழியல்லாவழியே யிழிகைக்கடியானபாபம், ப்ரதமாவதியான பகவத்விஷயமே புருஷார்த்தமென்கிற புத்திக்கடியான பாபம் இவையாய்த்து-பண்டைவல்வினையாவது; வல்வினை-ப்ராயச்சித்த நாச்யமுமன்றிக்கே அநுபவ விநாச்யமுமன்றிக்கேயிருக்கை.

(பாற்றியருளினான்) 164 "द्विषन्तः पापकृत्यां" (த்விஷந்த: பாபக்ருத்யாம்) என்றும், /"சுடமெனுதேகைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" என்றும் சொல்லுகிற ப்ரகாரங்களன்றிக்கே உருமாய்ந்துபோம்படி பண்ணினார்; "தன்புகழேத்தவருளினான்" என்கிறபடியே தம்மையே வாய்புலத்தும்படி பண்ணினார்.

---

காரிமாறனென்றால் போராதோ? பிரானென்ன வேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). பிரானென்றால் போராதோ? காரிமாற பதந்தானென்னென்ன வருளிச்செய்கிறார் (காரியித்யாதி). காரியென்று-ஆழ்வார் திருத்தமப்பனார். மாறனென்று-ஆழ்வார் திருநாமம்.

ஸ்ரீமதுரகவிகள் நிஷ்டாநுகுணமாக ப்ரஸித்த பாதகமாத்ரமாகச் சொல்லாதே பின்னையும் உள்ளவற்றை யெல்லாம் கூட்டியருளிச்செய்கிறார் (அநாதித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே.)

பாற்றியென்றது-நசிப்பித்தென்றர்த்தமாய், அதைவ்யாவர்த்யபூர்வகமாக வருளிச்செய்கிறார் (த்விஷந்த இத்யாதி) பாபக்ருத்யாம் பாபக்ரியையை; "க்ருத்யாக்ரியாதைவதயோ:" என்று நிகண்டு.

அருளினனென்றதுக்கு அர்த்தம் (தன்புகழித்யாதி), எண்டிசையென்றதுக்கு-எட்டுத்திக்குக்களென்றாய், அது-மஞ்சா:க்ரோசந்திபோலேதத்ரத்

---

/ பெரியாழ்-திரு 5-4-3.

(எண்டிசையுமறிய வியப்புகேன்) விஶேஷஜ்ஞரோடு அவி ஶேஷஜ்ஞரோடு வாசியற எல்லாருமறியும்படி சொல்லுகிறேன். ‡ "தொண்டரெல்லீரும் வாரீர்" என்னும் ஆழ்வாரோட்டை வாஸனையாலே சொல்லுகிறார். அவர் பகவத்விஷயத்தில் ருசியாலே அவ்விஷயத்தில் ருசியுடையாரெல்லாரும் வாருங்கோளென்கிறார். இவர், ஆழ்வார்பக்கல் ருசியுடையாரெல்லாரும் வாருங்கோளென் கிறார், ஆழ்வார்பக்கல் பாவபந்தத்தாலே.

(ஒண்டமிழ்ச் சடகோபனருளையே) மயர்வற மதிநல மருளின வனுடைய அருள்போலல்ல ஆழ்வாருடையவருள்; அவ்வருளுக்கும் அயலானவளவிலே வரப்பண்ணினவருளிறே.

(ஒண்டமிழ்) ஒள்ளியதமிழ்; அழகியதமிழென்றபடி. பாலேய் தமிழரிசைகாரர் பத்தர்பரவும்படி திருவாய்மொழிபாடின அருளுக்கு மேலேயிறே என்னை விஷயீகரித்த அருள்.

*ஏழாம்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் முற்றிற்று.*

---

யரைச்சொல்லுகிற தென்கிறார் (விசேஷேத்யாதி). ஆழ்வாரையநுபவிக்கிற இவர், பரோபதேசப்ரவ்ருத்தராய் எல்லாரையுமழைக்கிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (தொண்டரித்யாதி வாக்யத்ரயத்தாலே).

சடகோபனருளென்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாகத்தாத்பர்யம் (மயர் வற வித்யாதி). வ்யாவ்ருத்திதன்னை உபபாதிக்கிறார் (அவ்வருளுக்கு மித்யாதி). (அயலான) அசலான. ஒண்டமிழென்று விசேஷிக்கையாலே திருவாய்மொழியருளிச்செய்தவருள் தோன்றுகையாலும், சடகோபனரு ளென்கையாலே-பண்டைவல்வினைபாற்றியருளின அருளைச்சொல்லுகை யாலும், இவ்விரண்டுக்கும் விசேஷத்தை தர்சிப்பிக்கிறார் (பாலேயித்யாதி). [காரிமாறப்பிரான் - என்னைக்கண்டுகொண்டு பண்டைவல்வினைபாற்றியரு ளினான். இந்த ஒண்டமிழ்ச்சடகோபனருளை - எண்டிசையுமறியவியப்பு கேன்] என்றந்வயம்.

*பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.*

---

‡ திருவாய் 5-2-3.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநம்

அவ:—ஏழாம்பாட்டு, (கண்டித்யாதி), கீழ்மூன்றும் பாட்டிலே தம்முடைய புன்மையைக்கண்டு பெரியவர்களும் தம்மையிகழ்ந்தபடி சொல்லி, இவனுக்கு நம்மையொழிய இனிக்கதியில்லையென்று, ஆழ்வார் மாதாபிதாவாய்நின்று தம்மளவிலபிமாநித்தபடியையும் சொல்லி, அநந்தரம் பாட்டிலே அந்தப் புன்மை தானேது? ஆழ்வார் தம்மை நீர்கிட்டினவழி யென்னென்று கேட்க, அவற்றுக்கு உத்தரம் சொல்லி, கீழிற்பாட்டிலே இப்போதுகைக்கொண்ட ஆழ்வார் உம்முடைய குற்றங்கண்டு இன்னும் இகழில் செய்வதென்னென்ன, இன்றுதுடங்கி காலதத்வமுள்ளதனையும் என்னை யிகழாதே தம்முடைய குணஸ்துதியே காலயாத்ரையாம்படி பண்ணினர். ஆனபின்பு என்குற்றம் மேலிடுமோ? மேலிட்டாலும் பரிபூர்ணரானவர் என்னைநெகிழப்புகுகிருரோவென்ருர்.

இதில் ஆழ்வார் என்னையங்கீகரிக்கிறபோதே என்னுடைய துர்க்கதிகண்டு, இவன்பக்கல் இவைகிட்டக்கடவதல்ல என்று பழையதாய் வலியதான பாபங்களைப் பாறிப்போம்படி பண்ணியன்றே க்ருபைபண்ணிற்று, இனி இவற்றுக்கு † உயிருண்டோவென்று கீழுக்தத்தைப் பரிஹரித்துக்கொண்டு, "தன்புகழேத்தவருளினன்" என்று ஆழ்வாருடைய க்ருபை கீழே ப்ரஸ்துதமாகையாலே அவருடைய க்ருபாப்ரபாவத்தை திகந்தரங்கள் தோறும் வெளியிடக்கடவேனென்கிருர். 166 "गुरुं प्रकाशयेन्नित्यं" (குரும்ப்ரகாஶயேந்நித்யம்) என்கிற வித்யநுஷ்டாநம் பண்ணக்கடவேனென்கிருர்.

---

அரு:—ஏழாம்பாட்டு:—(கண்டித்யாதி), (அநந்தரம் பாட்டிலே) என்றது அநந்தரமான பாட்டாலே யென்றபடி; ஆழ்வாருடைய குணங்களெல்லாம் கிடக்க க்ருபையைக் கொண்டாடுகிற தென்னென்ன, எல்லாகுணங்களிலும் க்ருபையே அதிசயித்திருக்கையாலே அவர் க்ருபாகுணத்தையே கொண்டாடுகிருரென்கிருர். (இனி ஆழ்வாருக்கு பகவத்விஷயத்திலே பரத்வ

† ஸந்திக்தம

இனி ஆழ்வாருக்கு பகவத்விஷத்திலே பரத்வபுத்தி, தேவ தாந்தரங்களில் பரத்வபுத்தி நிவ்ருத்தி, அப்பரவஸ்துவின்பக்கல் ததீயஶேஷத்வ பர்யந்தையான ஶேஷத்வபுத்தி, விஷயாந்தர விரக்தி, பகவத்விஷயத்தை விச்லேஷிக்கில் தரைப்படும்படியான ப்ராவண்யாதிஶயம், அவன்கைவிடில் தமக்குப் புறம்புபோக்கில்லை யென்னும்படியான விச்வாஸாதிசயம், ஸம்ஸாரபீதி, புருஷார்த்த லாபத்தில் அதிஶயிதத்வரை, அர்ச்சாவதாரங்களிலுண்டான ப்ராவண்யமென்றுப்போலே சொல்லுகிற ஆத்மகுணங்களிற் காட்டில் §“வீடுமின்முற்றவும்” என்றுதுடங்கி †“கண்ணன் கழ லிணை”யீருக பலவிடங்களிலும் ஸம்ஸாரிசேதநருடைய துர்க்கதி கண்டு பொறுக்கமாட்டாமே உபதேசிக்கைக்கடி க்ருபையாகையாலே, அந்த க்ருபாப்ரபாவத்தை அநுஸந்தித்து அத்தையெல்லாருமறி யும்படி வெளியிடக்கடவேனென்கிறார். ஈச்வரன் நிரதிஶயக்ருபா வானுயிருந்தானேயாகிலும் ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டனாகையாலே தோஷதர்ஶநத்தாலே உபேக்ஷிப்பது மொருபுடையுண்டு; ஆழ்வார் அப்படியன்றிக்கே பற்றினாரையிகழாதவராயிற்று.

வ்யா:—(கண்டுகொண்டித்யாதி), “எம்பிரான்நின்று தன்புக ழேத்தவருளினான்” என்று இவர் சொல்லக்கேட்டவர்கள் நீரேத்து கிறபடிதானேதென்ன; ஆழ்வாருடைய க்ருபையையன்றோ வென்கிறார்.

ஆழ்வாருக்கு, ஜ்ஞாநம் பக்தி விரக்தி க்ருபையென்று சில குணங்களுண்டு; அதில் ஜ்ஞாநம், சிதசிதீச்வரரூபமான தத்வ

புத்தியென்று துடங்கி), ஈச்வரனுடைய க்ருபையைப் பற்ற ஆழ்வாருடைய க்ருபைக்கு அதிசயமேதென்ன அருளிச்செய்கிறார் (ஈச்வரன் நிரதிசய க்ருபாவானுயிருந்தானேயாகிலு மென்று துடங்கி).

அந்த க்ருபாப்ரபாவத்தை அநுஸந்தித்து அத்தை யெல்லாருமறியும் படி வெளியிடக்கடவேனென்கிறார். அன்றிக்கே ப்ரசநம்பண்ண அரு ளிச்செய்கிறாராகவுமாம் (எம்பிரான் நின்று தன்புகழேத்த அருளி னு னென்று துடங்கி).

§ திருவாய் 1-2-1. † திருவாய் 10-5-1.

த்ரயவிஷயமாயிருக்கும்; பக்தி ஈச்வரைக விஷயமாயிருக்கும். விரக்தி தத்வத்வய விஷயமாயிருக்கும். த்யாஜ்யோபாதேயவிவேக விஷயமாயிருக்கும் ஜ்ஞாநம்; உபாதேயைக விஷயம்பக்தி. த்யாஜ்யைகவிஷயம்விரக்தி; க்ருபை-தார்க்கதவிஷயமாயிருக்கும்; அதில் ஜ்ஞாநம்-தத்வஜ்ஞாநம், ஸாக்ஷாத்காரஜ்ஞாநம்; அதில் பகவத் ஸ்வரூபவிஷயம், குணவிஷயம், விபூதிவிஷயம், விக்ரஹவிஷயமென்றுப்போலே பலகப்புகளை உடைத்தாயிருக்கும்; பக்தியும் /"காதல் கடல்புரையவிளைவித்த" ‡"காதல் கடலின் மிகப்பெரிதால்" ||"மண்திணி ஞாலமுமேழ்கடலும் நீள்விசும்பும் கழியப்பெரிதால்" ɪ"அதனில்பெரிய வென்னவா" என்னும்படி அநேகபர்வையாயிருக்கும்; விரக்தியும்-ப்ராக்ருதிப்ராக்ருத விரக்தி, தேவதாந்தர விரக்தி, தேவதாந்தரபார்பக்கல் விரக்தி, ஶப்தாதி விஷயவிரக்தி, ஆத்மாநுபவவிரக்தி, பகவதநுபவத்தில் எனக்கென்னுமதில் விரக்தி, இப்படி பஹுவிதையாயிருக்கும்.

இவையெல்லாவற்றிலும் விஞ்சியாய்த்து க்ருபாகுணமிருப்பது. ஈச்வரனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகளும் ஸம்ஸாரிகளுடைய ரக்ஷண ஶேஷமாகாமல் பாதகஶேஷமாக, அவற்றை ரக்ஷணத்திலே புரிப்பித்துத்தருவது க்ருபையாய்த்து; அந்த ஈச்வரக்ருபையிற்

---

ஆழ்வாருடைய ஜ்ஞாநபக்தி வைராக்யங்களைக் கொண்டாடவேண்டியிருக்க, அவற்றைவிட்டு க்ருபையைக் கொண்டாடுகைக்கு க்ருபாகுணத்துக்கு அதிசயமுண்டென்றருளிச் செய்கிறார் (ஆழ்வாருக்கு ஜ்ஞாநம் பக்தி விரக்தி க்ருபையென்று சில குணங்களுண்டென்று தொடங்கி) (தத்வத்வயமென்றது) ஆத்மாநுபவமும், ஐச்வர்யமும். அன்றிக்கே, ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள்; ஆத்மாவில் ஸ்வபோக்ருத்வம்;

கீழருளிச்செய்த வாக்யத்ரயத்தையும் விவரிக்கிறார் (த்யாஜ்யோபாதேய விவேகவிஷயம் ஜ்ஞாநமென்றுதுடங்கி.) பகவத்விஷய ஜ்ஞாநந்தான் தத்வஜ்ஞாநமென்றும், ஸாக்ஷாத்காரஜ்ஞாநமென்றும், த்விவிதமாயிருக்கும். தத்வஜ்ஞாநமென்றது சாஸ்த்ரஜந்யஜ்ஞாநம்; ஸாக்ஷாத்காரஜ்ஞாநமாவது-ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸஸாக்ஷாத்காரமென்னுதல், முக்ததசையில் ஸாக்ஷாத்காரமென்னுதல்; இந்த ஸாக்ஷாத்கார ஜ்ஞாநந்தான்

/ திருவாய் 5-3-4. ‡ திருவாய் 7-3-6. || திருவாய் 7-3-8.
ɪ திருவாய் 10-10-10.

காட்டில் ஆழ்வார்க்ருபையினுடைய தன்னேற்றத்தை இப்பாட்டாலே அருளிச்செய்கிறார்.

(கண்டுகொண்டென்னை) தம்முடைய துர்க்கதியைச் சொல்லுகிறார். (என்னைக்கண்டு) ஸத்துக்களாலே அஸமீக்ஷ்யனான என்னைக்கூசாதே கடாக்ஷித்து. (என்னைக்கண்டு) இவருடைய 167 "यं पश्येत्" (யம் பச்யேத்) என்கிற ப்ரதம கடாக்ஷமிருக்கிறபடி. (கொண்டு) தோஷம்பட்டவாறே காற்கடைக் கொள்ளாதே கைக்கொண்டார். (என்னைக்கண்டு, என்னைக்கொண்டு) பார்க்க வொண்ணாத வென்னைப்பார்த்தார். எல்லாரும் கைவிட்டவென்னைக் கைக்கொண்டார். இவர் ஸ்வீகரித்தால் அவனாலும் விடப்போகாதே.

(காரிமாறப்பிரான்) ‡ என்னைக்கொண்டென் பாவந்தன்னையும் பாறக்கைத்தெமரேழெழுபிறப்பும் மேவும் தன்மையமாக்கின ஆழ்வாருடைய பிரானன்று. (காரிமாறப்பிரான்) அவனைப்போலே தானன்றேன்றியான பிரானன்று; அபிஜாதரான ஆழ்வார். (காரி

---

விஷயபேதேந பேதித்திருக்குமென்றருளிச் செய்கிறார் (அதில் பகவத்ஸ்வரூபவிஷயமென்று துடங்கி). (கப்புக்கள்) பர்வங்கள். (ப்ரக்ருதி) என்று சரீரம்; (ப்ராக்ருதங்கள்) என்று ப்ராக்ருத பந்துக்களைச் சொல்லுகிறது. (பாதநம்) என்றது-பாதை.

என்னையென்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தம்முடைய துர்க்கதியைச் சொல்லுகிறாரென்று); (தோஷம் பட்டவாறே) என்றது தோஷம் நெஞ்சிலே பட்டவாறே யென்றபடி. என்னைக்கண்டு, என்னைக் கொண்டு, என்று-என்னையென்ற பதத்தை இரண்டிடத்திலும் கூட்டி முன்பருளிச் செய்தவர்த்தத்தையே விவரிக்கிறார் (பார்க்கவொண்ணாத வென்னையென்று துடங்கி). இவர்கைக்கொண்டாலும் ஈச்வரனுபேக்ஷித்தாலோவென்ன அருளிச் செய்கிறார் (இவர் ஸ்வீகரித்தாலென்று துடங்கி).

மாறப்பிரானென்கையாலே ஆழ்வாருடைய பிராஞன ஈச்வரனை வ்யாவர்த்திக்கிறது; காரிமாறனென்கையாலே ஆபிஜாத்யம் சொல்லுகிறது, பண்டைவல்வினையென்கிற பதத்தை யார்த்தத்தையும் கூட்டியருளிச் செய்கிறார் (அநாதிஸித்தமுமாயென்று துடங்கி). மோக்ஷயிஷ்யாமியாவது பாபத்தில் நின்றும் விடுவித்தவித்தனையொழிய பாபத்தைப்பொடி பண்ணவில்லையென்றபடி. (பாறுபாறும்படி)என்றது-தூளிதூளியாம்படியென்றபடி.

---



‡ திருவாய் 2-7-4.

மாறப்பிரான்) அக்குடியிலே பிறந்து எனக்கு உபகரித்தவர். (காரிமாறப்பிரான்) தான் பிறந்து என்பிறவியை அறுத்தவர்.

(பண்டைவல்வினை பாற்றியருளினான்) (பண்டைவல்வினை) ஸ்வரூபாநுபந்தியோ என்னும்படி இவ்வாத்மாவோடே பழகிப் போந்தபாபம். அநாதிஸித்தமுமாய் அநுபவவிநாச்யமுமல்லாத பாபம். (வல்வினை) ஸர்வபூதஸுஹ்ருத்தான ஈச்வரன் ஸௌஹார்த்தத்தைப் பொகட்டு 104"क्षिपामि"(க்ஷிபாமி) என்னும்படியான பாபம். (வல்வினை) ஆழ்வார் ஒரு கடாக்ஷம் நோவேண்டும்படியான பாபம்.

(பாற்றி) அத்தைப்பாறப்பண்ணி; ஈச்வரனைப்போலே மோக்ஷயிஷ்யாமிபண்ணி விடுகையன்றிக்கே பாறு பாறும்படி பண்ணினார். எந்தத் தூற்றிலே புக்கதென்று தேடும்படி பாற்றினார். (என்னைக்கொண்டு-பண்டை வல்வினை பாற்றியருளினான்) ஈச்வரனைப் போலே 158 "मामेकं शरणं व्रज-मोक्षयिष्यामि"(மாமேகம் சரணம் வ்ரஜ-மோக்ஷயிஷ்யாமி) என்கையன்றிக்கே தாமே என்னை ஸ்வீகரித்து, என் பாபபந்தத்தையும் பாற்றியருளினார்.

(அருளினான்) தம்முடைய புகழையேத்தும்படி அருளினார். விரோதி நிவ்ருத்தியையும்பண்ணி அபிமதப்ராப்தியும் பண்ணினார். (பண்டைவல்வினை பாற்றியருளினான்) அநாதிஸித்தமான பாபத்தைப் போக்கி, தம்முடைய குணஸ்துதியே எனக்கு யாத்ரையாம்படி பண்ணினார்.

(எண்டிசையுமித்யாதி) ஸ்வரக்ஷணத்திலே தத்பராயிருப்பாரும், தேவதாந்தரங்கள் ரக்ஷகமென்றிருப்பாருமான கோஷ்டிகளிலேசென்று ஆழ்வாருடைய க்ருபையை வெளியிடக்கடவேன். எண்டிசையுமென்று - பத்து திக்குக்குமுபலக்ஷணம். மேலேற மாட்டாமலும் கீழிழியமாட்டாமலும் எண்டிசையுமென்கிறார்.

---

அருளினானென்கையால் தம்முடைய குணஸ்துதியே எனக்கு யாத்ரையாம்படி பண்ணினாரென்றபடி.

எண்டிசையுமென்றதுக்குக் கீழும் மேலுமுண்டான எல்லாலோகங்களுமுபலக்ஷணமாகவுமாம்; அன்றிக்கே, எட்டுத்திக்குமாத்ரமாய், கீழ்மேல் சொல்லாமைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மேலேறமாட்டாமலுமென்று துடங்கி.) மேலும் கீழும்போகமாட்டாமைக்கு ஹேது அருளிச்செய்கிறார் (ஆழ்வாருடைய அருளுண்டாகையாலே யென்றுதுடங்கி),

ஆழ்வாருடைய அருளுண்டாகையாலே அத: பதநமில்லை. ஆழ்வார் போனாலல்லது போகாதவராகையாலே மேலேறமாட்டார்.

(அறியவியப்புகேன்) §"நாடுநகரமும் நன்சறிய" என்னுமா போலே எல்லாருமறியும்படியாக. (இயப்புகேன்) ஆழ்வாருடைய க்ருபாப்ரபாவத்தையும், அது தம்மளவிலே பலித்தபடியையும், தம்முடையபாபம் போனபடியையும், தமக்கு அபிமதலாப முண்டானபடியையும் இவையாயிருந்தது-இவர் இயம்புகிறது.

(ஒண்டமிழ்ச்சடகோபன்) என்னளவில் பண்ணும்முபகாரத்தையோ நானியம்புவது? லோகத்தாருக்கு அவர் பண்ணின உபகாரத்தையும் சொல்லியன்றோ? கருணையாலே என்னைத்திருத்தினபடியையும், கவிபாடி லோகத்தைத் திருத்தினபடியையும் இயப்புவேன். (சடகோபனருளை) ‡"தெரியச்சொன்னவாயிரம்" என்கிறபடியே திருவாய்மொழியைப்பாடி ஸம்ஸாரிகளுடைய ஸாட்யத்தைப் போக்கினவருடைய க்ருபையை.

(எண்டிசையுமறிய வியம்புகேன்) 168 "देवाः स्वस्थानमायान्ति दैत्यास्सर्वे हता गताः। न भयं विद्यते किञ्चिज्जितं भगवता जगत्॥" (தேவாஸ் ஸ்வஸ்தாநமாயந்தி தைத்யாஸ் ஸர்வே ஹதா கதா:। நபயம் வித்யதே கிஞ்சித் ஜிதம் பகவதா ஜகத்॥) என்று ஸ்ரீஜாம்பவந் மஹாராஜர் த்ரைவிக்கிரம ப்ரஸம்ஸையைச் சாற்றிக்கொண்டு திரிந்தாப்போலே; அங்கு ஈச்வரனுடைய ஸக்திப்ரபாவம்; இங்கு ஆழ்வாருடைய க்ருபாப்ரபாவம். அங்கு ப்ரயோஜநாந்தரபரர் வாழ்ந்தபடி; இங்கு அநந்யப்ரயோஜனர் வாழ்ந்தபடி. அங்கு க்ருத்ரிம வ்யாபாரம்; இங்கு-அக்ருத்ரிமவ்யாபாரம். இனி பதக்ரமத்தாலே திருத்தினபடிக்கு ஸாம்யமுண்டாகில் உண்டத்தனை.

அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

அங்கு பதக்ரமமென்றது-திருவடிகள் வைப்பு; இங்குபதக்ரமமென்றது-திருவாய்மொழியில் பதங்களினுடைய க்ரமங்கள். அன்றிக்கே, மேவினேனவன் பொன்னடியென்றும், மத்தகத்தில் தன்தாளென்றும் சொல்லுகிறபடியே திருவடிகள் வைப்பாகவுமாம்.

ஏழாம்பாட்டின் அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.

---

§ திருப்பல்லாண்டு-4. ‡ திருவாய் 6-9-11.

எட்டாம்பாட்டு

8. அருள்கொண்டாடு மடியவரின்புற
அருளினனவ் வருமறையின்பொருள்
அருள்கொண்டாயிர மின்தமிழ்ப்பாடினன்
அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே.

பதவுரை:—அருள் கொண்டாடும்—*பகவத் க்ருபையைக் கொண்டாடுகின்ற*, அடியவர்—*பக்தர்கள்*, இன்புற—*ஆநந்திக்கும்படி*, அ அரு மறையின் பொருள்—*அந்த அருமையான வேதத்தின் உட்பொருள்களை*, அருளினன்- *அருளிச்செய்தவராயும்*, அருள் கொண்டு- *பரமக்ருபையாலே*, இன் தமிழ்—*இனிய தமிழ்ப்பாஷையிலே அமைந்த*, ஆயிரம்—*திருவாய்மொழியாயிரத்தை*, பாடினன்—அருள் கண்டீர்—*க்ருபை ஒன்றுமாத்திரமன்றோ*, இ உலகினில்—*இந்த லோகத்திலே*, மிக்கது—*பெரியதாயிருக்கிறது*.

---

# நஞ்ஜீயர் வ்யாக்யானம்

அவ.—*எட்டாம்பாட்டு. வேதரஹஸ்யத்தை வெளியிட்ட ஸர்வேச்வரன் க்ருபையைக்காட்டில் திருவாய்மொழியை அருளிச்செய்த ஆழ்வாருடைய க்ருபை ஜகத்துக்கு மிக்கதென்கிறார்.*

வ்யா:—*(அருளித்யாதி). சேஷபூதனுக்கு ஆநந்திக்கையே ஸ்வரூபம்; சேஷபூதராகையும் ஹ்ருஷ்டராகையும் வேறில்லை காணும்; இவனருளை அநுஸந்தித்து,* 169"हृष्टाः"(ஹ்ருஷ்டா:)*என்கிறபடியே ஹ்ருஷ்டராமித்தனை.*

*(அருளினன் அவ்வருமறையின்பொருள்) பரமரஹஸ்யமான வேதார்த்தத்தை நிர்ஹேதுகமாகத் தன்பக்கலாசாலேசமுடையார் வாழும்படி கீதோபநிஷதாசார்யனாய் நின்று வெளியிட்டான். வேதங்கள் மறைத்த அர்த்தத்தை தீரோதாத்தனுகையாலே ப்ரகாசிப்பித்தான்.*

*(அருள்கொண்டாயிர மின்தமிழ்பாடினன்) ஆழ்வாருக்குத் திருவாய்மொழிக்குள்ளுரைபோலே காணுமருளிச்செய்தது. இருவருக்கும் முழு நோக்காகப் பெற்றால் ஆழ்வாருக்குச் செய்யப்போகாததில்லையாகாதே. வேதாதிகாரிகளுக்கு உஜ்ஜீவநமாம்படி எம்பெருமான்செய்தது; அநதிகாரிகளும் க்ருதார்த்தராம் படியிறே ஆழ்வாரருளிச்செய்தது.*

*(அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே) எம்பெருமானருளினது ப்ராதேசிகம்; ஆழ்வாரருள் ஸார்வத்ரிகம்; §"பாலேய் தமிழரிசைகாரார் பத்தர் பரவுமாயிரம்" என்றும் ¶"தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்றுமிறே சொல்லிற்று.*

*எட்டாம்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.*

---

§ *திருவாய் 1-5-11.* ¶ *திருவாய் 9-4-9.*

நம்பிள்ளை ஈடு

அவ:—எட்டாம்பாட்டு. "எண்டிசையுமறிய வியம்புகேன்" என்கைக்கடி - ஆழ்வாருடைய அருள் கொண்டாடுமருள் சிதசிதீச்வரதத்வத்ரயங்களையும் கபளீகரித்திருக்கையாலென்கிறார்.

வ்யா:—(அருள்கொண்டாடுமடியவர்) இவ்வாழ்வார் தம்மைப் போலேயிருக்குமவர்கள்; /"அதுவுமவனதின்னருள்" என்றும் †"அருள்பெறுவாரடியார்" என்றும் இங்ஙனேயிறே இவர் தாமுமருளிச்செய்வது; அப்படியிருக்குமவர்கள். (இன்புற) ||"எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப" என்கிறபடியே ஆநந்தநிர்ப்பரராக. (அருளினனவ்வருமறையின் பொருள்) ப்ரமாண ப்ரஸித்தியைச் சொல்லுகிறது.( அருமறை) அவன் றன்னைப்பெறிலும் பெறுதற்கரிதாயிருக்கை. 170 "सा हि श्रीरमृता सतां"(ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்) என்கிறபடியே வேதார்த்தத்தை அருளிச்செய்தார்.

(அருள்கொண்டு) இவர்தாம் கைவந்தபடி பாடினாரல்லர். §"மயர்வற மதிநல மருளினன்" என்கிறபடியே, பகவத் ப்ரஸாதத்தை முதலாகக்கொண்டாய்த்து இவர் கவிபாடிற்று, இவர்தாம் கவிபாடாநிற்கச் செய்தே ‡"என்னாகியே தப்புதலின்றித் தனைக் கவி தான்சொல்லி" என்கிறபடியே பிறரோபாதி தாமும் விஸ்மயப்படும்படி நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக் கொண்டபடி. (ஆயிரமின்தமிழ்ப்பாடினன்) 171 "चतुर्विंशत्सहस्राणि श्लोकानामुक्तवानृषिः" (சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ச்லோகாநாமுக்தவாந் ருஷி:) என்றுப் போலே ஆயிரமாகவாயிற்றுப் பாடிற்று.

(இன்தமிழ்ப்பாடினன்)172 "पाठ्ये गेये च मधुरं"(பாட்யே கேயே ச மதுரம்) என்கிறபடியே இனிதாய் த்ராவகாஹமான அர்த்தத்தைச் சொல்லாநிற்கச் செய்தேயும், ஶப்தம் அதிக்ருதாதிகாரமின்றிக்கே ஸர்வாதிகாரமாம்படியும் பாடினார்.

(பாடினனருள்கண்டீர்) மயர்வற மதிநல மருளினவருள் போலன்றிக்கே அதுதன்னை விளாக்குலைகொண்டாய்த்திருப்பது. (இவ்வுலகினில் மிக்கதே) சிதசிதீச்வரதத்வத்ரயங்களையும் கபளீகரித்திருக்கை.

எட்டாம்பாட்டின் நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

குறியிட்ட பாசுரங்களினாகரங்கள் அடுத்த வ்யாக்யானத்தில் காண்க.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்

அவ:—எட்டாம்பாட்டில், "எண்டிசையுமறிய வியப்புகேன்" என்கைக்கு ஹேதுவென்னென்னில், ஆழ்வாருடையவருள் சிதசிதீச்வர தத்வத்ரயங்களையும் கபளீகரித்திருக்கையாலே என்கிறார்.

வ்யா:—(அருள்கொண்டாடு மடியவர்) இவ்வாழ்வார்தம்மைப் போலே இருக்குமவர்கள். §"அதுவுமவனதின்னருள்" என்றும், †"அருள்பெறுவாரடியார் தம்மடியன்" என்றுமிருக்குமிவர் தம்மைப்போலே /"ஆனைக்கன்றருளையீந்த" என்றும் ||"நின்னோடு மொக்க வழிப்படவருளினாய்" என்றும் ‡"அருள்புரிந்தசிந்தை" என்றும், ¶"நின்னருளே புரிந்திருந்தேன்" என்றும் i"அருளாதொழியுமே" என்றும் இப்படிகளால் அவனருளைக் கொண்டாடுமவர்கள்;

இப்படி பகவத் ப்ரஸாதத்தையே கொண்டாடிப்போருமவர்கள், பகவத் ப்ரஸாதஹேதுவாக ஸ்வகதமான கர்மஜ்ஞான பக்திகளை உபாயமாக ஆதரிக்குமவர்களன்றிக்கே கேவலபகவத் ப்ரஸாதமே உஜ்ஜீவநஹேது என்றிருக்குமவர்கள், தந்தாம் பக்கலுள்ள ஆநுகூல்யங்களை பகவத் ப்ரஸாதபலமாக நினைத்திருக்குமதொழிய,

அரு:—எட்டாம்பாட்டு. (அருளித்யாதி). (ஹேதுவென்னென்னிலென்றது) எல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி சொல்லுகைக்கு ஹேதுவான அருளுடைய அதிசயமென்னென்னிலென்றபடி. (கபளீகரித்திருக்கையாலே) என்றவநந்தரம் "இயம்புகேன்" என்று சேஷம்; அருள் கபளீகரித்திருக்கையாவது-தன்னதிசயத்தாலே தத்வத்ரயத்தைபும் விஞ்சியிருக்கை.

இவ்வாழ்வாரும் மற்றவர்களும் அருளைக் கொண்டாடுவார்களோவென்ன அருளிச்செய்கிறார் (அதுவுமவனதித்யாதி). அருளைக்கொண்டாடுகைக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி).

இவர்கள்பக்கல் ஆநுகூல்யாதிகளிருக்க, பகவத் ப்ரஸாதமே உஜ்ஜீவநகரமாகக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (தந்தாமித்யாதி).

§ திருவாய் 8-8-3. † திருவாய் 10-6-1. / திருமாலை 46. || திருமாலை 42. ‡ இரா-திருவ-56 ¶ பெரியாழ்-திரு 5-4 1. i மூன்-திருவ-16.

ப்ரஸாதகமாக நினைத்திராதவர்கள். இவர் இப்படி நினைத்திருக்கிறது பற்றையடாழ்வார்களேயிறே. §"ஆழியானருளே" †"நின்னருளே புரிந்திருந்தேன்" என்னுமதிறே அவர்கள் பாசுரங்கள்.

(இன்புற) ஆநந்தநிர்ப்பரராக. ‡"எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப" என்கிறபடியே ஸாதநத்திலந்வயமின்றிக்கே பகவதநுபவமே யாத்ரையாயிருக்கும்படியாக.

(அருளினனவ் வருமறையின் பொருள்) (அவ்வருமறை) ப்ரஸித்தமாய், பெறுதற்கரிதாயிருக்கிற மறை. அதாகிறது-வேதரஹஸ்யமான உபநிஷத்திறே. (அவ்வருமறையின் பொருளை-அருளினன்) நித்யஸத்வஸ்த்தர்க்கல்லது தோற்றாத உபநிஷதர்த்தத்தை அருளிச்செய்தார். பரமஸாத்விகர்க்கு நித்யமான ஐச்வர்யம் உபநிஷத்ரஹஸ்யமிறே. 170"सा हि श्रीरमृता सतां" (ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்) என்னக்கடவதிறே. அதாவது 173"सर्वरसः"(ஸர்வரஸ:) என்றும் 48"रसो वै सः" (ரஸோ வை ஸ:) என்றும் சொல்லுகிற விஷயத்தைத் தத்ப்ரஸாதத்தாலே லபிக்கை. 173*"एष ह्येवानन्दयाति"

அருள்கொண்டாடுமடியவர் ஆழ்வார்களேயாக வேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (இவரித்யாதி). இதுக்கு நியாமகமேதென்ன அருளிச்செய்கிறார் (ஆழியானித்யாதி).

பதார்த்தமருளிச்செய்து தாத்பர்யார்த்தமருளிச்செய்கிறார் (எண்ணுதனகளித்யாதி). (எண்ணுதனகள்) அஸங்க்யேய கல்யாணகுணங்கள், ஸாதநாந்தரநிஷேதம்பண்ணுகிற இப்ரபந்தத்தை அநுஸந்திக்கவே அவர்களுக்குண்டான அத்யவஸாயம் ஸுஸ்திரமாமென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

மறையின்பொருளென்றதுக்குத் தாத்பர்யம் (நித்யேத்யாதி). அருளினனென்கைக்கு அதினுடைய சீர்மையேது என்னவருளிச்செய்கிறார் (பரமேத்யாதி). உபநிஷத்ரஹஸ்யம் சீரியதென்னனுமதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (ஸாஹீத்யாதி). "ஸா" என்று ஸ்த்ரீயைச் சொன்னாலும் அதுக்கு ஸ்த்ரீத்வம் ததர்த்தத்வாராவென்று கருத்து; ஸத்வநிஷ்டர்க்குத் தோற்றுகிறவர்த்தமேது என்னவருளிச்செய்கிறார் (அதாவதித்யாதி). உக்தார்த்தே

§ பெரிய-திரு-1-1-4. † பெரியாழ்-திரு-5-4-1. ‡ திருவாய் 10-7-5.

(ஏஷ ஹ்யேவாநந்தயாதி) என்றும், 174 "तद्धेतुव्यपदेशाच्च" (தத்தேது வ்யபதேஶாச்ச) என்றும் சொல்லக்கடவதிறே.

(அருள்கொண்டாயிர மின்தமிழ்ப்பாடினன்) இவர்தாம் ஸ்வபுத்தியாலேயருளிச்செய்தாரன்று; /"மயர்வற மதிநலமருளினன்" என்கிறபடியே ப்ரஸாத லப்தஜ்ஞாநத்தை முதலாகக்கொண்டு தத்ப்ரேரிதராய்க்கொண்டாயிற்று அருளிச்செய்தது. †"என்னாகியே தப்புதலின்றித்தனைக்கவிதான் சொல்லி" என்கிறபடியே பிறரோபாதி கவிபாடுகிற தாமும் விஸ்மிதராய்ப்படி நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக்கொண்டது.

(ஆயிரமின்தமிழ்ப்பாடினன்) 171 "चतुर्विंशत्सहस्राणि श्लोकाना मुक्तवानृषिः" (சதுர்விம்ஶஸ்ஸஹஸ்ராணி ச்லோகாநாமுக்தவாந் ரிஷி:) என்றாப்போலே ஆயிரமாகவாய்த்துப் பாடிற்று; ஓராத்மாவின் ஹிதாம்ஶத்துக்கு ஒருபாட்டே அமையும்படியிறே இவர் பாடிற்று. (இன்தமிழ்ப்பாடினன்) த்ராவகாஹமான அர்த்தத்தை 172"पाठ्ये गेये च मधुरं" (பாட்யே கேயே ச மதுரம்) என்கிறபடியே ரஸகமாகவும் ஸர்வாதிகாரமாம்படியாகவும் பாடினார்.

---

ப்ரமாணம் (ஏஷயித்யாதி). பகவத: ஆநந்தஹேதுத்வேந ஆநந்தயதீதி வ்யபதேசாச்சேதி ஸூத்ரார்த்தம்.

அருமறையின் பொருளை அருளினப்ரகாரமேது என்னுமாகாங்க்ஷயிலே "அருள்கொண்டு" என்றருளிச்செய்தாரென்று திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்ய பூர்வகமாக பகவத்க்ருபை மூலமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவரித்யாதி). அவனேப்ரேரித்தானென்ன அருளிச்செய்கிறார் (என்னாகியே யித்யாதி).

அநந்தமான வேதார்த்தத்தை ஸங்க்ரஹித்து ஸஹஸ்ரஸங்க்யையாக ப்ரபந்தீகரித்தாருண்டோ என்னவருளிச்செய்கிறார் (சதுர்விம்சதீத்யாதி). ஸ்ரீராமாயணத்தோடு ஸமமாக இருபத்து நாலாயிரமாகப்பாடாதே ஆயிரமாகப்பாடுவானென்னென்ன் அருளிச்செய்கிறார் (ஓராத்மாவுக்கித்யாதி).

---

/ திருவாய் 1-1-1. † திருவாய் 7 6-4.

(பாடினனருள் கண்டீர்) §"மயர்வற மதிநலமருளினன்" என்னும்படி அருளவல்ல அருள்தன்னையும் விளாக்குலை கொண்டிருக்குமருளிறே ஆழ்வாரருள்; ஈச்வரன் கைவிட்ட ஆத்மாக்களையும், அவர்களுடைய துர்க்கதியைக்கண்டு திருத்தவொருப்பட்டபடியாலே இவரருள் ப்ரத்யக்ஷமன்றோ என்கை.

(இவ்வுலகினில் மிக்கதே) சிதசிதீச்வர தத்வத்ரயத்தையும் கபளீகரித்திருக்கை. †"அதனில் பெரிய வென்னவா" என்று பகவத்விஷயத்தில் தமக்குண்டான அபிநிவேசத்தளவும் போருமாய்த்து என்னளவில் க்ருபையும்.

எட்டாம்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

சடகோபனருளென்றுப்போலே, பாடினனருளென்றதுக்கு ஹார்த்த தாத்பர்யம் (மயர்வற வித்யாதி). கண்டீரென்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஈச்வரனித்யாதி).

"லோக்யதஇதி-லோக:" என்கிற வ்யுத்பத்தியை யுட்கொண்டருளிச் செய்கிறார் (சிதசிதீச்வரேத்யாதி). தம்முடைய பக்கல் பண்ணின க்ருபையை த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார் (அதனிலித்யாதி). "அருள்கொண்டாடு மடியவரின்புற - அவ்வருமறையினுடையபொருளை - அருளினன், அருள்கொண்டாயிரமின்றமிழ் பாடினனுடைய வருள் இவ்வுலகினில் மிக்கதே கண்டீர்" என்றந்வயம்.

எட்டாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.

---

§ திருவாய் 1-1-1. † திருவாய் 10-10-10.

# அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம்

அவ;—எட்டாம்பாட்டு. (அருளித்யாதி) ஆழ்வாருடைய க்ருபையை கீழிற்பாட்டிலே "எண்டிசையுமறியவியம்புகேன் ஒண்டமிழ்ச்சடகோபனருளை" என்று இவர் சொல்லக்கேட்டிருக்குமவர்கள், பகவத்க்ருபையன்றோ நாட்டாரடையக் கொண்டாடுவது; நீர் ஆழ்வாருடைய க்ருபையை எண்டிசையுமறியவியம்புகேன்" என்கைக்கடியென்னென்ன, பகவத்க்ருபையும் ஆழ்வார் க்ருபையுமானால், ப்ராப்தி /ஸித்திக்குமன்றன்றோ பகவத்க்ருபை வேண்டுவது? அந்த ப்ராப்தியுண்டாவது ஜ்ஞானத்தாலேயன்றோ?. அந்த ஜ்ஞானஸித்தி ஆழ்வாராலேயன்றோ? ஆகையாலே ஆழ்வார் க்ருபையன்றோ லோகத்தில் விஞ்சியிருப்பதென்கிறார். ப்ராப்தி–ஜ்ஞானஸாபேக்ஷமாயிருக்கும். ஜ்ஞானம் ப்ராப்தி ஸாபேக்ஷமாயிராது.

கீழே-"நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்" என்று தம்முடைய புன்மையைச்சொல்ல, அந்தப் புன்மையேதென்ன, அத்தை "நம்பினேன் பிறர்நன்பொருள்

---

அரு:—எட்டாம்பாட்டு. (அருளித்யாதி) இந்தப்பாட்டுக் கவதாரிகை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார். அதில் முந்தினது-(ஆழ்வாருடைய க்ருபையையென்று துடங்கி - ஜ்ஞானம் ப்ராப்திஸாபேக்ஷமாயிராதென்னுமளவும்). (ப்ராப்திஸித்திக்குமளவன்றோ) என்றது - ப்ராப்திஸித்திக்கும் போதன்றோ வென்றபடி. "ஸாபேக்ஷநிரபேக்ஷயோர்யோகே நிரபேக்ஷா பலீயாந்" என்கிறபடியே ஜ்ஞானஸாபேக்ஷமான ப்ராப்தியைப் பண்ணிக்கொடுக்கும் ஈச்வரனுடைய க்ருபையிலும் ப்ராப்திஸாபேக்ஷமாயிராத ஜ்ஞானத்தையுண்டாக்கின ஆசார்யரானவாழ்வாருடைய க்ருபையே விஞ்சியிருக்குமென்னுமதைக்காட்டுகைக்காக இரண்டுக்குமுண்டான வாசியையருளிச் செய்கிறார் (ப்ராப்திஜ்ஞானேத்யாதி).

இன்னுமொரு அவதாரிகையருளிச் செய்கிறார் (கீழ்நன்மையால் மிக்கவென்று துடங்கி-போக்கின ப்ரகாரத்தை இப்பாட்டாலே சொல்லுகிறாரென்னுமளவும்), :• • (போக்கினப்ரகாரத்தை இப்பாட்டாலே அருளிச்

---

(பா) ஸித்திக்குமளவன்றோ

தன்னையும் நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்'' என்று இரண்டுவகையாகப்பேசி, அநந்தரம் ''பண்டைவல்வினை பாற்றி யருளினான்'' என்று அத்தை ஆழ்வார் போக்யபடியைச்சொல்லி, போக்கினப்ரகாரத்தை இப்பாட்டாலே சொல்லுகிறார்.

அநாத்மந்யாத்மபுத்தியையும் அபோக்யங்களில் போக்ய புத்தியையும் அத்யாத்மஜ்ஞாநத்தாலே போக்கவேணுமே; ஆசார்யன் ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினவாறே அந்த ஜ்ஞாநம் மேலுண்டான கர்மார்ஜநத்தை மாற்றும்; முன்புண்டான அவித்யையாலே ஆர் ஜித்துவைத்த கர்மங்களை ஈச்வரன் போக்கும்படி பண்ணுவதுமது; ஸங்கல்பஜத்தை இவன் போக்கும்; கர்மஜத்தை அவன்போக்கும். அவன் போக்குகைக்கடி இவன் ஜ்ஞாநவிருத்தியைப் பண்ணிக் கொடுக்கையாலேயிறே. அத்தைப்பற்றவிறே 175 **"अमृतस्य हि दातारं तमसः पारं दर्शयति सनत्कुमारः"** (அம்ருதஸ்ய ஹி தாதாரம் தமஸ: பாரம் தர்ஶயதி ஸநத்குமார:) என்றும் ஆசார்யனைச்சொல்லுகிறது.

வ்யா:—(அருளித்யாதி). எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கக்கடவதாக வேதார்த்தங்களைத் திருவாய்மொழிமுகத்

செய்கிறாரென்றது) அவ்வருமறையின் பொருளருளினானென்று வேதார்த் தத்தைத் திருவாய்மொழியாலே வெளியிட்டு ஜ்ஞாநத்தை யுண்டாக்கிப் போக்கினாரென்று போக்கினப்ரகாரத்தை அருளிச்செய்கிறாரென்றபடி.

ஜ்ஞாநத்தாலே போக்கும் க்ரமமென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆசார்யன் ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினவாறே யென்றுதுடங்கி). (பண்ணு வதுமது) என்றது-பண்ணுகிறதும் அந்த ஜ்ஞாநமென்றபடி. (ஸங்கல் பஜத்தை இவன்போக்கும்) என்றது-ஆசார்யன் ஸர்வஜ்ஞனாகையாலே சிஷ்யன் மநஸாலே நினைத்தபாபத்தை யறிந்து உபதேசத்தாலே போக்குமென்றபடி; அம்ருதமென்று-மோக்ஷமாய், அம்ருதஸ்யஹிதாதார மென்று-மோக்ஷத்தைக் கொடுக்குமென்றார். கொடுக்கும் ப்ரகாரமென் னென்ன (தமஸ: பாரம்தர்சயதியென்று), ஜ்ஞாநத்தையுண்டாக்கி உத்தரிப்பிக்குமென்று ஸநத்குமாரன் சொன்னானென்றபடி.

எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கைக்காக வேதார்த்தங்களைத் திருவாய்மொழிமுகத்தாலே வெளியிட்டருளினானென்றார்கீழ்; அன்றிக்கே திருவாய்மொழி யருளிச்செய்ததுக்கு வேறேயும் ஒருப்ரயோஜநமுண்

தாலே வெளியிட்டருளினுரென்னப்பார்த்து, அத்திருவாய் மொழியைப்பாடினதற்கு வேறேயுமொரு ப்ரயோஜநம் சொல்லுகிறுர்.

(அருளித்யாதி) திருவாய் மொழியைப்பாடிற்றும் பகவத்ப்ரீணநார்த்தமாகவன்றிக்கே ஸாத்விகாக்ரேஸருடைய முகமலர்த்திக்குறுப்பாகவாய்த்து. (அருள்கொண்டாடு மடியவரின்புற) (அடியவர்) (அருள்கொண்டாடுமடியவர்) ஜ்ஞாநவிஷய பூகனுன ஈச்வரனுடைய ப்ரியத்துக்கன்றிக்கே ஜ்ஞாநநிஷ்டரான ஸாத்விகர் உகக்கைக்காகவாயிற்று திருவாய்மொழிபாடினது.

(அடியவர்) ேஶஷவ்ருத்தி புருஷார்த்தமென்னும்படி ஸ்வரூப ஜ்ஞாநம்பிறந்தவர்கள்; ேஶஷத்வஜ்ஞாநம் ேஶஷவ்ருத்திேஶஷமிறே. (அருள் கொண்டாடுமடியவர்) அப்புருஷார்த்தத்துக்கு ஸாதநமும் அவனுடைய க்ருபையென்றிருக்குமவர்கள்; ஆகையாலே கைங்கர்யம் புருஷார்த்தம், கருணேஸாதநமென்றிருக்குமவர்கள் (அருள் கொண்டாடும்) அல்லாத குணந்தரங்களிற்காட்டில் க்ருபையைக்

---

டென்கிறுர்(எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கக்கடவதாக்வென்று துடங்கி). (வெளியிட்டருளிருரென்னப் பார்த்து) என்றது - வெளியிட்டருளிருரென்ன உத்யோகித்தென்றபடி. வேறேயுமொருப்ரயோஜநம் சொல்லுகிறுரென்றத்தை விவரிக்கிறுர் (திருவாய்மொழி பாடிற்றும் பகவத்ப்ரீணநார்த்தமாகவன்றிக்கே யென்றுதுடங்கி). கீழ்ச் சொன்னதின் விவரணம் (ஜ்ஞாநவிஷயேத்யாதி). "அடியவர்-அருள்கொண்டாடுமடியவர்" என்று பிரிக்கிறதுக்குத் தாத்பர்யம் "பதிம்விச்வஸ்ய" என்று எல்லாருமடியவராகையாலே ஷிபாமிக்கு விஷயமான வடியவரன்றிக்கே, அருள்கொண்டாடுமடியவரென்று மோக்ஷயிஷ்யாமிக்கு விஷயமான அடியவர்களைச் சொல்லுகிறதென்றபடி. அடியவரனென்றுல் சேஷத்வ ஜ்ஞாநமாத்ரமன்றே சொல்லுவது, வ்ருத்தியைச் சொல்லுமோவென்ன வருளிச்செய்கிறுர் (சேஷத்வஜ்ஞாநம் சேஷவ்ருத்திசேஷமிறே) என்று.

அடியவரென்று புருஷார்த்தத்தைச்சொல்லி, அருள்கொண்டாடுமென்று க்ருபையைச்சொல்லுகையாலே கைங்கர்யமாகிற புருஷார்த்தத்துக்கு ஸாதநம் அவனுடைய க்ருபையென்றிருக்கு மவர்களென்றபடி, குணந்தரங்களெல்லாம் கிடக்க, அவனுடைய க்ருபாகுணத்தைக் கொண்டாடுகிற தென்னென்ன, ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறுர்

கொண்டாடுமவர்கள்; ஈச்வரனைக்(யும்) கொண்டாடுகிறது-தானுண்டானபோது ஜகத்துண்டாய், இல்லாதபோது இல்லையாமென்றிட்டிறே; அப்படியே க்ருபாகுணமில்லாதபோது குணாந்தரங்களும் அகார்யகரமாய், இது கூடினவாறே கார்யகரமாயிருக்கையாலே இத்தையே கொண்டாடாநிற்பவர்கள்; அப்படியே தேவதாந்தரங்களிற் காட்டில் ஈச்வரன் கொண்டாட்டத்துக்கு விஷயமானாற் போலேயாய்த்து குணாந்தரங்களிற்காட்டில் இது கொண்டாட்டத்துக்கு விஷயமானபடி.

மநஸ்தத்வம் இந்த்ரியாந்தர்ப் பூதமாயிருக்கச் செய்தேயும் இது ஸஹகாரியாகாதபோது இந்த்ரியவ்யாபாரம் கூடக்காணாமை லோகத்திலே கண்டுபோகிறப்போலே இந்த க்ருபையும் குணாந்தர்ப்பூதமாகிலும் இது ஸஹகாரியாதபோது சேதநரளவில் குணாந்தரங்கள் ஜீவிக்கையாகாது. ஸ்வரூபமும் நித்யம், குணங்களும் நித்யங்களாயிருக்கச்செய்தே இவனுடைய ஸம்ஸாரஸம்பந்தம் ஒழுக்கறுமல் நடக்கையாலே, அத்தை மாற்றி இவனை உத்தரிப்பித்தது க்ருபாகுணமாகையலே அத்தையாய்த்து முமுக்ஷுக்கள் கொண்டாடுவது.

---

(ஈச்வரனையும் கொண்டாடுகிறதென்று தொடங்கி). க்ருபாகுணத்தைக் கொண்டாடுகிறதுக்கு ஸத்ருஷ்டாந்தமாகப் பின்னையுமொரு ஹேது அருளிச்செய்கிறார் (தேவதாந்தரங்களிற்காட்டிலென்று துடங்கி). இதுக்குத்தாத்பர்யம், தேவதாந்தரங்களுக்கு ஈச்வரனையொழிய ஸ்வயமேவ பலப்ரதத்வ சக்தியில்லாமையாலே தேவதாந்தரங்களிற்காட்டில் ஈச்வரன் கொண்டாட்டத்துக்கு விஷயமானாற்போலே க்ருபாகுணத்தையொழிய குணாந்தரங்களுக்குக் கார்யகரத்வமில்லாமையாலே குணாந்தரங்களிற் காட்டில் க்ருபாகுணம் கொண்டாட்டத்துக்கு விஷயமாயிருக்குமென்றபடி.

இதுவும் குணங்களுக்குள்ளே ஒன்றாயிருக்க, இத்தையொழிய குணாந்தரங்கள் கார்யகரமாகமாட்டாதென்று சொல்லுகிறதென்னென்ன, இது ஸஹகரியாதபோது மாட்டாதென்னுமதை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் (மநஸ்தத்வ மென்றுதுடங்கி). (ஜீவிக்கையாகாது) என்றது ஜீவநஸாதநமாகாதென்றபடி.

ஶக்தனுக்கும் க்ருபைவேணும்; அஶக்தனுக்கும் க்ருபை வேணும்; ஶக்தனுக்கு நம்மைப் பெறுகைக்கு இப்படி வருந்தப் பட்டு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவதேயென்னுமவன் நெஞ்சில் ஈரப்பாடாய்த்து பலமோக்ஷமாவது; அந்த ஈரப்பாடாய்த்து அவனை ப்ரீதனாக்குவதும்; அஶக்தனுக்கு, 176 "नार्चनादौ स्तुतौ न च" (நார்ச்சநாதௌ ஸ்துதௌ ந ச) என்றால் 176 "कृपामात्रमनोवृत्तिः प्रसीद" (க்ருபாமாத்ர மனோவ்ருத்தி: ப்ரஸீத) என்னும்படியிருக்கும்; அங்கு அவனுடைய அநுஷ்டாநங்கண்டு பிறக்கிற க்ருபை; இங்கு ஆகிஞ்சந்யங்கண்டு பிறக்கிற க்ருபை. "ஸ்வகதமான தொன்று ஸாதநமாக வேண்டாவோ? பரகதமான குணம் ஸாதநமாம்படியென்?" என்ன, பரகதமேயாகிலும் /"அருள்பெறுவாரடியார்" என்கிறபடியே ஆச்ரயம் அவனாய், விஷயம் இவனாயிருக்கும்.

(அருள்கொண்டாடுமடியவர்) அன்றிக்கே, அருளைத் தங்களுக்கு அவஷ்டம்பமாகக்கொண்டு நடையாடுமவர்கள்; இவனுக்கு ஊன்றுகோலானதும், விரோதிகளைச் சேதித்துத்தருவதும் அருளேயாய்த்து; §"அருளென்னுந்தண்டு" என்றும், ‡"அருளென்னுமொள்வாள்" என்றும் சொல்லுகிறபடியே, அவர் தம்முடைய ப்ராஹ்மண்யம் தோற்றத் தண்டென்கிறார். இவர்

---

அசக்தனுக்கொழிய சக்தனுக்கும் க்ருபைவேணுமோ வென்ன அருளிச்செய்கிறார் (சக்தனுக்கும் க்ருபைவேணுமென்று தொடங்கி). நிகமிக்கிறார் (ஸ்வகதமித்யாதி).

அருள்கொண்டாடு மடியவரென்றதுக்கு இரண்டுபொருள். அருளைக் கொண்டாடுகிற அடியவரென்னுதல், அன்றிக்கே அருளை ஆலம்பநமாகக் கொண்டு, ஆடும்-ஸஞ்சரிக்கிற அடியவரென்னுதல். (அவஷ்டம்பம்) ஆலம்பநம். §"அருளென்னும் தண்டால்" என்றும், ‡"அருளென்னு மொள் வாளுருவி" என்றும் மேலருளிச்செய்கிற சந்தைகளைக்கடாக்ஷித்துக் கொண்டருளிச்செய்கிறார் (ஊன்றுகோலானதுமென்று துடங்கி). தண்டாகையாலே ஊன்றுகோலாயிருக்கும்.

---

/ திருவாய் 10-6-1. § பெரியதிருவ-26. ‡ பெரிய திரு 6-2-4.

தம்முடைய க்ஷாத்ரம் தோற்ற ஒள்வாளென்கிறார். ஆகையாலே இவர்கள் பக்த்யாதிகளை அவஷ்டம்பமாக்குதல், அஸங்கஸௌஸ்த் ரத்தைக் கொண்டு திரிதல் செய்யுமவர்களல்லர். அவனும் தனக்கு பலாதிகுணங்களுண்டேயாகிலும், உபகரணபூர்த்தி உண்டேயாகி லும் இக்ருபை கொண்டேயாய்த்து பலப்ரதனாவது; ஆகையாலே யாய்த்து ‡"பாழியானாழியானருளே நன்று" என்னவேண்டிற்று.

(இன்புற) அவர்கள் ப்ரீதியைப்பெற; அவர்கள் பண்டே அருள்கொண்டாடுமடியவரேயாகிலும், இவ்வர்த்தம் ஆப்தரான ஆழ்வாரருளிச்செய்யப் பெற்றோமேயென்று ப்ரீதரானவர்கள். ராகஸித்தம் விதிஸித்தமாகப் பெற்றோமேயென்று ப்ரீதரானவர்கள்.

(அருளினனவ் வருமறையின் பொருள்) மறையின் அந்த அரும்பொருளை அருளினன். (அப்பொருளை) "கருணாஸாதநம்.

---

ஆழ்வார் உபசாந்தரானகையாலே ப்ராஹ்மண்யம் தோற்றவென்கிறார். இங்ஙனன்றாகில் நம்மாழ்வாரை ப்ராஹ்மண்யம் தோற்றவென்றும், திருமங்கையாழ்வாரை க்ஷாத்ரம்தோற்றவென்றும் சொல்லப்போகாதென்ற படி. க்ருபையே ஆலம்பநமும் வாளுமாக வுடையவராகையாலே பக்த்யாத் யுபாயங்களை உபாயமாக்குதல், விஷயவிரக்தியை உபாயமாக்குதல் செய்யாரென்றபடி. (அஸங்கசஸ்த்ரம்) என்றது-விரக்தியாகிறவாளைச் சொல்லுகிறது. பலத்தைக்கொடுக்கும்போது ஈச்வரன்றனக்கும் க்ருபையே ஸாதநமென்கிறார் (அவன்றனக்கென்று துடங்கி). (உபகரணபூர்த்தி) என்றது-திருவாழிதுடக்கமான திவ்யாயுதங்களை. பலாதிகுணங்களும் உபகரணமான திருவாழியுமுண்டானாலும் க்ருபையே ஸாதநமென்கைக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (ஆகையாலேயாயிற்றென்று துடங்கி). பாழியென்றது-பலமாய், பலத்தையுடையவனென்றபடி. இது மற்றை குணங்களுக்குமுபலக்ஷணம்.

க்ருபாவைபவத்தைமுன்னே அறிந்திருக்குமவர் இப்போது நவமாக ப்ரீதியைப்பெறவென்கிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (பண்டே யருள் கொண்டாடு மடியவரேயாகிலுமென்று துடங்கி). மறையில் அந்த அரும்பொருளை அருளினனென்றந்வயம். "அவ்வரு" என்கிற விடத்தில் அகாரம் பொருளுக்கு விசேஷணமாகையாலே அப்பொருளை

---

‡ பெரியதிரு 1-1-4.

கைங்கர்யம் புருஷார்த்தம்" என்கிறவப்பொருளை. ||"வழுவிலா வடிமை செய்யவேண்டும்" என்பது, i"அடியையடைந்தருள் சூடியுந்தவன்" என்பதாய் இவற்றை உபதேசிக்கை; (பொருளை அருளினன்) தாம் வாக்யோச்சாரணம் பண்ணமாட்டாமையாலே பொருளையருளினர்.

(அ-அரும்-பொருளை-அருளினன்) ப்ரவ்ருத்தி ஶீலர்க்குப்பட அரிதானவர்த்தத்தை நிர்த்தோஷரான ஸத்துக்களுக்கு அருளினர். அதுதான் ஸ்வார்த்தத்தை போதிப்பியாநிற்க இவர் வெளியிட வேண்டிற்றென்னென்ன, (மறை) ரஜஸ்தம: ப்ரசுரர்க்கு ஸ்வார்த்தத்தை மறைத்து ஸத்வப்ரசுரர்க்கு போதிக்கும்படி *மறையாய நால்வேதமாகையாலே அவ்வர்த்தத்தை வெளியிட்டார்.

இவர் இவ்வர்த்தத்தை வெளியிடுகிறவிடத்தில் என்ன ஶப்த முகத்தாலே வெளியிட்டதென்ன, (அருள் கொண்டாயிர மின்

---

யென்று பதோபாதாநம் பண்ணுகிறார் (அப்பொருளையென்று); அப்பொருளையென்றது - அந்தப்பொருளையென்றபடி. அதாவது- "கருணை ஸாதநம். கைங்கர்யம் புருஷார்த்தம்' என்ற வந்தப்பொருளையென்றபடி. இந்தப்பொருளை எங்கேகாட்டினாரென்னவருளிச்செய்கிறார் (வழுவிலா வடிமைசெய்யவென்று துடங்கி). மறையருளினனென்னாதே, பொருளையருளினனென்கிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (தாம்வாக்யோச்சாரணம் பண்ணமாட்டாமையாலேயென்று துடங்கி). தாமென்றது- நம்மாழ்வாரை.

(ப்ரவ்ருத்திசீலர்க்குப் படவரிதானவர்த்தத்தை நிர்த்தோஷரான ஸத்துக்களுக்கு அருளினார்) என்றதுக்குத் தாத்பர்யம்- "உய்யக்கொண்டார் விஷயமாக உடையவரருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்கிற படியே உபாயாந்தர நிஷ்ட்டருக்கு ருசியில்லாமையாலே நெஞ்சில் படவரிதானவர்த்தத்தை நிர்த்தோஷராகையாலே ருசியுண்டான ஸத்துக்களுக்கு அருளினாரென்றபடி. (ப்ரவ்ருத்திசீலர்க்குப் படவரிதான) என்றது உபாஸகர்க்கு நெஞ்சில்படவரிதானவென்றபடி. வேதமாகையாலே (ஸ்வார்த்தபோதி) என்றது. "ஸஹஸ்ரவர்த்மா ஸாமவேத:" என்கை யாலே ஸாமவேதம் ஸஹஸ்ரசாகையாயிருக்கும். திருவாய்மொழி ஸாம

---

|| திருவாய் 3-3-1. i திருவாய் 7-2-11.

தமிழ்ப்பாடினான்) அந்த ஸஹஸ்ரஶாகாப்ரதிபாதிதமான அர்த்தத்தை ஸஹஸ்ரகாதாமுகத்தாலே வெளியிட்டார். (தமிழ்பாடினான்) 177 "दुर्बोधा वैदिकाः शब्दाः" (துர்ப்போதா வைதிகாச் ஶப்தா:) என்று துர்ப்போதமான வேதஶப்தம் போலன்றிக்கே த்ராவிடபாஷையாலே வெளியிட்டார். (ஆயிரமின்தமிழ்பாடினான்) ப்ரணவம்போலே அதிஸங்க்ரஹமாதல், மஹாபாரதம்போலே அதிவிஸ்த்ருதமாதலன்றிக்கே ஆயிரமின் தமிழாகப்பாடினார். (இன்தமிழ்பாடினான்) அவன் சொன்னதும் அறியலாயிருக்கச் செய்தே, அது வரைமுறுகலாயிருக்கும். இது செவிக்கினிய செஞ்சொல்லாயிருக்கும். (பாடினான்) †"வேட்கையால் சொன்ன பாடல்" என்கிறபடியே தம்முடைய அநுபவாநந்த ஸாகரத்துக்குப் பரிவாஹசுபவசநங்களைப் பண்ணினார்.

ஆனால் ஒரு புருஷபுத்திமூலமாக வந்தவிது ப்ரமாணமாம்படியென்னென்ன, தாம்சொன்னாராகிலன்றோ அது சொல்லவேண்டுவது. அவனுடையவருள் மூலமாகச் சொன்னவராகையாலே அது சொல்லப்போகாது. 178 "मोहशास्त्राणि कारय" (மோஹஶாஸ்த்ராணி காரய) என்கிற அந்த நிர்ப்ரஹமடியாக வந்ததன்றே இது. *தெரியச்சொன்ன ஆயிரமாகையாலே அருளடியாக வந்ததாயிற்று. §"ஆம்முதல்வனிவனென்று தற்தேற்றி என் நா முதல்வந்து புகுந்துநல்லின்கவி, தூமுதல் பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்ன என்வாய்முதலப்பனை" என்று ஆழ்வார் தாமே அருளிச்செய்தாரிறே.

(அருளித்யாதி) "தன்புகழேத்த வருளினான்" என்று ஆழ்வாரருள்கொண்டு அவருடைய புகழை ஏத்தினாப்போலேயாயிற்று ஆழ்வாரும் அவனுடையவருள் கொண்டு * ஏற்கும் பெரும்

வேதஸ்தாநமாகையாலே ஸஹஸ்ரசாகையையும் ஆயிரம் பாட்டாயருளிச் செய்தார். (வரைமுறுகல்) கடிநம்.

இப்ரபந்த மருளிச்செய்ததுக்கு மூலம் அவனென்னுதே "அருள் கொண்டாயிரமின்தமிழ்பாடினான்" என்று அருளையே மூலமாகச்சொல்லு

 † திருவாய் 4-10-11. § திருவாய் 7-9-2.

புகழாயிரத்தைப்பாடிற்று; இவர்தாம் * நெடியானருள் சூடும்படியா னுகையாலே அருளொழிய இவர்க்குக் கைம்முதலில்லையே.

(அருள்கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதே) அவருடைய அரு ளன்றோ இந்த லோகத்திலதிசயிதமாயிற்று. (பாடினுனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கது) பாட்டுமன்று, பாடினவருமன்று, பாட்டுக்கடியான வருளுமன்று, இவரருளாய்த்து. (இன்தமிழ் பாடினுனித்யாதி) வரைமுறுகலான ஸ்ரீகீதை சொன்னவனுடைய அருளன்று. அவன்நெறியெல்லாமெடுத்துப் பாடினவிடத்திலும் அகப்பட்டாரும் அகப்படாதாருமாயிற்று. இவரருள் அப்படி யன்றியிலே || ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும்தார்களுமே பிதற்றப்பண்ணிற்றுயிற்று.

(அருளித்யாதி) /"நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி" ‡"நெறியுள்ளியுரைத்த அம்பகவன்" என்று தான்றோனறியான தன்னுடைய ஜ்ஞாநங்கொண்டு சொன்ன தன்றிக்கே அவனுடையவருள்கொண்டுபாடின தன்னேற்ற முண்டே இவரருளுக்கு.

(இன்றமிழ் பாடினுனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கது) †"கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்" என்று

---

கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (மோஹசாஸ்த்ராணி காரய) என்று துடங்கி. அவனருளடியாகப் பாடினுரோ? என்ன அருளிச்செய்கிறார் (ஆம்முதல்வனென்று துடங்கி). "தமிழ்ப்பாடினுனருள்" என்கையாலே கீதையைச் சொன்னவனுடையவருளை வ்யாவர்த்திக்கிறது. அவனருளடி யாக அருளிச்செய்கையாலே தான் தோன்றியான ஜ்ஞாநத்தாலேசொன்ன கீதைபோலன்றிக்கே இவருடைய க்ருபைக்கு அதிசயமுண்டென்றபடி.

"இவ்வுலகினில் மிக்கது" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கேட்டாரார் வானவர்களென்று துடங்கி) இங்கே அருளும் அங்கே போகமும் மிகவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இங்கருளித் யாதி). க்ருபை துக்கிகளுக்காகையாலே இங்கு அருள்மிக்கிருக்குமென்றபடி.

---

|| திருவாய் 6-7-2. / திருவாய் 4-8-6. ‡ திருவாய் 1-3-5.
† திருவாய் 10-6-11.

அந்த லோகத்தில் இவருடைய பாட்டுமிக்காப்போலே இந்த லோகத்தில் இவருடையவருள் மிக்கது. இங்கு அருள்மிக்கு அங்கு போகம் மிகும்படியிறே லோகஸ்பாவங்களிருப்பது. (இவ்வுலகினில்மிக்கதே) அவனுடையவருள் ஆழ்வாரளவிலே சுவறி விட்டது. இவருடையவருள் ஸாம்ராஜ்யம் பண்ணுகின்றது; அவனுடைய அருளைக் கொண்டாடுமவர்கள் அடியவர்களாய், இவரருள் லோகமடங்கக் கொண்டாடும்படி தேஜிஷ்டமாயிற்று.

(ஆயிரமித்யாதி) ஸ்ரீகீதைசொன்ன க்ருஷ்ணனென்றால் கையெடுப்பாரில்லை; திருவாய்மொழிபாடின ஆழ்வாருடைய ஊரின் பேரைக்கேட்க இருந்ததே குடியாகக் கையெடாநின்றது. திருவாய்மொழி கேட்டால் ஈச்வராபிமாநிகளைக் கையெடார்களிறே. (கண்டீர்) இவ்வம்சமும் நான் சொல்லவேண்டியிருந்ததோ? ப்ரத்யக்ஷமன்றோ. (கண்டீர்) அவனுடைய அருள் பராஸ்த்ரகப்யம். இது ப்ரத்யக்ஷஸித்தம்.

(இவ்வுலகினில்-கண்டீர்) இப்போது இவ்வுலகத்தில் கண்டிகோளே. அந்த லோகத்திற்போனால் அங்குக்காண்கிறிகோள். (இவ்வுலகினில் மிக்கது) இந்த லோகத்தையும் ஆழ்வாருடைய

---

ஸாம்ராஜ்யம்பண்ண என்றத்தை விவரிக்கிறார் (அவனுடைய அருளைக் கொண்டாடுமவர்களென்று துடங்கி). ஆயிரமென்று கூட்டினதுக்குத் தாத்பர்யம் ஆயிரத்துக்குள்ளே திருநாமப்பாட்டு உண்டாகையாலே அஞ்சலி பண்ணுவர்களென்றபடி. க்ருஷ்ணனென்றால் கையெடாதிருப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருவாய்மொழி கேட்டாலென்று துடங்கி). இத்தால் க்ருஷ்ணன் ஈச்வராபிமாநியாகையாலே கையெடாரென்றபடியாய்த்து.

கண்டீரென்று-இந்த லோகத்திலே கண்டிகோளே. இது ப்ரத்யக்ஷமன்றோவென்னுதல். அன்றிக்கே, அருள்கண்டீரென்று முழுச்சொல்லாய் இந்த லோகத்தைப்பற்ற விஞ்சியிருக்கிறவருள் கண்டீரென்றுதல். இவ்வருள் கண்டீரென்கையாலே-அவனருள் காணவில்லையென்று விவக்ஷித்தருளுகிறார் (இப்போதிவ்வுலகத்தித்யாதி). இவ்வுலகினில் மிக்கதென்றதுக்கு இரண்டு பொருள். அதாவது-இந்த லோகத்திலே அதிசயித்த

அருளையும் சீர்தூக்கிப்பார்த்தால் அதிலும் விஞ்சியிருப்பது இவ ரருளன்றே. *கடல் மண்ணெல்லாம் விலேயோவென மிளிரும் படியிறே இவருடைய கண்ணுடைமையிருப்பது.

எட்டாம்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

தென்னுதல். அன்றிக்கே, இந்தலோகத்திற்காட்டில் விஞ்சியிருக்கு மென்னுதல். அப்படி விஞ்சியிருக்குமோவென்ன அருளிச்செய்கிறர் (கடல் மண்ணெல்லாம் விலேயோவென மிளிருங்கணென்று துடங்கி). கண்ணென்றது-க்ருபை.

எட்டாம் பாட்டின் அழகியமணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.



ஒன்பதாம் பாட்டு

9. மிக்கவேதியர் வேதத்தினுட் பொருள்
நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினன்
தக்கசீர்ச் சடகோபனென்னம்பிக்காள்
புக்க காதலடிமைப் பயனன்றே.

பதவுரை—மிக்க வேதியர் வேதத்தின்—சிறந்த வைதிகர்களால் ஓதப்படுகின்ற வேதத்தினுடைய, உள் பொருள்— உள்ளுரை பொருளானது, நிற்க—நிலைநிற்கும்படி, பாடி—திருவாய்மொழியைப்பாடி, என் நெஞ்சுள்—என்னுடைய ஹ்ருதயத்திலே, நிறுத்தினன்—(அந்த வேதார்த்தங்களை அல்லது திருவாய்மொழியை) ஸுப்ரதிஷ்டிதமாக்கி யருளினர் (ஆழ்வார்); தக்கசீர்—தகுதியான குணங்களையுடையராய், சடகோபன்·சடகோபனென்ற திருநாமத்தை யுடையரான, என் நம்பிக்கு— (அந்த) ஆழ்வார் விஷயத்திலே, ஆள் புக்க- அடிமை செய்வதற்கு உறுப்பான, காதல்—ஆசையானது, அன்றே— அந்த க்ஷணத்திலேயே, அடிமைப்பயன்—(ஆழ்வார் திருவடிகளில்) கைங்கரியம் செய்வதையே பயனாகவுடைத்தாய்த்து.

---

# நஞ்சீயர் வ்யாக்யாநம்

அவ;—ஒன்பதாம்பாட்டு. ஸகல வேததாத்பர்யமான பாகவத சேஷத்வத்தை §"பயிலும்சுடரொளி" /"நெடுமாற்கடிமை" என்கிற இரண்டு திருவாய்மொழிகளிலும் அருளிச்செய்து என்நெஞ்சினுள்ளே நிறுத்தினானென்கிறார்.

வ்யா:—(மிக்கவேதியர்) எம்பெருமான் பக்கலிலே ஜ்ஞானபக்திகளைப் பூர்ணமாகவுடைய வைதிகர்; 103 " यत्र पूर्वे साध्याः सन्ति देवाः " (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்திதேவா:) என்கிறபடியே. (வேதத்தினுட் பொருள்) வேதத்துக்கு ப்ரா‍ணனான ப்ரமேயம் திருவாய்மொழி. திருவாய்மொழிக்கு ப்ரமேயம் பயிலும் சுடரொளி, நெடுமாற்கடிமை. (நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினன்) பண்ணோடும் இசையோடும் பாடி என்நெஞ்சிலே ப்ரதிஷ்டிப்பித்தான். கல்லைக்குழித்து நீரை நிறுத்துவாரைப்போலே கிடீர்செய்தது.

---

§ திருவாய் 3-7. / திருவாய் 8-10.

(தக்கசீரித்யாதி) எல்லாமேன்மையும் சொன்னாலும் தகுதியான ஆழ்வார். எல்லாம் சொன்னாலும் அங்குத்தை ப்ரபாவத்தை எல்லேகாண வொண்ணாதபடியிறே ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. (ஆள்புக்க காதலடிமைப்பயனன்றே) இவர் திருவடிகளிலுண்டான பக்தியன்றோ இவருக்கு அடியேனுதிலுண்டான ப்ரயோஜநம்.

எட்டாம்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

## நம்பிள்ளை ஈடு

அவ:—ஒன்பதாம்பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). உமக்கு ஆழ்வாருக்கு அவதியேதென்ன, என்னுடைய தண்மையாராதே ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை எனக்கு உபகரித்தாரென்று, /"நீசேனேன் நிறைவொன்றுமிலேன் நங்கண்பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்று ஆழ்வாரருளிச்செய்தாப் போலே இவரும் உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வார் திருவடிகளிலே அருளிச்செய்கிறார்.

வ்யா—(மிக்கவேதியர்) ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாகவுடையவர்கள். அநேகஶாகாத்யயநம் பண்ணினவர்களென்னவுமாம். (வேதத்தினுட்பொருள்)வேதத்தினுடைய பொருள். ஸகல வேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை.

(நிற்கப்பாடி) ப்ரதிபத்திபண்ணவரிதாயிருக்கிற வேத ரஹஸ்யார்த்தத்தைக் கேட்டார்க்கு ப்ரதிபத்திவிஷயமாம்படி பாடி. (என் நெஞ்சுள் நிறுத்தினான்) மலையைக்குழித்து அதிலே நீரை நிறுத்துவாரைப்போலே நிஸ்ஸாரமான என்நெஞ்சுக்கு இதுவே விஷயமாம்படி பண்ணினார்.

(தக்க சீர்ச்சடகோபன்) ஸர்வேச்வரன் கவிகளென்றால் தகுதியான கல்யாணகுணங்களையுடைய ஆழ்வார். §"அயர்வறு மமர்களதிபதி" என்றால் போரும்படி ஸர்வேச்வரனிருக்குமா போலே ஸர்வேச்வரன் கவிகளென்றால் தகுதியாய்த்து ஆழ்வாரிருப்பது. †"ஏற்கும் பெரும்புகழ்வான வரீசன் கண்ணன்றனக்கு ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்" என்றுதாமே அருளிச்செய்தாரிறே.

---

/ திருவாய் 3-3-4. § திருவாய் 1-1-1. † திருவாய் 3-9-11.

(என் நம்பிக்கு) என்னை விஷயீகரிக்கைக்குத் தகுதியான பௌஷ்கல்யத்தை உடையவர்க்கு. (ஆள்புக்ககாதல்) அடிமையாக வேணுமென்று எனக்குப்பிறந்த ருசி. (அடிமைப்பயனன்றே) அடிமையாகிற ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருக்கும்.

பகவத்விஷயத்தில் ருசி - இவர்க்கு ஶரீரவிச்லேஷம் பிறந்தால் அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒரு தேஶவிஶேஷத்திலே சென்றால் பெறக்கடவதாயிறே யிருப்பது. ஆழ்வார் விஷயத்தில் பிறந்த ருசி- அங்ஙனன்றிக்கே இச்ஶரீரத்தோடே ஆழ்வார் திருவடிகளிலே எல்லாவடிமைகளும் செய்யலாம்படி பண்ணும். /"துயரறு சுடரடி தொழுதெழு" என்று முதலிலே அபிநிவேஶித்த ஆழ்வாருக்கு *முனியே நான்முகனுக் கவ்வருகேயிறே பேறுய்த்து. இவ்விஷயத்தில் ருசிபிறந்தால் அத்தனை விளம்பமில்லை யென்கிறது. அன்றே யென்றது - ஆமே யென்றபடி; "அன்றெனக்கிளவியா மெனத்தகுமே."

ஒன்பதாம் பாட்டுக்கு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.



/ திருவாய் 1-1-1.

# பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம்

அவ:—ஒன்பதாம் பாட்டு. ஆழ்வாருடைய அருள் இவ்வுலகினில் மிக்கது" என்கைக்கடி யென்னென்னில். என்னுடைய தண்மை பாராதே ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தைப் பாடி அத்தை எனக்கு உபகரித்தானென்கிறார். ‡"நீசனேன் நிறைவொன்றுமிலேன் நங்கண்பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதி" என்று அவ்விஷயத்தில் ஆழ்வாரருளிச்செய்ததை ஆழ்வார் திருவடிகளிலே இவரருளிச்செய்கிறார்.

வ்யா:—(மிக்கவேதியர்) ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாக வுடையவர்கள். §"உளன்சுடர்மிகு சுருதியுள்" என்று ஆழ்வாரருளிச்செய்யக் கேட்டிருக்கைபாலே ப்ரமாணச்ரேஷ்டமென்கிறார். அநேக ஸாக்ஷாத்கரணம் பண்ணினவர்களென்றுமாம். (வேதத்தி னுட்பொருள்) ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை; வேதாந்தரஹஸ்யம் ததீயசேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வமென்றிறே வைதிக ஸாஸ்த்ரம் நிர்ணயித்தது.

---

அரும்பதம்:—ஒன்பதாம் பாட்டு. (மிக்கதென்கைக்கு) என்றது-மிக்கதென்றறிகைக் கென்றபடி. ஸ்ரீமதுரகவிகள் கங்காதீரத்தினின்றும் ஆழ்வாருடைய திவ்யதேஜஸ்ஸை ஸாக்ஷாத்கரித்துவந்த மஹாயோகிகளாகையாலே இவருக்கொரு தண்மையுமுண்டோவென்ன, வ்யாக்யாதா த்ருஷ்டாந்தமுகேந நைச்யமென்றருளிச்செய்கிறார் (நீசனேத்யாதி).

மிக்கவென்றதுக்கு-ச்ரேஷ்டதையும் பஹுத்வமுமென்றிரண்டர்த்தம்; முந்தினதை யருளிச்செய்கிறார் (ப்ரமாணேத்யாதி). ப்ரமாணச்ரைஷ்ட்யம்-அபௌருஷேயத்வாதிகளாலே, இப்படி விசேஷணமிட்டுச் சொல்ல வேண்டுமோவென்ன, ஆழ்வார் விசேஷணமிட்டாப்போலே அருளிச் செய்தாரென்கிறார் (உன்னித்யாதி). இரண்டாமர்த்தம் (அநேகேத்யாதி).

வேதார்த்தம் பகவச்சேஷத்வமன்றோ? உட்பொருளைத் தன்னெஞ்சில் நிறுத்துகை யாவதென்னென்ன அருளிச்செய்கிறார் (வேதாந்த ரஹஸ்யமென்று துடங்கி-ஸ்திரமாக்கினாரென்னுமளவும்) ஆழ்வார் ஏவிக்கொள்ளத்

---

‡ திருவாய் 3-3-4. § திருவாய் 1-1-7.

(நிற்கப்பாடி) தூர்க்ரஹமான இந்த ரஹஸ்யார்த்தத்தைக் கேட்டார்க்கு ப்ரதிபத்தி விஷயமாம்படிபாடி. /"பரமனைப்பயிலும் திருவுடையார்யவரேலும்" என்றும், /"எம்மையாளும் பரமர்" என்றுமருளிச்செய்தாரிறே. (என்னெஞ்சுள் நிறுத்தினான்) பகவச்சேஷத்வத்துக்குங்கூட பேட்டுபடையான என்னெஞ்சிலே இத்தை ஸ்திரமாக்கினார். கல்லைத்துளைத்து அதிலே நீரைநிறுத்துவாரைப் போலே நிர்விவரமான என்னெஞ்சுக்கு இதுவே விஷயமாம்படி பண்ணினார். இதிறே என் தண்மைபாராதே என்திறத்தில் பண்ணின உபகாரம்.

(தக்கசீர்ச் சடகோபன்) இது தொடங்கி உபகார ஸ்ம்ருதியாலே தமக்குப்பிறந்த அபிநிவேசத்தைப் பேசுகிறார் (தக்கசீர்ச் சடகோபன்) ஸர்வேச்வரன் கவிகளென்றால் தகுதியான கல்யாண குணங்களையுடைய ஆழ்வார். "அயர்வறுமமர்களதிபதி" என்றால் ஸர்வேச்வரத்துக்குப் போரும்படி இருக்குமாபோலே, ஸர்வேச்வரன் கவிகளென்றால் போரும்படியாயாய்த்து ஆழ்வாரிருக்கும் படி. †"ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன் கண்ணன்றனக்கு ஏற்

---

தாம் இங்கே அடிமை செய்கையாலே தமக்கு இங்கே ஸித்தித்தவடிமை, ஆழ்வாருக்கு அர்ச்சாவதாரம் ஏவிக்கொள்ளமாட்டாமையாலே பரமபதத்திலே ஸித்தித்ததென்றபடி. வேதாந்த ரஹஸ்யம்-ப்ரணவத்தில் சதுர்த்த்யர்த்தம்.

உக்தார்த்தத்தை த்ருஷ்டாந்தாந்தரமுகேந விவரிக்கிறார் (கல்லைத் துளைத்தித்யாதி). (நிர்விவரமான) பகவச்சேஷத்வம் கூடப்புகுராதபடியான. கீழோடே இவ்வர்த்தத்துக்குச் சேர்த்தியாகையாலே ப்ரக்ருதார்த்தோபஸம்ஹாரம் பண்ணுகிறார் (இதிறேயித்யாதி).

(இது துடங்கி) என்றது-இந்த அர்த்தமும் மேற்பாட்டும். "தக்க" என்றதுக்கு ஒன்று சொல்லவேண்டுகையாலே, ஸர்வேச்வரன் கவியென்று சொல்லுகைக்குத் தக்கவரென்றர்த்தம் அருளிச்செய்கிறார் (ஸர்வேச்வரன் கவிகளித்யாதி) "கண்ணன் தனக்குக் கவியென்றால் ஏற்கும் பெரும்புகழ்" என்றுகருதி ப்ரமாணமருளிச்செய்கிறார் (ஏற்குமித்யாதி). "தக்கசீர்"

---

/ திருவாய் 3-7-1. † திருவாய் 3-9-11.

கும் பெரும்புகழ்வண் குருகூர்ச்சடகோபன்" என்று தாமேயருளிச் செய்தாரிறே.

(என் நம்பிக்கு) அதுக்குமேலே ஒரு பௌஷ்கல்யமிறே இது. என்னை விஷயீகரிக்கைக்குத் தகுதியான ஶீலாதிகுண பௌஷ்கல்யத்தை உடையவரானவர்க்கு. (ஆள்புக்ககாதல்) அநந்யார்ஹ ஶேஷமாக்கின ருசி.

(அடிமைப்பயனன்றே) இந்த ருசியன்றோ அப்போதே தாஸ்யமான ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருப்பது. பகவத்விஷயத்தில் ருசியடியாகப் பிறந்த தாஸ்யம் ஶரீரவிச்லேஷம் பிறந்து அர்ச்சிராதி மார்க்கந்தாலே ஒரு தேஶவிஶேஷத்தில் சென்றால் பெறக்கடவதாயிறே இருப்பது; அங்ஙனன்றிக்கே, ஆழ்வார்பக்கல் பிறந்தருசி இச்சரீரத்தோடே இங்கே ஆழ்வார் திருவடிகளிலே எல்லாவடிமையும் செய்யலாம்படி பண்ணும்.

§"துயரறுசுடரடிதொழுதெழு" என்று முதலிலே அபிநிவேஶித்த ஆழ்வாருக்கு /முனியே நான்முகனுக்கவ்வருகேயிறே பேறாய்த்து. இவ்விஷயத்தில் ருசிபிறந்தால் அத்தனை விளம்பியாதென்கிறது. அன்றேயென்றது. ஆமென்றமாம்.

ஒன்பதாம்பாட்டுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

என்றபோதே கல்யாணகுணங்களைச் சொல்லியிருக்க, நம்பியென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (அதுக்குமேலேயித்யாதி வாக்யத்வயத்தாலே). ஆள்புக்ககாதல் - ஆள்புகப்பண்ணினகாதல்; இத்தை அருளிச்செய்கிறார் (அநந்யார்ஹேத்யாதி).

அடிமையை - பயனாக - பலமாகவுடைத்தானதென்றர்த்தம் அருளிச்செய்கிறார் (அப்போதே யித்யாதி). வ்யாவர்த்யபூர்வகம் விவரணம் பண்ணுகிறார் (பகவதித்யாதி). இத்தை மூதலிக்கிறார் (துயரறுசுடரடியித்யாதி). முந்தின அர்த்தத்திலே "அன்றே அடிமைப்பயன்" என்று அந்வயம்; இரண்டாமர்த்தத்துக்கு யதாக்ரமமந்வயம்.

ஒன்பதாம்பாட்டுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.

---

§ திருவாய் 1-1-1. / திருவாய் 10-10.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநம்

—○—

அவ:—ஒன்பதாம் பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). கீழே ஆழ்வாருடைய குணகீர்த்தநம் பண்ணும்படி அவர்தமக்கு க்ருபை பண்ணினபடியைச் சொல்லி, அதுக்குத் தண்ணீர்த்துரும்பான அநாதிகர்மங்களை ஆழ்வார் தம்முடைய பார்வையாலே பாறவடித்த படிசொல்லி, "அப்படியான ஆழ்வாருடைய க்ருபாவைபவத்தை திக்குக்கள்தோறும் அறிவிக்கக்கடவேன்" என்று தம்முடைய ஆதரவிஶேஷத்தைச்சொல்லி, 179 "कृपया पर्यपालयत्" (க்ருபயாபர்ய பாலயத்) என்றும், §"அருளினன்" என்று தொடங்கி ‡"ஆழியா னருள் தருவானமைகின்றான" என்றது முடிவாக ருஷிகளும் ஆழ்வார் தாமுமாக பகவத்க்ருபையை ஆதரித்துப்போராநிற்க, நீர் ஆழ்வாருடைய க்ருபாப்ரவஹித்தியிலே ப்ரவணரானபடி என்னென்ன, பகவத்க்ருபையிற்காட்டில் ஆழ்வாருடைய க்ருபையே இந்தலோகத்தில் அபிவ்ருத்தமாகையாலே என்றும் சொல்லி நின்றது கீழ்.

இதில்கீழே ஆழ்வாருடைய ஜ்ஞாநப்ரதாநம் ப்ரஸ்துதமாகை யாலே அவர் ஸகலவேதாந்த தாத்பர்யமான அர்த்தவிஶேஷத்தைத் தமக்கு அறிவித்த ப்ரகாரத்தைச்சொல்லி அதுக்கீடான குணங்களை யுடையராகையாலே பூர்ணரான ஆழ்வார் விஷயத்தில் ஶேஷபூதன் ப்ரேமமேயன்றோ அவர்க்கடிமைசெய்கையிலே ப்ரயோஜநமென்று

அரு:—ஒன்பதாம்பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). இன்றுதொட்டு மென்கிற பாட்டுத்தொடங்கி அவதாரிகை அருளிச்செய்கிறார் (கீழே ஆழ்வாருடையவித்யாதி). அருளினனவ்வருமறையின் பொருளென்கை யாலே (ஜ்ஞாநப்ரதாநம் ப்ரஸ்துதமாகையாலே) என்றது. அவருக்கு அடிமை செய்கையிலே ப்ரயோஜநமென்றது சப்தார்த்தமாய், இத்தால் பலத்தையருளிச்செய்கிறார் (உபகாரஸ்ம்ருதியாலே என்று துடங்கி) (அடிமை செய்கையிலே ப்ரயோஜநமென்றது) ப்ரேமமே கைங்கர்யங்களில் ப்ரதாந கைங்கர்யமென்றபடி.

§ திருவாய் 1-1-1. ‡ திருவாய் 10-9-1.

உபகாரஸ்ம்ருதியாலே அவருக்கு ஶேஷபூதனென்று ப்ரேமபூர்வகமாகப் பிறக்குமாதரமன்றோ அடிமையில் முடிந்தநிலமென்கிறார்.

கீழ் நாலாம்பாட்டிலே ஆசார்ய விச்வாஸம் சொன்னார். மேலிரண்டு பாட்டாலே ஆசார்ய வைபவமும் அவனுடைய உபகார வைபவமும் சொன்னார். இதில் உபகாரப்ரகாரோபபாதநம் பண்ணிநின்றுகொண்டு தம்முடைய க்ருதஜ்ஞதையைச் சொல்லுகிறார். ஆசார்யனுக்கு க்ருபையே வேஷமாய் ஶிஷ்யனுக்கு க்ருதஜ்ஞதையே வேஷமாயிருக்கும்.

வ்யா:—(மிக்கவேதியரித்யாதி) ஆழ்வார் தமக்கறிவித்த அர்த்தத்தின் சீர்மையை அருளிச்செய்கிறார். (வேதியர்) வேதியராகிறார்-பாஹ்ய ஶாஸ்த்ரங்களை /"காண்பரோ கேட்பரோதான்" என்று கண்ணாலும் பாராதே செவியாலும்கேளாதே நித்யநிர்த்தோஷமான வேதப்ரமாண நிஷ்டரானவர்கள். 180 **"वेदशास्त्रात्परं नास्ति"** (வேதஶாஸ்த்ராத்பரம் நாஸ்தி) †"வேதநூலோதுகின்றதுண்மையல்லதில்லை" என்றும் சொல்லுகிறபடியே வேதத்துக்கு அவ்வருகு ப்ரமாணமில்லை என்றிருக்குமவர்கள்.

(மிக்கவேதியர்) அவ்வேதத்திலும் 181 **"वेदवादरताः"** (வேதவாதரதா:) என்றும், 182 **"त्रैविद्या मां सोमपाः पूतपापाः"** (த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா:) என்றும் சொல்லுகிறபடியே

---

ஏத்தவருளினனென்று அருள்பற்றாசாக ஒரு அவதாரிகை சொல்லிற்றுக்கீழ். இகழ்விலனென்ற பதத்தைத் தொட்டுக்கொண்டு இன்னமுமொரு அவதாரிகை அருளிச்செய்கிறார் (கீழே நாலாம்பாட்டிலென்று). கீழே நாலாம்பாட்டிலென்றது இப்பாட்டுக்கு முந்திய நாலாம்பாட்டான இன்று தொட்டுமென்கிற பாட்டிலென்றபடி.

கீழ் வாக்யத்தை விவரிக்கிறார் (வேதசாஸ்த்ராத்பரம் நாஸ்தியென்று துடங்கி). வேதியரென்றது பூர்வபாகநிஷ்டரைச் சொல்லுகிறது. மிக்கவேதியரென்றது உத்தரபாக நிஷ்டரைச் சொல்லுகிறது.

---

/ திருமாலை-7. † திருச்சந்தவிருத்தம்-72

ஆபாத ‡ப்ரதீதமாய் அல்பாஸ்திரங்களான ஸ்வர்க்காதி புருஷார்த் தங்களையும் தத்ஸாதநங்களான ஜ்யோதிஷ்டோமாதிகளையும், புருஷார்த்த தத்ஸாதநங்களாக அநுஸந்திப்பிட்டிருக்கையன்றிக்கே உத்தம புருஷார்த்தமான பகவத்ப்ராப்தியே புருஷார்த்தமென்றும், தத்ஸாதநமும் 183 "ब्रह्मविदाप्नोति परं" (ப்ரஹ்மவிதாப்நோதி பரம்) இத்யாதி வாக்யோக்தமான வேதநமாதல், 184 "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே) என்கிற ஶரணாகதிரூபமான சரமஸாதநமாதலென்று, வேதாந்த விஜ்ஞாநத்தாலே ஸுநிச்சிதார்த்தராயிருக்குமவர்கள்.

(மிக்கவேதியர்) ||"மிக்கார்வேதவிமலர்" என்று ஆழ்வார் பாடே கேட்கையாலே மிக்கவேதியரென்கிறார். அன்றிக்கே, மிக்கவேதியரென்று §"சுடர்மிகுசுருதி" என்கிறபடியே ப்ரத்யக்ஷாதிகளிலதிகமான வேதப்ராமண நிஷ்டரென்றுமாம். (வேதியர் வேதம்) 185 "ब्राह्मणानां धनं वेदः" (ப்ராஹ்மணாநாம் தநம் வேத:) என்றும் /"அந்தணர்மாடு" என்றும் சொல்லுகிறபடியே அவர்களுக்கு பரமதநமானவேதம். (வேதியர்வேதம்) வேதத்தையே தங்களுக்கு நிரூபகமாகவும் தநமாகவுமுடையராயிருப்பர்கள்.

(வேதத்தினுட்பொருள்) அந்த வேதத்திலுண்டான அர்த்த விஶேஷத்தை. (வேதத்தின்பொருள்) அதாவது 134 "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" (வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:)

---

மிக்கவேதியரென்று இவரறிந்தபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (வேதவிமலரென்று துடங்கி). மிக்கவென்றது வேதியர்க்கு விசேஷணமாதல், வேதத்துக்கு விசேஷணமாதல். வேதியரென்கையாலே நிரூபகத்வம். வேதியர் வேதமென்கையாலே வேதத்தையே தநமாகவுடையரென்றபடி.

நிற்கப்பாடி என்றதுக்கு மூன்றுபொருள். துர்க்ரஹமான வேதார்த் தத்தை ப்ரதிபத்தி விஷயமாம்படிபாடி என்னுதல். இந்த அர்த்தத்தை

---

‡ (பா) ப்ரஸித்தமாய். || திருவாய் 2-6-8. § திருவாய் 1-1-7.
/ திருநெடு-7.

என்றும் /"வேதப்பொருளே என்வேங்கடவா" என்றும், ‡"வேதாந்த விழுப்பொருள்" என்றும் சொல்லுகிறபடியே ஸகல வேதங்களும் ஒருமிடறாக ஓதித்தலைக்கட்டுவது பகவத் ஸ்வரூபாதிகளையிறே. (உட்பொருள்) அதில் தத்விஷய ப்ரதிபாதகமான அம்ஶம் புறப்பொருளாய், ததீயப்ரதிபாதகமான அம்ஶம் உட்பொருளாயிருக்கும். அதில் புறப்பொருளையே சொல்லிவிடுகையன்றிக்கே அதுக்கு ஹ்ருதயமான ததீயவைபவத்தை ||பயிலும் சுடரொளி §நெடுமாற்கடிமை இரண்டாலுமருளிச்செய்தார்.

(நிற்கப்பாடி) துர்க்ரஹமான வேதார்த்தத்தை ப்ரதிபத்தி விஷயமாம்படிபாடி. (நிற்கப்பாடி) கேட்டவர்கள் நெஞ்சிலே †ஊற்றிருக்கும்படிபாடி என்றுமாம். (வேதத்தினுட்பொருள் நிற்கப் பாடி) அது *நிற்கும் நான்மறையானைப்போலே அதிலர்த்தரூபமான இதுவும் ஸர்வகாலமும் அழிவின்றிக்கே நிற்கும்படியாகப் பாடியென்றுமாம். (வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி) வைதிகரானவர்கள் அதுக்கு ஹ்ருதயமான அர்த்ததாத்பர்யத்தை அறிந்து அதிலே நிஷ்டராம்படிபாடி.

(என்நெஞ்சுள் நிறுத்தினான்) அதுதன்னை என்நெஞ்சிலே ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார். (என்நெஞ்சுள் நிற்கப்பாடி நிறுத்தினான்) பாடுகிறபோதே என்நெஞ்சிலே தொங்கும்படிக் கீடாக விரகிட்டுப்பாடி நிறுத்தினான். (நெஞ்சுள் நிறுத்தினான்) அதுதன்னிலும் மேலெழச்சொல்லி விடுகையன்றிக்கே அந்தரங்கமாக உபதேசித்தார்.

---

விவரிக்கிறார் (கேட்டவர்கள் நெஞ்சிலேயென்று துடங்கி). அன்றிக்கே, வேதார்த்தத்தை அழிவின்றிக்கே ஸ்திரமாய் நிற்கும்படிபாடி என்றுமாம். அன்றிக்கே வைதிகரானவர்கள் வேதஸாரமான ததீயசேஷத்வத்தை அறிந்து அதிலே நிஷ்டராம்படி என்றுமாம். லௌகிகருடைய ஹ்ருதயங்களிலே நிற்கும்படிபாடின மாத்ரமன்றிக்கே அதுதன்னை என் நெஞ்சிலே ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார்.

---

/ பெரியாழ்-திரு 2-9-6. ‡ பெரியாழ்-திரு 4-3-11. || திருவாய் 3-7. § திருவாய் 8-10. † (பா) உற்றிருக்கும்படி.

(என்னெஞ்சுள் நிறுத்தினன்) புன்மையே வேஷமான என் னெஞ்சிலே படுத்தினார். (நிறுத்தினன்) உபதேசித்தவர் தாமே குலைக்கிலும் குலையாதபடி த்ருடாத்யவஸாயமாக உபதேசித்தார். (என்னெஞ்சுள் நிறுத்தினன்) தத்விஷயமும் உட்பட ஊடுபோகாத என்னெஞ்சிலே ததீய வைபவமுட்பட நடையாடும்படி பண்ணினார்.

(மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி என் னெஞ்சுள் நிறுத்தினன்) வேதார்த்தங்களை வகுத்து அதுக்குப் பாசுரமிட்டுத் திருவாய்மொழி பாடினாப்போலேயோ அப்பரமார்த் தங்களை என்னெஞ்சிலே படுத்தின அருமை? வேதார்த்தங்களைத் திருவாய்மொழியிலே சேர்க்க, அத்திருவாய்மொழியினர்த்தங்களை என்னெஞ்சிலே சேர்த்தார்; ஆசார்யவைபவம் கைப்பட்டவனுக் காய்த்து ஸகல வேதார்த்தங்களும் கைப்படுவது. (மிக்கவித்யாதி) ப்ரமாணவைபவத்தையும் ப்ரமேயமான தத்வவைபவத்தையும் ப்ரமா த்ருவைபவத்தையும் அபிமதவைபவத்தையும் இவர் நெஞ்சிலே படும்படி பூர்ணோபதேசம் பண்ணினாராய்த்து.

(தக்கசீர்ச்சடகோபனென்னம்பி) இப்படி உபதேசிக்கவல்ல ஜ்ஞாநாதிபூர்த்தியைக்காட்டி என்னுடைய ஸாட்யத்தைப்

---

உள்ளென்ற சப்தத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அதுதன்னிலும் மேலெழவென்றுதுடங்கி) என்னென்ற சப்தத்துக்குப் பொருளருளிச் செய்கிறார் (புன்மையே வேஷமானவென்னெஞ்சிலே படுத்தினாரென்று). (உள்புகாத) என்றது உள்ளே ப்ரவேசியாதவென்றபடி. நிறுத்தினா னென்கைக்கு அருமையோவென்ன அருளிச்செய்கிறார் (வேதார்த்தங்களை யித்யாதி). வேதார்த்தங்களை நெஞ்சிலே நிறுத்தினதுக்கு ஜ்ஞாபகமே தென்ன அருளிச்செய்கிறார் (ஆசார்ய வைபவமித்யாதி). வேதார்த்தங்களைத் திருவாய்மொழியிலே நிற்கப்பாடி அந்தத் திருவாய்மொழியினர்த்தங்களை என்னெஞ்சிலே சேர்த்தாரென்றுமாம். இவ்வர்த்தத்தில், நிற்கவென்றது திருவாய்மொழியிலே நிற்கப்பாடி என்றபடி. வேதமென்கையாலே ப்ர மாணவைபவம். வேதியரென்கையாலே ப்ரமாத்ருவைபவம். பொரு ளென்கையாலே ப்ரமேயமான பகவத்வைபவம். உட்பொருளென்கை யாலே அபிமதமான ததீயவைபவம்.

(தக்க) உபதேசிக்கைக்குத் தகுதியானவென்றபடி. (ஜ்ஞாநாதிகளைத் தரைகாணவொண்ணாதவர்) என்றது எத்தனையேனுமதிசயித ஜ்ஞாநத்தை

போக்கித் தம்முடைய பூர்த்தியிலே நிலைநின்றவர். குறைவாளரைக் குறைவறுக்கையிறே ஒருவன் பூர்த்திக்கு மேலெல்லை. (நம்பி) விபூதிக்காக உபதேசித்தாலும் தம்முடைய ஜ்ஞாநாதிகளைத் தரைக் காணவொண்ணாதவர். (என்நம்பி) அவருபதேசித்த அர்த்தங் களிலும் அவருடைய பூர்த்தியிலேயாய்த்து இவர் தோற்றது. (தக்கசீர்ச்சடகோபனென்நம்பி) * தக்ககீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியான அவருடைய நம்பியன்று இவருடைய நம்பி. அப்பூர்த்தி என்னளவில் வந்ததில்லையே.

(ஆள்புக்ககாதல்) அவருக்கு அடிமைபுக்கத்தாலுண்டான ஆதரம். (அடிமைப்பயனன்றே) அடிமைப்ப ப்ரயோஜநமாக வுடையதன்றோ. முற்பட அடிமைபுக்கு அநந்தரம் ஆதரம் நடந்து பின்பு அடிமைசெய்யுமதுவே அவருக்கு ப்ரத்யுபகாரம். முற்பட சேஷபூதனாய் பின்பு ப்ரேமம்நடந்து ப்ரேமாநுரூபமான கிஞ்சித்காரமும் நடக்கவேணும். ஆசார்யபவ்யதையும், ஆசார்ய ப்ரேமமும் ஆசார்ய கிஞ்சித்காரமும் இம்மூன்று அபேக்ஷிதமிறே ஶிஷ்யனுக்கு.

---

யுடையவர்களுக்கும் உபதேசம்பண்ணத்தக்க ஜ்ஞாநாதிபூர்த்தியை உடையவ ரென்றபடி. என்னென்ற சப்தத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவருப தேசித்த அர்த்தங்களிலுமென்று துடங்கி). சடகோபனென்நம்பி என்கை யாலே திருக்குறுங்குடிநம்பியை வ்யாவர்த்திக்கிறது. திருக்குறுங்குடி நம்பியைப்பற்ற இவர்க்கதிசயமேதென்ன அருளிச்செய்கிறார் (அப்பூர்த்தி என்னளவில் வந்ததில்லையே) என்று.

''அடிமைப்பயனன்றே'' என்றதுக்கு இரண்டுபொருள். அதில் அவதாரிகையிலே ஆழ்வார்விஷயமான ஸ்நேஹமே கைங்கர்யத்தில் வைத்துக்கொண்டு ஸாரம்சமான ப்ரயோஜநமென்றார். அன்றிக்கே இவ்விடத்தில் ஆழ்வார்விஷயமான ஆதரம் கைங்கர்யத்தை ப்ரயோஜந மாக உடைத்தாயிருக்குமென்கிறார். அதாவது சேஷத்வம் ஆதரத்தை விளைக்கும். ஆதரம் கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்குமென்றபடி. இந்த அர்த்தத்தை அருளிச்செய்கிறார் (முற்படவடிமைபுக்கென்று தொடங்கி) ''முற்படவடிமைபுக்கு' என்ற கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (முற்பட சேஷபூதனாயென்று துடங்கி) இத்தால் பலிதார்த்தத்தை அருளிச்செய் கிறார் (ஆசார்ய பவ்யதையுமென்று துடங்கி).

அவர் பகவச்சேஷத்வத்தையும் பகவத் ப்ரேமத்தையும் பகவச் சேஷவ்ருத்தியையும் உபதேஶித்தார். இவர் ஆழ்வாருக்கு ஶேஷமாய் அவர்க்கே ஸ்நிக்தராய் அவருக்கே கிஞ்சித்கரிக்கத் தேடுகிறாராய் நின்றது. இவர் கற்றது இதிலேயாய்த்து; அவர் புறப்பொருளைவிட்டு உட்பொருளைக்கொடுத்தார். இவர் உட்பொருளான பகவத் விஷயந்தன்னைப் புறப்பொருளாக்கி அதிலுமுட்பொருளான ஆழ்வார் திருவடிகளிலே ஶேஷபூதராய் ப்ரேமபூர்வகமான கைங்கர்யத்திலே இழிகிறாராய்த்து.

(அடிமைப்பயனன்றே) அடிமை ப்ரயோஜநமென்னுமிடம் ஆழ்வார் ஸ்ரீபாதத்திலே கற்றார். (அன்றே) அதுவேயன்றோ அர்த்தம். அந்த வழுவிலாவடிமை செய்கிறதிற்காட்டில் இது வன்றோ உறுவது.

ஒன்பதாம்பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

உட்பொருளென்றது ததீயசேஷத்வமென்றருளிச்செய்தார் கீழ். அன்றிக்கே, உட்பொருளென்றது பகவச் சேஷத்வமென்றருளிச்செய்கிறார் (அவர் பகவச்சேஷத்வத்தையுமென்று துடங்கி). கீழில்ரீதியன்றிக்கே பொருளென்று ஐஶ்வர்யாதி புருஷார்த்தமாய், உட்பொருளென்று பகவத் விஷயமாக்கி, ஒரு அர்த்தமருளிச்செய்கிறார் (அவர் புறப்பொருளை விட்டித்யாதி). இந்தவர்த்தத்துக்கு, புறப்பொருளென்றது பூர்வபாகார்த்தம். அடிமையே ப்ரயோஜநமென்கிறவிடம் ஆழ்வார் ஸ்ரீபாதத்திலே, அவர் வழுவிலாவடிமை செய்யவேண்டுமென்றருளிச் செய்யக்கேட்டு, அங்கே அப்யஸித்தாரென்றபடி.

ஒன்பதாம்பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.

பத்தாம்பாட்டு

10. பயனன்றாகிலும் பாங்கலராகிலும்
செயல்நன்றாகத் திருத்திப்பணிகோள்வான்
குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே

பதவுரை:—பயன் அன்று ஆகிலும்—(*பிறர் திருந்துவதால்*) தமக்கொரு பயனில்லாமற் போனாலும், பாங்கு அலர் ஆகிலும்—(*அவர்கள் திருந்துகைக்குப்*) *பாங்காக அமையாமற் போனாலும்*, செயல்—*தமது செய்கையாலே*, நன்றாக திருத்தி—*நன்றாக சிக்ஷித்து*, பணி கோள்வான்—(*அவர்களை*) *ஆட்கொள்ளுமவராய்*, குயில் நின்று ஆல் பொழில் சூழ் குருகூர்—*குயில்களானவை நின்று ஆரவாரஞ் செய்யப்பெற்ற சோலைகளாலே சூழப்பட்ட திருநகரியிலே* (*எழுந்தருளியிருக்கிற*) நம்பி!—*ஆழ்வாரே!* உன் தன்—*தேவரீருடைய*, மொய் கழற்கு—*சிறந்த திருவடிகளில்*, அன்பையே—*அன்பு உண்டாவதைக் குறித்தே*, முயல்கின்றேன்—*முயற்சி செய்கின்றேன்.*

---

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்

அவ:—பத்தாம்பாட்டு. பயிர்கள் எறிமறியக்கடவதிறே. அப்படியே ஆழ்வார் பண்ணின உபகாரத்தை ஸ்மரிக்கையாலே தாம்பண்ணினபக்தி ஒன்றுமில்லையாய்த்தோற்றி தேவரீர் திருவடிகளிலே இப்போதிறே நான் ஸ்நேஹிக்கத் தொடங்கினேனென்கிறார்.

வ்யா:—(பயனன்றாகிலுமித்யாதி) அநுத்தேச்யரேயாகிலும் அபவ்யரேயாகிலும். எம்பெருமானன்றே அநாச்ரிதரென்று கைவிடுகைக்கும், அவிதேயரென்று நிரஸிக்கைக்கும். (செயல்நன்றாக) நின்றநிலையிலே துர்வ்ருத்தரையும் ஸுவ்ருத்தராக்கிக் கொள்ளுவார் ஆழ்வாரன்றோ. பகவத்விஷயம்போலே அதிகாரம்பார்த்துப் புகுகையன்றியே நின்றநிலையிலே புகுரலாம்படியிறே ஆழ்வாருடைய நீர்மையிருப்பது.

(குயிலித்யாதி) நின்றநிலையிலே கிட்டலாமென்கைக்கு நிதர்சநம் சொல்லுகிறது. இவரை அவகாஹித்த திர்யக்குகளும் களித்து வர்த்திக்கும்படி இவரைக் கிட்டினார்க்குமுண்டுகாணும். 111 **"एतत्साम गायन्नास्ते"** (ஏதத்ஸாம காயந்நாஸ்தே) என்கை பகவத்விஷயத்துக்காகிலிறே

ஒரு தேசவிசேஷத்தேறப்போக வேண்டுவது; ஏற்றமுள்ள விஷயத்தைப் பற்றினார்க்கு இங்கே கிடைக்கும்போலேகாணும். முக்தர்க்கிறே அங்குப் போகவேண்டுவது. முமுக்ஷுக்களுக்குக் கிடைக்குமிடமிறே இவ்விடம். எம்பெருமானோடு நித்யரோடு முக்தரோடு வாசியற ஹ்ருஷ்டராம்படியிறே ஆழ்வாருடைய பூர்த்தி.

(முயல்கின்றேனித்யாதி) உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளிலே ஸ்நேஹத்தைப் பண்ணுகைக்கு உத்ஸாஹியாநின்றேன். பணிகொள்வானென்னப்புகில் பணிகொள்வானான குருகூர்நம்பி என்னுதல், பணிகொள்ளுகைக்காக முயல்கின்றேனென்னுதல்.

பத்தாம்பாட்டுக்கு நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

## நம்பிள்ளை ஈடு

அவ:—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) ஆழ்வார் தமக்கு உபகரித்த உபகாரத்தை அனுஸந்தித்தவாறே தாம் இதுக்கு முன்பு ஆழ்வார் விஷயத்தில் நின்ற நிலையடங்க முதலடியிட்டில ராகத்தோன்றுகையாலே அவர் பண்ணின வுபகாரத்தைப்பேசுகிறார். 186 "**कृत्स्नां वा पृथिवीं दद्यान्न तत्तुल्यं कथञ्चन**" (க்ருத்ஸ்நாம் வா ப்ருதிவீம் தத்யாந்ந தத்துல்யம் கதஞ்சந) என்கிறபடியே ஆசார்ய விஷயத்திலெல்லாம் செய்தாலும் அவன் பண்ணின உபகாரத்தைப் பார்த்தால் ஒன்றும் செய்யப்பெற்றதில்லை என்னும்படியாய்த் திருப்பது. அவன் இவனுக்கு உபகரித்தது ஸர்வேச்வரனையானால் இன்னமும் ஒரு ஸர்வேச்வரனுண்டாகிலிறே இவனுக்குக் கொடுத்து ப்ரத்யுபகாரம் பண்ணிறுகைலாவது; ஆகையால் என்றும் குறைப்பட்டே போமித்தனை.

வ்யா:—(பயனன்றாகிலும்) ஒருவன் ஒருவனுக்கு உபகரிப்பது தனக்கொரு ப்ரயோஜநத்தைப் பற்றியிறே; அங்ஙனொரு ப்ரயோஜநமில்லையேயாகிலும். (பாங்கலராகிலும்) ப்ரயோஜநமில்லாவிட்டால் சொல்லுகிற ஹிதம் கேட்கைக்குப் பாங்காயிருக்கலாமிறே; அங்ஙன் பாங்கின்றிக்கே இருந்தார்களேயாகிலும். இப்படியிருக்கிறவர்களுக்கு ஹிதம் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமென்னென்னில்; இவர்களனர்த்தம் பொறுக்கமாட்டாமை சொல்லுகிறது. ராவணனுடைய துர்தசையைக்கண்டு 187 "**मित्रौपयिकं कर्तुं**"

(மித்ரமௌபயிகங்கர்த்தும்) என்று அவனுக்குங்கூட ஹிதம் சொன்னாளிறே பிராட்டி; ஒருவன் தலைக்கடையையும் புறக்கடையையுமடைத்துக் கொண்டுகிடக்க, அவ்வகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் கண்டுநிற்கிறவர்களுக்கு அவிக்கவேண்டியிருக்குமிறே; அப்படியேயாய்த்து ஆழ்வார்படியும்.

(செயல் நன்றாக) தன்னுடைய செயலாலே இவையெல்லாம் நன்றாம்படி; இவனுடைய செயலா(வி?)லே எல்லாம் நன்றாம்படி என்னவுமாம். (திருத்திப்பணிகொள்வான்) §"தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல" என்று ப்ராப்யமும் ப்ராபகமும் தானேயென்று அத்யவஸித்திருக்குமவர்களுடைய விரோதியைப்போக்கி அடிமை கொள்ளுமவனென்றதிறே ஸர்வேச்வரனை; அங்ஙனன்றிக்கே, அவையொன்றுமின்றிக்கேயிருக்குமவர்களையும் திருத்திப்பணி கொள்ளுமவரிறே இவர். "பணி கொள்வான்-குருகூர்நம்பி" என்றந்வயம்.

(குயில்நின்றாரித்யாதி) இவர் ஆற்றாமையாலே ஒரு காலத்திலே ‡"காணவாராய்" என்று கூப்பிடுவதுமொரு பாசுரமுண்டு. ஹர்ஷத்தாலே /"யாவர் நிகரகல்வானத்தே" என்று களித்துச் சொல்லுவதும் ஒரு பாசுரமுண்டு; இரண்டு பாசுரத்துக்கும் குயிலாயிற்றுப் பயிற்றுவன. இவர் பேச்சைக் கேட்க செவியேற்றாலே அவையும் இவர் பாசுரத்தைச் சொல்லுமாயிற்று. (குருகூர்நம்பி) †"ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல" என்று சேதநரளவின்றியே திர்யக்குகளளவிலுமேறும்படியாய்த்து ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது.

(முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே) உன்னுடைய ச்லாக்யமான திருவடிகளுக்கு அன்பை முயலாநின்றேன். யத்நியாநின்றேன். ¶"என்னைத்தீமனம் கெடுத்தாயுனக்கென்செய்கேன்" என்று அவர்தாம் அருளிச்செய்யுமாபோலே பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறுகிறார்.

பத்தாம்பாட்டுக்கு நம்பிள்ளைஈடு முற்றிற்று.

---

§ திருவாய் 3-5-11. ‡ திருவாய் 8-5-2. / திருவாய் 4-5-8.
† திருவாய் 9-7-2. ¶ திருவாய் 2-7-8.

# பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்

அவ:—பத்தாம்பாட்டில், ஆழ்வார் தமக்கு உபகரித்தவுப காரத்தை யநுஸந்தித்தவாறே தாம் இதுக்கு முன்பு ஆழ்வார் விஷயத்தில் நின்ற நிலையடங்க முதலடியிட்டிலராகத்தோற்றுகை யாலே அவர் பண்ணின உபகாரத்தைப் பேசுகிறார். ஆசார்யன் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லையோ வென்னில், 186 "**कृत्स्नां वा पृथिवीं दद्यान्न तत्तुल्यं कथञ्चन**" (க்ருத்ஸ்நாம் வா ப்ருதிவீம் தத்யாந்ந தத்துல்யம் கதஞ்சந) என்று பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியும் ஸத்ருஶமன்றென்றதிறேஶாஸ்த்ரம்.

அவன் இவனுக்கு உபகரித்தது ஸர்வாதிகமாயிருப்பதொரு மிதுநத்தையானால் இப்படியே இருப்பதொரு மிதுநத்தையுபகரித் தாலிறே இவன் ப்ரத்யுபகாரம் பண்ணினானாவது. ஆகையாலே ஆசார்யவிஷயத்தில் எல்லாம் செய்தாலும் அவன் பண்ணின உபகாரத்தைப் பார்த்தால் ஒன்றும் செய்திலனாய், என்று மொக்கக் குறைவாளனாய்ப் போருமித்தனை.

வ்யா:—(பயனன்றாகிலும்) நாட்டில் ஒருவனுக்கு ஒருவன் உபகரிப்பது ஒரு ப்ரயோஜநத்தைப்பற்றவிறே, அங்ஙனன்றிக்கே ஒரு ப்ரயோஜநமில்லாதிருக்கச் செய்தேயும். (பாங்கலராகிலும்)

---

அரு:—பத்தாம்பாட்டு. "ஆட்புக்ககாதலடிமைப்பயனன்றே" என்று தாம் அநுகூலராய் கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டிருக்க, "பயனன் றாகிலும் பாங்கலராகிலும்" என்றநுஸந்திக்கக்கூடுமோவென்கிற சங்கை யிலே, அது தம்நெஞ்சில் படாமையாலே அருளிச்செய்கிறாரென்று அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). (தமக்கு) மதுரகவிகளுக்கு. (உபகாரத்தை) என்றது என்னெஞ்சுள் நிறுத்தினானென்றதைக் கடாக்ஷித்து. (இதுக்குமுன்பு) என்றது பயனன்றாகிலுமித்யாத்யநுஸந்தாநத் துக்கு முன்பென்றபடி. (அவர்பண்ணின உபகாரம்) என்றது தன்பக்க லொன்றுமின்றிக்கேயிருக்க, அவர்பண்ணின உபகாரமென்றபடி. முத லடியிட்டிலராகத் தோற்றுகைக்கு ஹேது தாம்பண்ணின அநுகூலா சரணம் ஸத்ருசமல்லாமையாலே அத்தைப் பண்ணக்கூடாதென்று கருத்து. (ப்ரத்யுபகாரம்) ஸத்ருசோபகாரம்.

ப்ரயோஜநமில்லாவிட்டால் சொல்லுகிற ஹிதம்கேட்கைக்குப்பாங்காயிருக்கலாமிறே. அங்ஙன் பாங்கின்றிக்கே இருந்தார்களேயாகிலும். இப்படியிருக்குமவர்களுக்கு ஹிதம் சொல்லுகைக்குஹேது வென்னென்னில்: இவர்களநர்த்தம் பொறுக்கமாட்டாமையிறே.

இப்படி உபதேசித்தாருண்டோ வென்னில், ராவணனுடைய துர்க்கதியைக்கண்டு 187 "मित्रमौपयिकं कर्तुं" (மித்ரமௌபயிகம் கர்த்தும்) என்று அவனுக்கு ஹிதம் சொன்னாளிறே பிராட்டி; ஒருவன் தலைக்கடையும் புறக்கடையுமடைத்துக்கொண்டு அகத்துக்குள்ளேகிடக்க, அகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால், கண்டு நின்றார் அவிக்கும்போது, தங்களுக்கொரு ப்ரயோஜநத்தைப் பார்த்தாதல் உள்ளே கிடந்தவனபேக்ஷித்ததுக்காகவாதலன்றே அவிப்பது; இப்படியாய்த்து ஆழ்வார்படியும்.

(செயல்நன்றாக) தனக்கொரு ப்ரயோஜநமில்லையானாலும், எதிர்த்தலை பாங்கின்றியே யொழிந்தாலும் அவனுஜ்ஜீவிக்கும்படி யென்னென்னில், தம்முடைய செயலாலே எல்லாம் நன்றாம்படி பண்ணி. இவன் செயல்தான் நன்றாகும்படி பண்ணியென்றாகவுமாம். (திருத்திப்பணிகொள்வான்) /"தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப்பணி கொள்ளவல்ல" என்று ப்ராப்பமும் ப்ராபகமும்

---

ப்ரத்யுபகாரமில்லாமைக்கு சாஸ்த்ரம் காட்டினவநந்தரம் உபபத்தியும் காட்டுகிறார் (அவஃரிவனுக்கித்யாதி). துர்க்கதிகண்டு உபதேசிக்கைக்கு உபபத்தியும் காட்டுகிறார் (ஒருவனித்யாதி). (அகம்) க்ருஹம்.

சங்காஸமாதாநபூர்வகம் எடுத்த ப்ரதிகத்துக்குத் தாத்பர்யம் (தலைக்கித்யாதி). ஸ்வப்ரயோஜநமில்லாதே போனாலும் அவன் ப்ரயோஜநமானாலும் ஸித்திக்கவேண்டுவதொன்றுண்டே என்று சங்கைக்குக்கருத்து. செயல்நன்றாகவென்றது ஸாமாந்யமாக இருக்கையாலே, ஆழ்வாருடைய செயலாலேயென்று கீழருளிச்செய்து, இவன்செயலை நன்றாகப்பண்ணி யென்றர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (இவன் செயல்தானித்யாதி.)

திருத்தியென்றதுக்குத் திருந்தாதவரையும் திருத்தியென்றாய், வ்யாவர்த்ய பூர்வகமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தீர்ந்தவித்யாதி

---

/ திருவாய் 3-5-11.

தானே என்றத்யவஸித்திருக்குமவர்களுடைய விரோதியைப்போக்கி அடிமை கொள்ளுமவனென்றதிறே ஸர்வேச்வரனே; அங்ஙனன்றிக்கே இவையொன்றுமின்றிக்கே இருக்குமவர்களேயும் திருத்திப் பணிகொள்ளுமவரிறே ஆழ்வார்; "பணிகொள்வான்-குருகூர்நம்பி" என்றந்வயம்.

"குயில்நின்றார் பொழில்சூழ்" என்றவிடம் திருத்திப்பணி கொள்ளும்படிக்கு த்ருஷ்டாந்தம். இவர் ஒரு காலத்திலே ஆற்றாமையாலே /"காணவாராய்" என்று கூப்பிடுவதுமொரு பாசுரமுண்டு; ‡"யாவர்நிகரகல்வானத்தே" என்று களித்துச் சொல்லுவதுமொரு பாசுரமுண்டு; இவர் பாசுரத்தைக் கேட்ட குயில்களும் செவியேற்றாலே இப்பாசுரத்தையே சொல்லும். ஆக இரண்டு பாசுரத்துக்கும் குயில்களாய்த்துப் பயிற்றுவன. (குருகூர் நம்பி) §"ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல்" என்று சேதநரளவன்றிக்கே திர்யக்குக்களளவும் ஏறும்படியாய்த்து ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது.

(முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே) உன்னுடைய ச்லாக்யமான திருவடிகளுக்கன்பையே, முயல்கின்றேன்—அர்த்தியாநின்றேன். செய்கிறவடிமையில் பர்யாப்திபிறவாமையாலே திருவடி

வாக்யத்வயத்தாலே). (இவையொன்றுமின்றிக்கே) என்றது ப்ராப்யம் அவனேயென்றும், ப்ராபகம் அவனேயென்றும் சொல்லுகிற அத்யவஸாயங்களின்றிக்கே என்றபடி. கொள்வானென்றது கொள்ளுகைக்காக வென்று போராமைக்காக அந்வயம் காட்டுகிறார் (பணிகொள்வானித்யாதி). (செவியேற்றாலே) செவியின்வழியாலே. (பயிற்றுகை) அப்யஸித்துச் சொல்லுகை.

நம்பி பததாத்பர்யம் (ஊருமித்யாதி). மொய்-ச்லாக்யதை; "கழற்கு" என்றது ஸம்பந்தஸாமான்யஷஷ்டியாய், விஷய விஷயீபாவத்தையிட்டுத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (செய்கிறவித்யாதி). முன்பே அபிநிவேச

/ திருவாய் 8 5-2. ‡ திருவாய் 4-5-8. § திருவாய் 6 7-2.

களிலே எனக்கபிநிவேசம் வேணுமென்று அர்த்திக்கிறார். §"என்னைத்தீமனம் கெடுத்தாயுனக்கென் செய்கேன்" என்று ஆழ்வார் தாம் அவ்விஷயத்திலே தடுமாறினாப்போலே ஆழ்வார் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறுகிறார்.

பத்தாம்பாட்டுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

முண்டாயிருக்க, இவர் புந: அதைப்ரார்த்திப்பானென்னென்ன அருளிச் செய்கிறார் (என்னைத்தீமனம் கெடுத்தாயித்யாதி).

பத்தாம்பாட்டுக்கு பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாந அரும்பதம் முற்றிற்று.



§ திருவாய் 2-7-8.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம்

—0000—

அவ:—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) கீழ் ப்ரபந்தத்திலோடின தாத்பர்யம் ஆழ்வாருடைய ஸர்வப்ரகார வைலக்ஷண்யமும் இப்படி விலக்ஷணரான ஆழ்வார் தம்பக்கல் பண்ணின உபகாரவைபவமுமிறே; தம்முடைய தோஷத்துக்கு எதிர்த்தட்டான ஆழ்வார் வைலக்ஷண்யமும், தம்முடைய குறைக்கெதிர்த்தட்டான உபகாரகத்வமும் இவ்விரண்டையும் சொல்லிக்கொண்டு போந்தார்கீழ்.

இப்பாட்டில் அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமையாலே தெகுடாடுகிறார். "வேதத்தினுட்பொருள் நிற்கப் பாடியென்னெஞ்சுள் நிறுத்தினான்" 188 "यो मा ददाति स इ देव मावाः" (யோ மா ததாதி ஸ இ தேவமாவா:) என்று முமுக்ஷுதசையோடு முக்ததசையோடு வாசியற உபகாரஸ்ம்ருதி நடக்குமதுபோக்கி ப்ரத்யுபகாரம் பண்ணித் தலைக்கட்டப் போகாதிறே.

---

அரு:—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) (ஸர்வப்ரகாரவைலக்ஷண்யம்) என்றது-ப்ராப்யத்வம், ப்ராபகத்வம், ஜ்ஞாநப்ரதத்வம், தோஷப்ரதிபடத்வம் முதலான வைலக்ஷண்யமென்றபடி. கீழில்ப்ரபந்தத்திலோடின தாத்பர்ய மென்று துடங்கி அருளிச்செய்த வாக்யத்தை விவரிக்கிறார் (தம்முடைய தோஷத்துக் கெதிர்த்தட்டான வென்று துடங்கி), (தெகுடாடுகிறார்) என்றது-தடுமாறுகிறாரென்றபடி. தெகுடாடுகிறதென்? ப்ரத்யுபகாரம் பண்ணிவிடுகிறதுக் கென்னென்ன, § "எதுவுமொன்றுமில்லை செய்வதங்குமிங்கே" என்கிறபடியே முமுக்ஷுதசையோடு முக்ததசையோடு வாசியற ப்ரத்யுபகாரம் பண்ணித் தலைக்கட்டப்போகாதென்கிறார் (வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி யென்று துடங்கி). வேதத்தினுட்பொருளென்றது-முமுக்ஷுதசை. "ஸஇதேவமாவா:" என்றது-முக்ததசை, இந்த ச்ருதிக்குப்பொருளாவது-யா-யாதொரு ஆசார்யன், மா-என்னை, ததாதி-சேஷத்வஜ்ஞானத்தை உண்டாக்கி ஈச்வரன் பொருட்டு ஸமர்ப்பிக்கிறான், ஸஇ-ஸஏவ-அவனே, தேவ:- பரதேவதை.

---

§ திருவாய் 7-6-10.

ப்ரத்யுபகார நிரபேக்ஷத்வம் ஆசார்யலக்ஷணமாய், ப்ரத் யுபகாரஸாபேக்ஷத்வம் ஶிஷ்யலக்ஷணமாகையாலே அதுக்கு வழி தேடிக்காணாமையாலே அலமருகிறார். உபகாரம் அதுக்கு ப்ரத் யுபகாரம் தேடுகையிலேமூட்டும். உபகாரகௌரவம் ப்ரத்யுப காரமில்லாதபடி பண்ணும்; அதுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரமாக வேணுமே; அதுண்டாகிலிறே இவன் பண்ணலாவது; இனி என்னைச் செய்வோமென்கிற தலைசீய்ப்போடே காலம்போக்கு மித்தனை; இவன் திருத்தித்தருகையாலே பகவத்விஷயத்துக்கு ஆத்மஸமர்ப்பணம் பண்ணலாம்; இவன்றானே திருத்தினவற்றை இவனுக்குக் கொடுக்கை ஸத்ருஶமன்றே.

வ்யா:—(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) 189 "धर्मार्थौ यत्र न स्यातां शुश्रूषा वा तथाविधा। तत्र विद्या न † वक्तव्या" (தர்மார்த்தௌ யத்ர ந ஸ்யாதாம் ஶுச்ருஷா வா ததாவிதா। தத்ர வித்யா ந † வக்தவ்யா) என்கிறபடியே தர்மார்த்தரூபமான ப்ரயோஜநமாதல், "ஶுச்ருஷா வா" என்கிற அதிகாரமாதல் எனக்கின்றிக்கே யிருக்கச்செய்தேயும் அத்ருஷ்ட ப்ரயோஜநமாதல், த்ருஷ்ட ப்ரயோஜநமாதலின்றிக்கேயிருக்கச்செய்தேயும், பகவத் ப்ரிய

ப்ரத்யுபகாரம் பண்ணசக்யமில்லாவிட்டால், வெறுமனேயிருக்கிறதுக் கென்னென்ன, ப்ரத்யுபகார ஸாபேக்ஷத்வம் சிஷ்யலக்ஷணமாகையாலே வெறுமனேயிருக்கப் போகாதென்கிறார் (ப்ரத்யுபகார நிரபேக்ஷத்வமென்று துடங்கி). உபகாரகௌரவம் ப்ரத்யுபகாரமில்லாதபடி பண்ணுகிறதென் னென்ன அருளிச்செய்கிறார் (அதுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரமாக வேணு மென்றுதுடங்கி.) (தலைசீய்ப்போடே) என்றது சிர:கம்பத்தோடேயென்ற படி. §"உதவிக் கைம்மாறென்னுயிர்" என்று ஆத்மாவை ப்ரத்யுபகார மாக ஸமர்ப்பித்தாலோவென்ன அருளிச்செய்கிறார் (இவன் திருத்தித் தருகையாலே என்றுதுடங்கி).

பயனென்று தர்மார்த்தங்களைச் சொல்லுகிறது. பாங்கென்று சுச்ரூஷையைச் சொல்லுகிறது. தர்மார்த்தரூபமான ப்ரயோஜநமாத லென்ற வாக்யத்தை விவரிக்கிறார் (அத்ருஷ்ட ப்ரயோஜநமாதலென்று துடங்கி). (அத்ருஷ்ட ப்ரயோஜநம்) தர்மம். (த்ருஷ்ட ப்ரயோஜநம்) அர்த்தம்.

†(பா) வக்தவ்யா § திருவாய் 7-6-10.

ஷித்திக்காதல், பகவத்ஸமாராதந ஶேஷமாக இவன் பக்கலுண்டான த்ரவ்யஷித்திக்காதல், அன்றிக்கே அவனுடைய ஶுச்ரூஷையாகிற அதிகாரபூர்த்தி கண்டாதலிறே பகவத் விஷயத்தை உபதேஶிக்கைக்கு யோக்யதையுள்ளது. 190 "अर्थदो धर्मदः शुश्रुषुरध्याप्यः'' (அர்த்ததோ தர்மத: ஶுச்ரூஷுரத்யாப்ய:) என்கிறபடியே. நிரவதிகவத்ஸலனானவனும் 191 "शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नं'' (ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்) என்றபின்பிறே உபதேஶ ப்ரவர்த்தகனாய்த்து; இவர் அப்படியன்றிக்கே துர்க்கதியே பற்றாசாகவிறே உபதேஶிக்கது. புன்மையாகக் கருதினதே பற்றாசாகவாய்த்து இவர் அந்யாயத்தனாய்த்து; இத்தலையில் ஒரு நன்மை பார்க்கவேண்டிற்றில்லை புன்மையாகிற துர்க்கதி.

ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பிறருடைய துர்க்கதியே பற்றாசாகவாய்த்து ஸத்துக்கள் உபதேசிப்பது. 192 "श्रूयतां परमार्थो मे दैतेया दनुजात्मजाः। न चान्यथैतन्मन्तव्यं नात्र लोभादि

---

இந்தவாக்யத்வயத்தையும் விவரிக்கிறார் (பகவத் ப்ரியஶித்திக்காத லென்று துடங்கி வாக்யத்வயத்தாலே). தர்மமாவது திருவாராதநத்துக்கு உபகரணமான திருமஞ்சனம், திருப்பளித்தாமம் தொடக்கமானவற்றை ஸமர்ப்பிக்கை. இதனாலே பகவத் ப்ரீதியுண்டாமென்றபடி; தர்மார்த்த சுச்ரூஷைகளைப் பண்ணினவனுக்கே உபதேசிக்க யோக்யதையுள்ளதென்ற துக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (அர்த்தத: என்று துடங்கி). (அத்யாப்ய:) அத்யயநம் பண்ணுவிக்கப்படுமவன்.

இவர் துர்க்கதியே பற்றாசாக உபதேசித்தாரோவென்ன அருளிச் செய்கிறார் (புன்மையாகக்கருதினதே என்றுதுடங்கி) ஏதாவுமொரு நன்மைகண்டு உபதேசிக்கவேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (இத் தலையிலே ஒரு நன்மை என்றுதுடங்கி). ஸத்புருஷர்களுபதேசிக்கிறதெல்லா மிப்படியே என்கிறார் (ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகவென்றுதொடங்கி). இப்படி துர்க்கதியே பற்றாசாக உபதேசித்தாருண்டோ என்னவருளிச் செய்கிறார் (ச்ரூயதாமித்யாதி). "ஏதத் - இந்த உபதேசிக்கிறவர்த்தம், அந்யதா-ப்ராந்திமூலமென்று, நமந்தவ்யம்-நினைக்கப்படுமதன்று" என்று சப்தார்த்தம்; "தநுஜாத்மஜா:" என்று அஸுரஸம்பந்தம் சொல்லுகை யாலே அவர்களுடைய துர்க்கதி தோற்றுகிறது.

कारणं'' (ச்ரூயதாம் பரமார்த்தோ மே தைதேயா தநுஜாத்மஜா:। நசாந்யதைத தந்மந்தவ்யம் நாத்ர லோபாதி காரணம்) என்கிறபடியே. "நாத்ர லோபாதி காரணம்" என்கிறவிடம் ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷத்வம். "தநுஜாத்மஜா:" என்கிற ஆஸுர ஸம்பந்தம்—பிறருடைய துர்க்கதி; "ச்ரூயதாம்" என்கிறவிடம் உபதேசம். "பரமார்த்த:" என்கிறவிடம்-உபதேஷ்டவ்யமான அர்த்தகௌரவம். "மே" என்கிறவிடம்— உபதேஷ்டாவினுடைய ஆப்திபூர்த்தி.

(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) நிஷ்பலமேயாகிலும் அநதிகாரிகளேயாகிலும். (செயல்நன்றாகத்திருத்தி) அநுஷ்டாந பர்யந்தமாகவுபதேசித்துத் திருத்தினார்; என்னளவன்றியிலே தம்முடையவளவிலே உபதேசித்தார். க்ஷத்ரபந்துவுக்கும் துர்க்கதியே பற்றாசாக வைஷ்ணவனுபதேசித்தவிடத்திலும் காலாந்தரத்திலேயிறே அவனுக்குப்பலித்தது. இவர், ஊரும்நாடும்உலகமும் தன்னைப் போலே யாக்குமவராகையாலே செயல் நன்றாகத்திருத்தினார்.

(செயல்நன்றாகத்திருத்தி) இவருபதேசித்த அர்த்தம் என் நெஞ்சிலேபட்டு அதுதான் அத்யவஸாயபர்யந்தமாய் அவ்வளவன்றிக்கே அநுஷ்டாநசேஷமாய் அவ்வநுஷ்டாநந்தான் ஸதஸதநுஷ்டாநமிச்ரமாகையன்றிக்கே ஸதநுஷ்டாநமேயாம்படி திருத்தினார். முற்படச்ரவணமும், ச்ருதமானவர்த்தத்தில் மநநமும், மதமான வர்த்தத்தில் மஹாவிச்வாஸமும், விச்வஸ்தமான அர்த்

---

(செயல்நன்றாகத்திருத்தி) நன்றான செயலுண்டாம்படி திருத்தியென்றந்வயித்தர்த்தம். அதாவது அநுஷ்டாநபர்யந்தமாக உபதேசித்துத் திருத்தினுனென்றபடி. (என்னளவிலன்றியிலே தம்முடையவளவிலே) என்றது என்னுடைய புன்மையைப் பாராதே தம்முடைய வைபவத்துக் கநுகுணமாகவென்றபடி; ஸமயத்திலே அநுஷ்டாநபர்யந்தமாக்த் திருத்துகையாலே ஆழ்வாருடைய உபதேச வைபவாதிசயம் சொல்லப் பட்டதென்கிறார் (க்ஷத்ரபந்துவுக்கென்றுதொடங்கி).

நன்றாகத்திருத்தின ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (இவருபதேசித்த அர்த்தமென்னெஞ்சிலென்று துடங்கி), இத்தை விவரிக்கிறார் (முற்பட

தத்தில் அநுஷ்டாநமும், அதில் அஸகநுஷ்டாநம் கலசாதே ஸகநுஷ்டாநமேயாய்ப் போருகையுமிறே செயல்நன்றாகத் திருத்துகையாவது. (திருத்தி) இவற்றில் என்கையில் என்னைக்காட்டிக்கொடாதே, தாமே கைத்தொடராய் நின்று இவ்வவஸ்தாபந்நமாக்கினர்.

(பணிகொள்வான்) பகவத் பாகவதவிஷயங்களில் கிஞ்சித்காரத்திலே மூட்டினர். திருத்தினபலம் விநியோகம் கொள்ள வேணுமே; இவரும் அவருக்கு உகப்பாகவாய்த்து பகவத்பாகவத விஷயங்களுக்கு அடிமை செய்வது. பகவத்கிஞ்சித்காரமும் வேணும். ஆசார்யகிஞ்சித்காரமும் வேணும்; வைஷ்ணவகிஞ்சித்காரமும் வேணும்; பகவத்பாகவத விஷயங்களுக்கு அடிமை செய்யும்-ஆசார்யனுக்குப்ரியமாக; பகவத்பாகவத விஷயமிரண்டு முகக்கைக்கு ஆசார்யனுக்கு அடிமைசெய்யும்.

பதத்ரய நிஷ்டையைப்போலே கிஞ்சித்காரத்ரயமும் இவனுக்கு அபேக்ஷிதமாயிருக்கும்; ஸ்வரூபம் பகவத் கிஞ்சித்காரத்திலே மூட்டும். பகவத்ப்ரீதி பாகவத கிஞ்சித்காரத்திலே மூட்டும்.

---

ச்ரவணமுமென்று துடங்கி). (கைத்தொடராயென்றது) தாமேயேறிட்டுக் கொண்டு செய்தாரென்றபடி.

தம்மைத் திருத்தின ஆழ்வார் திருவடிகளில் கைங்கர்யமே ப்ராப்யமென்றிருக்கிறவர் பகவத்பாகவத விஷயங்களிலே கைங்கர்யம் பண்ணுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவரும் அவருக்கு உகப்பாகவாய்த்தென்று துடங்கி). பகவத்பாகவத விஷயங்களில் கைங்கர்யம் செய்யும் க்ரமமென்னென்ன அருளிச்செய்கிறாராதல், பகவத்பாகவத விஷயங்களில் கைங்கர்யம் பண்ணும் ப்ரகாரத்தைப் பின்னையுமொரு ப்ரகாரத்தாலே அருளிச்செய்கிறாராதல் (ஸ்வரூபம் கிஞ்சித்காரத்திலே மூட்டுமென்று துடங்கி). (ஸ்வரூபம்) சேஷத்வம். 192* "नाकिञ्चित्कुर्वतः शेषत्वं" (நாகிஞ்சித்குர்வதச்சேஷத்வம்) என்கையாலே சேஷத்வம் கைங்கர்யத்திலே மூட்டுமென்றபடி.

(இவ்யக்தித்வயம்) என்றது பகவத்பாகவதர்களை; பாகவதப்ரீதியும் உபகாரஸ்ம்ருதியால் வந்த தன்னுடைய ப்ரீதியும் ஆசார்ய கிஞ்சித்காரத்திலே

பாகவதப்ரீதியும் இவ்வ்யக்தித்வயத்தினுடைய வைபவத்தையுப தேஶித்த உபகாரஸ்ம்ருதியால் வந்தவிவன்றன்னுடைய ப்ரீதியும் ஆசார்ய கிஞ்சித்காரத்திலே மூட்டும். இப்படி ஒன்றுக்கொன்று ப்ரவர்த்தகமாயாய்த்து மூன்று விஷயமுமிருப்பது. இதிலொன்று நிருபாதிக ஸம்பந்தம். மற்றவையிரண்டும் ஸோபாதிகஸம்பந்தம். அதிலொன்று உத்தேச்யதை உபாதியாகப்பிறக்கும். ஒன்று உப காரகத்வோபாதியாகப் பிறக்கும்.

(பயனித்யாதி) அநதிகாரியான என்னை அதிகாரத்தின் மேலெல்லையிலே நிறுத்தி, நிஷ்பலனான என்னை பகவத் பாகவத கைங்கர்யத்திலே அந்வயிப்பித்துத்தாம் அருளின் ப்ரயோஜநம் கொண்டார். (பயனித்யாதி) அவன், § தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளுமித்தனை; இவர் கருந்தரையிலே திருத்து மவராய்த்து. அவன் அதிகார நிஷ்பத்திபிறந்தால் ப்ராப்ய விரோதிகளைப் போக்கிப்பணிகொள்ளும். அவ்வதிகாரநிஷ்பத்தி தன்னையும் கொடுத்தாய்த்து இவர் அடிமைகொண்டது. அதிகார நிஷ்பத்தி ஆசார்யனாலே. புருஷார்த்தநிஷ்பத்தி ஈச்வரனாலே.

---

மூட்டுமென்றபடி. (இதிலொன்று நிருபாதிகம்) என்றது-பகவத்விஷயம். (இரண்டும்) என்றது-பாகவதாசார்யர்களை. இரண்டிலும் வைத்துக்கொண்டு பாகவத விஷயத்தில் கைங்கர்யம்-ததீயத்வப்ரயுக்த உத்தேச்யதாரூப உபாதியாகப்பிறக்கும்; ததீயத்வமாகிற உபாதியாலே பாகவதவிஷயத்தில் கிஞ்சித்காரம் பண்ணுகிறதென்றபடி. ஆசார்ய விஷயத்தில் கைங்கர்யம்-உபகாரகத்வோபாதியாகப் பிறக்கும். அதாவது-ஆசார்ய விஷயத்தில் கைங்கர்யம் பண்ணுகிறது-உபகாரகத்வமாகிற உபாதியாலென்றபடி.; பாங்கலராகிலுமென்று-சுச்ரூஷையாகிற அதிகாரமில்லாதிருக்கிறவென்னை. செயல் நன்றாகத்திருத்தியென்று-அதிகாரத்தின்மேலெல்லையிலே நிறுத்தினா ரென்றும், பயனன்றாகிலுமென்று நிஷ்பலனானவென்னை, பணிகொள்வா னென்று- பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயிப்பித்தாரென்றும்கண்டு கொள்வது.

"அவன் தீர்ந்த வடியவர்தம்மை" என்று துடங்கியருளிச் செய்த வாக்யத்வயத்தை விவரிக்கிறார் (அவன் அதிகாரநிஷ்பத்திபிறந்தாலென்று துடங்கி). அதிகாரநிஷ்பத்தி ஆழ்வாராலே உண்டாயிற்றேவென்னவருளிச்

---

§ திருவாய் 3-5-11.

அதிகாரமாவது ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் புரையறுதியாகையாலே, செயல்நன்றாகத் திருத்தியென்று அவராலேயிறே இவருக்கு உண்டாய்த்து.

இவனைத் தன்னுபதேசத்தாலே வெளிச்செறிப்பித்து, தானநுஷ்டித்துக்காட்டி, தன்னில்விஞ்சின அநுஷ்டாநம் இவன் கையிலே கண்டாலாய்த்து அவன் இவனை பகவத்பாகவத கிஞ்சித்காரயோக்யனென்றறுதியிடுவது. /[ஆர்ந்தபுகழச்சுதன்] இவ்வளவிலே புகழ்படைத்து, பற்றினாரை விடாதவனென்கிற பட்டப்பெயரும் பெற்றாய்த்து அவனிருக்கிறது.

(பணிகொள்வான் குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி) பணிகொள்ளுமவராய்த் திருநகரிக்கு நிர்வாஹகரானவரே என்று ஸம்புத்தி. (குயிலித்யாதி) அசேதநமான பக்ஷிஜாதமடைய ஆழ்வார் பரிஸரத்திலே திருந்தி திருவாய்மொழி பாடக்கற்றுப் பாடாநின்

---

செய்கிறார் (அதிகாரமாவ தென்றுதொடங்கி), (புரையறுகிறது) என்றது-பொங்கியற்றதென்றபடி.

நன்றானசெயலுண்டாம்படி திருத்தினாரென்றார்கீழ்; அன்றிக்கே தம்முடைய செயலாலே நன்றாகத்திருத்தினாரென்கிற அர்த்தாந்தரத்தை ஸூசிப்பிக்கிறார் (இவனைத்தன்னுபதேசத்தாலே வெளிச்செறிப்பித் தென்று தொடங்கி) (தானநுஷ்டித்துக்காட்டி) என்கையாலே தம்முடைய செயலால் திருத்தினாரென்கிற அர்த்தம்தோன்றுகிறது. இப்படி அறுதியிட்டிருப்பர் என்கிறதுக்கு ஜ்ஞாபகமேதென்னவருளிச்செய்கிறார் (ஆர்ந்தபுகழென்று தொடங்கி). (இவ்வளவிலே) என்றது-ஆழ்வார் அதிகார நிஷ்பத்தியுண்டாக்கிக் கிஞ்சித்காரயோக்யனாம்படி பண்ணினவநந்தரம், ப்ராப்தி விரோதிகளைப்போக்கிக் கைங்கர்யத்தைக்கொண்ட மாத்ரத்திலே என்றபடி. "தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல" என்கிறவாக்யசேஷத்தினுடைய தாத்பர்யத்தை, "ஆர்ந்தபுகழச்சுதன்" என்று பதோபாதாநம்பண்ணி அருளிச்செய்கிறார் (இவ்வளவிலே புகழ்படைத் தென்று தொடங்கி). (பணிகொள்வான்)என்றது-துமுலன்றிக்கே ஸம்புத்தி; ஆலுதல்-ஆடலும், ஒலியுமாகுமென்றான் தமிழன். இவ்விடத்தில்-ஆலுகையென்று-பாடுகையைச் சொல்லுகிறது.

---

/ திருவாய் 3-5-11.

ருல் சேதநனை நான் திருந்தச் சொல்லவேணுமோ? ஶாகாஸம்பந்தமுண்டாகையாலே அக்குயில்கள் திருவாய்மொழியையாய்த்து பாடுவது. அவை * பாடும்குயில்களாகையாலே தம்பிரான்மாரைப் போலே ஆழ்வாருக்குத் திருவாய்மொழி பாடுவனவாய்த்து; ஒரு தேஶஸம்பந்தத்தாலே * செவ்வாய்க்கிளி நான்மறைபாடுமாகில் இத்தேஶவர்த்திகளுக்குத் திருவாய்மொழிபாடச் சொல்லவேண்டா விறே. தாம் மதுரவாக்காகையாலே மதுரவாக்கான குயிலையிட்டுப் பொழிலைச் சிறப்பிக்கிருர்.

(குருகூர்நம்பி) ப்ரத்யுபகாரநிரபேக்ஷதைக்கடியான பூர்த்தியை யுடையவரே! பகவத்கிஞ்சித்காரத்துக்கு த்வாரம்பெறிலும் ஆசார்ய

---

(சாகாஸம்பந்தம்) என்றது-சாடு. ஸஹஸ்ரசாகாஸம்பந்தம் அர்த்தம்; கொம்பு-த்வநி. ‡ ''பாடும் குயில்காள்'' என்று பாடுகை அவற்றுக்குநிருபகமாக நாய்ச்சியாரருளிச்செய்கையாலே, விண்ணப்பம் செய்வார் முன்னே இரண்டுபேர் ஸேவிக்கச்சிறிது விண்ணப்பம் செய்வார் அத்தை அநுவதிக்குமாபோலே, ஆழ்வார் முன்னே திருவாய்மொழியை முன்னுரு அநுஸந்திக்க, பின்னுருபாடுமவையாயிற்றுக் குயில்கள். பக்ஷிகள், பாடக்கூடுமோவென்ன அருளிச்செய்கிருர் (ஒரு தேசஸம்பந்தத்தாலேயென்று துடங்கி). சோலைக்கதிசயம் சொல்லுமிடத்தில், † ''குன்றுமதுமலர்ச்சோலை'' என்றும், § ''கொங்கார்பூஞ்சோலை'' என்றும், / ''வண்டினமுரலும்சோலை'' என்றும் சொல்லுகிறபடியே, இங்ஙனே ஓரதிசயத்தை இட்டருளிச் செய்யாதே ¶ ''குயிலாலும் வளர்பொழில்சூழ்'' என்னுமாபோலே ''குயில் நின்ருர் பொழில்சூழ்'' என்றருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமேதென்ன அருளிச்செய்கிருர் (தாம் மதுரவாக்காகையாலே என்றுதுடங்கி). (சிறப்பிக் கிருர்) என்றது அதிசயத்தையுண்டாக்குகிருர் என்றபடி.

(த்வாரம் பெறிலும்) என்றது அவாப்த ஸமஸ்த காமனுகையாலே ஈச்வரனுக்குக் கிஞ்சித்காரம் பண்ணக்கூடாது. இங்ஙனேயிருக்கச்செய்தேயும் 193 ''सापेक्ष इव चेष्टते'' (ஸாபேக்ஷ இவ சேஷ்டதே) என்று அர்ச்சாவதார வைபவம் சொல்லுகிறவிடத்திலருளிச் செய்கையாலே, அர்ச்சாவதாரத்தில் ஸாபேக்ஷதை உண்டாகையாலே கிஞ்சித்காரத்துக்கு வழியுண்டென்றபடி. அங்குக்கூடிலும் ஆசார்ய கிஞ்சித்காரத்துக்கு

---

‡ நாச்-திரு 10-5. † திருவெழுகூற். § / திருமாலை 14.
¶ பெரியதிரு 3 6-8.

கிஞ்சித்காரத்துக்கு த்வாரமில்லை. இவன் த்ருஷ்டத்தைக் கர்மத்தின் கையிலே பொகட்டு அத்ருஷ்டத்தை ஈச்வரன்கையிலே பொகட்டிருக்குமவனிறே.

(உன்றன் மொய்கழற்கன்பையே-முயல்கின்றேன்) உன்னுடைய பரமபோக்யமான திருவடிகளிலுண்டான ஸ்நேஹமடியாக ப்ரத்யுபகாரம்தேடி உத்ஸாஹியாநின்றேன். இவ்வுத்ஸாஹத்துக்கு மேற்பட ப்ரத்யுபகாரம் பண்ணுகைக்கு விரகில்லையே; அவர்தாம் §"உனக்கென்செய்கேன்" என்பது, ‡"அப்பனுக்கெதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே" என்றாப்போலே.

(மொய்கழல்) ||"மொய்கழலே யேத்தமுயல்" என்று ஆழ்வார் அவ்விஷயத்தையருளிச் செய்யக்கேட்டுப்போந்த வாஸனையாலே, இங்கும் மொய்கழலென்கிறார். கீழே, அவன் பொன்னடியென்று-ஆழ்வார் திருவடிகளின் பாவநத்வம் சொன்னார். இங்கே போக்யதை சொல்லுகிறார். வகுளாபிராமமாய் ஸ்ரீமத்தாயிறே ஆழ்வார் திருவடிகளிருப்பது. (மொய்கழற்கன்பையே) இத்திருவடிகளின் போக்யதை அன்பைக்கொடுத்தது. அன்பு ப்ரத்யுபகாரத்திலே மூட்டிற்று. அதுக்கு இடம் காணாமையாலே அலமராநின்றேன்; இவ்வலமாப்பு யாவச்சைதந்யமிறே.

பத்தாம்பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம் முற்றிற்று.

---

த்வாரமில்லை, இல்லாமைக்கு ஹேதுவேதென்னவருளிச்செய்கிறார். (இவன் த்ருஷ்டத்தையென்று துடங்கி). அன்பையென்றதை அன்பாலேயென்று த்ருதியையாக்கி, அந்வயித்துக் கொள்வது. (உத்ஸாஹியா நின்றேன்) உத்யோகியா நின்றேனென்றபடி.

உத்யோகிக்கிறது என்செய்கைக்கென்ன அருளிச்செய்கிறார் (மொய் கழலேயேத்த முயலென்றுதுடங்கி), அப்படி போக்யமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (வகுளாபிராமமாயென்றுதுடங்கி). (மொய்) அழகு. (அலமாவாநின்றேனென்றது உத்யோகத்துக்கு மேற்படச் செய்யப் போகாமையாலே அலமாவாநின்றேனென்றபடி. "முயல்கின்றேன்" என்ற வர்த்தமாநத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (இவ்வலமாப்பு யாவச்சைதந்யமிறே) என்று.

பத்தாம்பாட்டுக்கு அரும்பதம் முற்றிற்று.

---

§ திருவாய் 2-7-8. ‡ திருவாய் 7 9-10. || பெரியதிருவ-87.

## பதினோராம்பாட்டு

11. அன்பன்றன்னை யடைந்தவர்கட்கெல்லா
மன்பன் தென்குருகூர்நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவிசோன்னசோல்
நம்புவார் பதி வைகுந்தம்காண்மினே.

பதவுரை:—அன்பன் தன்னை—*ஆச்ரித பக்ஷபாதியான எம்பெருமானை,* அடைந்தவர்கட்கு எல்லாம் — *ஆச்ரயித்தவர்களான ஸகல பாகவதர் பக்கலிலும்,* அன்பன் — *பக்தியையுடையரான,* தேன் குருகூர் நகர் நம்பிக்கு—*நம்மாழ்வார் விஷயத்திலே,* அன்பன் ஆய்—*பக்தனாயிருந்துகொண்டு,* மதுரகவி சோன்ன சோல்—*மதுரகவி அருளிச்செய்த இத்திவ்வியப் பிரபந்தத்தை,* நம்புவார்—*தங்களுக்குத் தஞ்சமாக) விச்வஸித்திருப்பவர்களுக்கு,* பதி—*வாஸஸ்தாநமாவது,* வைகுந்தம் காண்மின்—*பரமபதமாம்.*

---

## நஞ்சீயர் வ்யாக்யாநம்

*நிகமத்தில், இவரருளிச்செய்த ப்ரபந்தத்தைக் கற்றார்க்கு ஆழ்வாரானை பரிமாறும் ஸ்ரீவைகுண்டமே தேசமென்கிறார்.*

*(அன்பனித்யாதி) ஈச்வரத்வமன்று ஸ்வரூபம். எம்பெருமான் இருந்ததேகுடியாக எல்லாருக்கு மொருதலையாயிருக்கை.* 194 **"रिपूणामपि वत्सल:"** (ரிபூணமபி வத்ஸல:)*என்கிறபடியே.(தன்னையடைந்த வரித்யாதி) ஏவங்குண விசிஷ்டனான எம்பெருமானை ஆச்ரயித்தார்க்கெல்லாமன்பராயிருக்கை ஆழ்வாருக்கு ஸ்வரூபம். தந்தாம் ஸத்தையிலே யன்றோ எல்லாரும் ஸ்நேஹிப்பது.*

*(தென்குருகூரித்யாதி) ஆழ்வாருக்கே அன்பராய் இருக்கை ஸ்ரீமதுரகவிகளுக்கு ஸ்வரூபம். ப்ரீதிப்ரேரிதராய்க்காணும் சொல்லிற்று. தாம் காணவந்த சோழரோபாதி. ப்ரீதிகாணும் சொல்லுவித்தது. இவர் § "முன்சொல்லும்" என்பது ப்ரீதியைக்காணும்.*

*(நம்புவாரித்யாதி) இது கற்றார்க்கு வாஸஸ்தாநம் கலங்காப் பெருநகரான பரமபதம்; இது வ்யாஹதபாஷணமாயிருந்ததீ. ஆழ்வாரை*

---

§ *திருவாய்* 7-9-2.

ப்ராப்யமாகச் சொன்னுல் திருநகரியே ப்ராப்யதேசமாக வேண்டாவோ வென்னில்; திருநகரியிலே பொலிந்து நின்ற பிரானுனையும் ஆழ்வாரானையும் கூடச்செல்லுவது. § "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ?" என்கிறபடியே ஆழ்வாரானையொன்றுமேயாய்த்து அங்குச்செல்லுவது.

சேதநனுக்கு ப்ராதிகூல்யத்தில் நின்றும் நிவ்ருத்தனுனேனென்று தோற்றும்போது ஈச்வரன்பக்கல் ஸ்நேஹித்திருக்க வடுக்கும். ஈச்வரன் பக்கல் ஸ்நேஹித்திருக்கையாவது-அவனடியாரளவும் ஸ்நேஹித்திருக்கை. அவர்களெல்லாருக்கும் ப்ரியம் செய்கையாவது - ஜ்ஞாநப்ரதன் பக்கலிலே ஸ்நேஹித்திருக்கையிறே. ஆகையாலே திருநாட்டை ப்ராப்யமாகச் சொல்லிற்று.

அதவா; நம்புவாரிருந்தவிடமே வைகுந்த மென்னவுமாம் - திருநாடென்றும் லீலாவிபூதியென்றும் விபாகமில்லையோவென்ன, நம்பிதிருவழுதி வளநாடுதாஸர் வார்த்தை,- "கூரத்தாழ்வான் மகன் பிறந்தபின்பு இடைச் சுவர் தள்ளி ஒரு போகியாய்த்துக்காண்" என்று பணித்தான்.

நஞ்சீயர் வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.
நஞ்சீயர் திருவடிகளே சரணம்.

# நம்பிள்ளை ஈடு

நிகமத்தில், (அன்பன்றன்னை) இவர் ப்ரபந்தத்தைத் தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வாஸபூமி பரமபதமென்கிறுர்.

(அன்பன்) வாத்ஸல்யத்தை நிரூபகமாகவுடையவன்; இவனுடைய வாத்ஸல்யம் 194 **"रिपूणामपि वत्सलः"**(ரிபூணுமபி வத்ஸல:) என்கிறபடியே ஸர்வவிஷயமாயாய்த்திருப்பது; அதுக்கடி 195 **"देवानां दानवानाञ्च सामान्यमधिदैवतं"** (தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்) என்று ஸம்பந்தம் பொதுவாயிருக்கையாலே. (தன்னையடைந்தவர்கட்கெல்லாமன்பன்) ஆழ்வாருடையவன்பு அங்ஙன் பொதுவாயன்றுய்த்திருப்பது. † "பரமனைப் பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கண்டீர் எம்மையாளும் பரமர்" என்றிறேயிருப்பது.

---

§ திருவிரு-75. † திருவாய் 3-7-1.

(தென்குருகூர்நகர் நம்பிக்கு அன்பனாய்) பகவத் விஷயத் தளவிலன்றிக்கே ததீயரளவிலுமன்றிக்கே ஆசார்ய விஷயத்திலே ஸக்தராய். தனக்குப் புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத் விஷயத்தைப் பற்றவடுக்கும். அங்ஙன் தானுகந்ததன்றிக்கே அவனுகந்தது செய்யவேண்டியிருக்கில் பாகவதர்களைப் பற்ற அடுக்கும்; அவர்களெல்லாருமுகந்தது செய்யவேண்டியிருக்கில் ஆசார்யனைப் பற்றவடுக்கும்; ஆசார்யன் முதலிலே அஜ்ஞாத ஜ்ஞாபநத்தாலே உத்தேச்யனும்; பின்பு பகவத்குணங்களிலே அவகாஹித்து குணாநுபவத்தாலல்லது செல்லாதபடியானால் போத யந்த: பரஸ்பரம் பண்ணுகைக்கு உசாத்துணையாகையாலே உத்தேச்ய னும்; பகவத்ப்ராப்திக்குப் புருஷகாரபூதனாய்க்கொண்டு உத்தேச்ய னும். ப்ராப்தி தசையிலே ஸாத்பவிவ்ருத்திரூபத்தாலே உத்தேச்யனும்.

(மதுரகவிசொன்னசொல்) தமக்குப் பாசுரமே இனிதாயிருக் கையாலே மதுரகவியென்கிறார். (நம்புவார்பதியித்யாதி) இனிதா யிருந்ததில்லையேயாகிலும் இப்ரபந்தத்தைத் தஞ்சமாக நினைத் திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேசம் பரமபதம்.

ஆழ்வார் உத்தேச்யராயிருக்கில் இவருக்குத்திருநகரியன்றோ ப்ராப்யமாவதென்னில், திருநகரியில் ஆழ்வாரானையும் பொலிந்து நின்றபிரானையும் இருபுரியாயாய்த்துச்செல்லுவது. அங்ஙன் றியே ஆழ்வாரானையே செல்லும் தேசம் பரமபதம். /"அடியார் நிலாகின்றவைகுந்தம்" என்றும், ||"வானவர் நாடு" என்றும் சொல்லக் கடவதிறே.

நம்பிதிருவழுதிவளநாடுதாஸர், அவர்களிருந்த தேசந்தான் பரமபதமென்று சொல்லுவர். கூரத்தாழ்வான் மகன் பிறந்தபின்பு இடைச்சுவர்தள்ளி இரண்டு விபூதியுமொன்றாய்த்துக்காணென்று பணித்தாரென்று பிள்ளையருளிச்செய்வர்.

நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

/ திருவிரு-75. || திருவாய் 3-6-6.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

அவ:—நிகமத்தில் இப்ரபந்தத்தையே தஞ்சமாக நினைத் திருக்குமவர்களுக்கு ஆவாஸபூமி பரமபதமென்கிறது.

வ்யா:—(அன்பன்) வாத்ஸல்யத்தை நிரூபகமாகவுடையவனாய்த்து ஈச்வரன். இன்னானுக்கன்பனென்று விசேஷியாமையாலே 194 "रिपूणामपि वत्सलः" (ரிபூணாமபி வத்ஸல:) என்கிறபடியே ஸர்வ விஷயமாயாய்த்து அவனுடைய வாத்ஸல்யமிருப்பது. அதுக்கு ஹேதுவென்னென்னில், 124 "सर्वेषामेव लोकानां पिता माता च माधवः" (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:) என்றும், 195 "देवानां दानवानाञ्च सामान्यमधिदैवतं" (தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்) என்றும் ஜநகத்வப்ரயுக்தமான ஸம்பந்தம்ஸர்வஸாதாரணமாகையாலே வாத்ஸல்யமும் பொதுவாயிருக்கும்.

(தன்னையடைந்தவர்கட்கெல்லாமன்பன் தென்குருகூர்நகர் நம்பி) ஆழ்வாருடைய அன்பு அங்ஙன் பொதுவாயன்றே இருப்பது. ‡ "பரமனைப்பயிலும் திருவுடையார்யவர் எம்மையாளும் பரமர்" என்கிறபடியே பகவத்ஸம்பந்த நிபந்தநமாயிறே இருப்பது. தம்மைப் போலே / "அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்பாரெல்லாரையும் தமக்கு நாதராகவாய்த்து நினைத்திருப்பது.

(தென்குருகூர்நகர்நம்பி) || "அடியாரடியார் தம்மடியாரடியார்" என்று தத்ஸப்பந்திகளளவும் பண்ணின ப்ரேமத்தாலே பூர்ணராயிருப்பர்.

---

அரு:—நிகமத்தில், "நம்புவார்பதி வைகுந்தம் காண்மின்" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை அருளிச்செய்கிறார் (நிகமத்திலித்யாதி)

அன்பனென்றவிடத்தில் ப்ரீதியை விஷயாநுரூபமாக வாத்ஸல்யபரமாக்கியருளிச்செய்கிறார் (வாத்ஸல்யத்தையே யித்யாதி). இங்கு அன்பனென்றது-பக்தனென்றபடி; அன்பன்றன்னை என்றது-முழுச்சொல்லு.

---

‡ திருவாய் 3-7-1. / திருவாய் 6-10-10. || திருவாய் 3-7-10.

(நம்பிக்கன்பனாய்) பகவத் விஷயத்தளவுமன்றிக்கே, ததீயரளவுமன்றிக்கே ஆசார்ய விஷயத்திலே ஸக்தராய்; தனக்குப் புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவமையும். அங்ஙன் தானுகந்ததன்றிக்கே, ஈச்வரனுகப்பே புருஷார்த்தமென்றிருக்கில் பாகவதர்களைப் பற்றவமையும்; 196 "ज्ञानी त्वात्मैव मे मतं" (ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்) 197 "मम प्राणा हि पाण्डवाः" (மம ப்ராணா ஹி பாண்டவா:) என்று பாண்டவர்களைத் தனக்கு தாரகராகவிறே நினைத்திருப்பது. ஈச்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லாருடையவுகப்பும் புருஷார்த்தமென்றிருக்கில் ஆசார்யனைப் பற்றவடுக்கும். 198 "आचार्यवान्" (ஆசார்யவாந்) என்றாய்த்து ஸ்ரீவைஷ்ணவர்களுகப்பது. ப்ரதமத்திலே ஆசார்யன் தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபந முகத்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்து பகவத் ஸமாச்ரயணவேளையிலே புருஷகாரபூதனாய், தன்னுடைய அநுஷ்டாநத்தாலே இவனை நல்வழியே கொண்டுபோய், ப்ராப்திதசையிலும் ஸாத்யவிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கக்கடவனாய் இப்படி பஹுமுகத்தாலே உத்தேச்யனாயிருப்பது.

(மதுரகவிசொன்னசொல்) ஆழ்வாரைத் தாம்சொன்ன பாசுரம் தமக்கினிதாயிருக்கையாலே மதுரகவியென்கிறார். (சொன்ன சொல் நம்புவார்பதி வைகுந்தங்காண்மினே) இனிதாயிருந்ததில்லையாகிலும் இப்ரபந்தத்தைத் தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேசம் பரமபதம்.

---

அன்பன்றன்னை யடைந்தவர்க்ள் ஸ்ரீமஹா பாகவதர்கள். நம்பி பததாத்பர்யம் (அடியாரித்யாதி). பகவானையும் பாகவதர்களையும் பற்றாமல் ஆழ்வார் விஷயத்திலன்பராவானென் னென்ன, "அன்பன்றன்னை யடைந்தவர்கட்கெல்லா மன்பன், நம்பிக்கன்பன்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து இவர்களுக்குண்டான பலதாரதம்யங்களை அருளிச்செய்கிறார் (தனக்கென்று துடங்கி அஞ்சுவாக்யத்தாலே) அவர்களுக்குகப்பாகவன்றிக்கே அவன் பண்ணின உபகாரத்தாலும்பற்றவேணுமென்கிறார்(ப்ரதமத்திலேயித்யாதி), சொல்நம்புவாரென்னுதே, சொன்னவென்கையாலே பலிதம் (இனிதாயித்யாதி).

ஆழ்வார் உத்தேயராகில் திருநகரியன்றோ ப்ராப்யமாவ தென்னில், திருநகரியில் பொலிந்து நின்றபிரானையும் ஆழ்வா ரானையுமாய் இருபுரியாய்ச்செல்லும். அங்ஙனன்றிக்கே ஆழ்வா ரானையேயாய்ச்செல்லும் பரமபதம். /"அடியார் நிலாகின்ற வைகுந்தம்"†"வானவர்நாடு" என்று சொல்லக்கடவதிறே.

நம்பிதிருவழுதி வளநாடுதாஸர், நம்புவார்பதி வைகுந்த மென்று அவர்களிருந்த தேசங்காண் பரமபதமென்று சொல்லுவர். ‡"உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்னக் கடவதிறே.

கூரத்தாழ்வான்மகன் பிறந்த பின்பு ஸம்ஸாரமும் பரமபதமு மிடைச்சுவர் தள்ளி ஒரு போகியாய்த்துக்காணென்று பெற்றி பணித்தாரென்று பிள்ளையருளிச்செய்வார்.

பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் முற்றிற்று.
பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

---

இருபுரியாவது-ஒருவன் முறுக்கு எதிர்முறுக்குக்கு விபரீதமாயிருக்கை. இங்கேதானே பரமபதமென்றதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச் செய்கிறார் (கூரத்தாழ்வானித்யாதி). (பெற்றிபணித்தாரென்றது) இங்கே யிருக்கச்செய்தேதானே அந்த விபூதியிலநுபவத்தைப் பெற்றி பணித்தார். அங்குத்தையிலநுபவம் இங்கே கிட்டுகையாலே-ஒரு போகியாயிற் றென்றபடி.

பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானாரும்பதம் முற்றிற்று.

---

/ திருவிரு-75. † திருவாய் 3-9-9. ‡ திருவாய் 5-3-9.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம்

நிகமத்தில் (அன்பனித்யாதி) இப்பாட்டில் இப்ரபந்தம் கற்றார்க்கு வஸ்தவ்யபூமி பரமபதமென்கிறார்.

ஆழ்வாருடைய போக்யதையும், அவர் தமக்கு ஸ்வாமியென்னு மிடத்தையும், தமக்குக் காலக்ஷேபவிஷயம் அவருடைய ப்ரபந்த மென்னுமிடமும், ஆழ்வாரோட்டை ஸம்பந்தமடியாக ஈச்வரன் மேல் விழுந்தநுபவித்தபடியையும், தம்முடைய தோஷம்பாராமல் ஆழ்வார் விஷயீகரித்த படியையும், தோஷந்தான் அவருடைய தேஶப்ரவேஶ மாத்ரத்தாலே தம்மைவிட்டுக் கழன்றபடியும், பின்பு அத்தோஷம் மேலிடாதபடி ஆழ்வார் குணகீர்த்தநமே தமக்குக்காலயாத்ரையாம்படி அவர் தம்மைத் திருத்தினபடியும், அவருடைய க்ருபாவைபவத்தை லோகமடங்கலும் தாம் பரப்ப வேண்டும்படி தமக்குப்பிறந்த ஆதரத்தையும், பகவத்க்ருபையிற் காட்டில் ஆழ்வாருடைய க்ருபை லோகத்திலே அதிஶயித்தபடி யையும், அக்ருபையடியாக அவருபகரித்த உபகாரமும், அவ்வுப காரபரம்பரைகளுக்கு ப்ரத்யுபகாரம் தேடி அவருடைய பூர்த்தியாலே ப்ரத்யுபகாரத்துக்கு அவகாஶம் காணாமல் தாம் அலமருகிறபடியையு மிறே கீழ்ச்சொல்லிநின்றது.

இவ்வர்த்தங்களுக்கு வாசகஶப்தமிட்டுச் சொன்ன இப்ர பந்தத்திலே ஆதரமுள்ளார்க்கு நித்யஸூரிகள் பரமபதத்திலே ஒரு ப்ராப்திபண்ணிக் கொடுப்பர்களென்கிறார். இவர்களுக்குத்

---

அரு;—நிகமத்தில் (அன்பனித்யாதி) (இப்பாட்டில் இப்ரபந்தம் கற்றார்க்கு வஸ்தவ்யபூமி பரமபத மென்கிறார்) என்றது-ஸங்க்ரஹமான அவதாரிகை.

(ஆழ்வாருடைய போக்யதையும்) என்றுதுடங்கிமேலே விஸ்தரம். ஆழ்வாரே ப்ராப்யப்ராபக மென்றன்றோ இப்ரபந்தத்தில் இவரருளிச் செய்தது; ஆகையால் ஆழ்வாரெழுந்தருளியிருந்த திருநகரியே இப்ர பந்தம் கற்றவர்களுக்கு வஸ்தவ்யபூமி யென்னாமல், பரமபதம் வஸ்தவ்ய

திருநகரியே ப்ராப்ய ஸ்தலமாயிருந்ததாகிலும் அவர்களாதரத்துக்காக அங்கேபோய் அங்கும் ஆழ்வாரை அநுபவிக்கப்பெறுவார்கள்.

வ்யா;—(அன்பனித்யாதி) கவிபாட்டுண்ட விஷயத்தையும், கவிபாடினதம்மையும், கவிதன்னையும், கவியையேதேனுமொருவழியால் கற்றவர்களுக்குப் பலமும் சொல்லுகிறது. (தன்னையடைந்தவர்கட்கெல்லாமன்பன்) தம்முடைய திருவடிகளை ஆச்ரயித்தன்போல்வார்க்கெல்லாம் வத்ஸலராயிருக்குமவர்; எங்கள் தோஷங்களைப் பாராதே தம்முடைய குணங்களைத்தந்து தரிப்பிக்குமவர். * நான்மறையாளர்கள் புன்மையாகக்கருதுவராதலில் அன்னையாயத்தனென்றும், * நின்று தன் புகழேத்த அருளினனென்றும் சொல்லுகிறபடியே; அன்றிக்கே, அன்பனென்று ஸர்வேச்வரனுக்குத் திருநாமமாய், அவனையாச்ரயித்தவர்க்கெல்லாம் ஸ்நிக்தராயிருப்பவர்; 199"मद्भक्तजनवात्सल्यं" (மத்பக்த ஜநவாத்ஸல்யம்)என்று இத்தையிறே ப்ரதமலக்ஷணமாகச் சொல்லிற்று.

---

பூமியாகச் சொல்லுவானென்னென்னவருளிச் செய்கிறார் (இவர்களுக்குத் திருநகரியே யென்றுதுடங்கி).

இந்தப்பாட்டுக்கு ஸங்க்ரஹேண ப்ரதிபதம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கவிபாட்டுண்ட விஷயத்தையும் என்று துடங்கி). "அன்பன்றன்னை" என்றது-ஆழ்வாருக்கு விசேஷணமானபோது பகவத்விஷயத்தில் ப்ரேமத்தையுடையராய், ஆச்ரிதவிஷயத்திலும் வத்ஸலரான ஆழ்வார் தம்மையென்றபடி. இந்த பகவத் ப்ராவண்யத்தைக் கடாக்ஷித்துக்கொண்டே பகவத்பாகவத விஷயத்தில் ஸ்நேஹத்துக்கு ஊற்றுவாய் திருநகரியில் பிறப்பாய்த்தென்றருளிச்செய்கிறார் (வத்ஸலராயிருக்குமவர்) என்று. வத்ஸலராயிருக்கும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (எங்கள் தோஷங்களைப் பாராதே யென்று துடங்கி).

இத்தலையில் தோஷத்தை போக்யமாகக்கொண்டு குணங்களைத்தந்து தரிப்பித்த க்ரமத்தை இவருடைய திவ்யஸூக்தியிலே காட்டுகிறார் (நான் மறையாளர்களென்று துடங்கி). ஜ்ஞாநபக்த்யாதிகளெல்லாம் கிடக்க பாகவதரிடத்தில் ஸ்நிக்தராயிருப்பரென்று இந்த் வாத்ஸல்யத்தை ப்ரதாநமாகச் சொல்லுகிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (மத்பக்த ஜநவாத்ஸல்யமென்று துடங்கி).

(அன்பன்) இன்னபடியன்பனென்கையன்றியிலே எல்லார்க்கும் எல்லாப்படியாலும் நிஸர்க்கஸௌஹ்ருத்தாயிருக்கும். 200 "एवं निसर्गसुहृदि - न चित्रमिदमाश्रितवत्सलत्वं" (ஏவம் நிஸர்க்கஸௌஹ்ருதி-ந சித்ரமிதமாச்ரித வத்ஸலத்வம்) என்று ஸௌஹார்த்த கார்யமிறே வாத்ஸல்யம். 201 "सर्वलोकैकवत्सलः" (ஸர்வலோகைக வத்ஸல:) 202 "शरणागतवत्सलः" (ஶரணாகத வத்ஸல:) 194 "रिपूणामपि वत्सलः" (ரிபூணாமபி வத்ஸல:) என்னும்படி லோகத்துக்காக வத்ஸலனுமாய், அதில் ஆச்ரிதரளவிலே, 203 "दोषो यद्यपि" (தோஷோ யத்யபி) என்னும்படி வத்ஸலனுமாய், ப்ராதிகூல்யமே பண்ணிப் போருமவர்களுக்கும் வத்ஸலனுமாயிருக்கும். 204 "प्रतिभवमपराद्धुर्मुग्ध सायुज्यदोऽभूः" (ப்ரதிபவமபராத்துர் முக்த ஸாயுஜ்யதோபூ:) இறே; அங்கு மௌக்த்யமாவது தோஷம் நெஞ்சில் படாதொழிகையாய்த்து.

(அன்பன்) தன்னை ஸ்நேஹித்தார்க்குத் தானொருவனுமே விஷயபூதனுமாய், தான் ஸ்நேஹிக்குமிடத்தில் விபூதியாக

---

(அன்பனென்கையன்றியிலே) என்றது அன்பனென்னுமையாலே என்றபடி. அன்பனென்ற பதத்தை ஆழ்வாருக்கு விசேஷணமாக அருளிச்செய்யாதபோது வாத்ஸல்யபரமாக அருளிச்செய்துவிட்டு, ஈச்வரனுக்கு விசேஷணமாக்கி அருளிச்செய்கிற விடத்திலும் வாத்ஸல்யபரமாக அருளிச்செய்யாதே ஸௌஹார்த்தபரமாக அருளிச்செய்கிறபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (ஏவம் நிஸர்க்கஸௌஹ்ருதி) என்று துடங்கி.

(அப்படி ஈச்வரன் அநுகூல ப்ரதிகூல விபாகமற எல்லாரிடத்திலும் வத்ஸலனாயிருக்குமோ என்னவருளிச்செய்கிறார் (ஸர்வலோகைகவத்ஸல:) என்று துடங்கி. "ஸர்வலோகைகவத்ஸல:" என்று துடங்கி அருளிச்செய்த ப்ரமாணத்ரயத்துக்கும் அடைவே அர்த்தமருளிச்செய்கிறார் (லோகத்துக்காக வென்று துடங்கி). ப்ரதிகூலரிடத்தில் வத்ஸலனாயிருக்குமென்கைக்கு ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியை ப்ரமாணமாக அருளிச்செய்கிறார் (ப்ரதிபவமபராத்து:) என்று துடங்கி.

அன்பனென்று-இதரருடைய அன்புக்கு ஈச்வரன்றான் விஷயமாயிருக்குமென்னுமதையும், அன்றிக்கே, ஈச்வரன்றான் எல்லா விஷயத்திலுமன்பையுடையனாயிருக்கு மென்னுமதையும்-கர்த்தரி கர்மணிவ்யுத்பத்தியாலே காட்டுகையாலே, இந்த இரண்டர்த்தத்தையுங் கூட்டியருளிச்செய்கிறார்

ஸ்நேஹிக்குமவன். தன்னை ஸ்நேஹித்தவன் புறம்பே சிலவற்றை ஸ்நேஹித்தால் அவனுக்குத் தன்னைப்பெற விரகில்லை; தான் எல்லாரையும் ஸ்நேஹியாநுகில் தான் இன்றிக்கே ஒழியும்; 205 "**निरवधिकवात्सल्यजलधे**" (நிரவதிகவாத்ஸல்யஜலதே) 206 "**वात्सल्यमहोदधे**" (வாத்ஸல்ய மஹோததே) என்கிறபடியே கடலுக்குள்ளே மாணிக்கங்களடைய மறைந்து கிடக்குமாபோலே இவ் வாத்ஸல்யகுணத்தில் குணாந்தரங்களடைய மறையும்படியாயாய்த்து இது ஸ்வரூபத்தை விளாக்குலை கொண்டுகிடக்கும்படி. ஸ்வரூபந் தான் ஸர்வதா ஸாத்ருச்யரஹிதமானுப் போலேயாய்த்து இக்குணமும் ஸத்ருசரஹிதமாய் நிகரில புகழாயிருக்கும்படி; அந்த ஸாத்ருச்யராஹித்யததால் பெற்றது பரத்வஸித்தி; இந்த ஸாத்ருச்யராஹித்யத்தால் பெற்றது சரண்யத்வஸித்தி.

(அன்பன்) தன்னைப்பற்றிப் புறம்பேசிலவற்றை ஆசைப்பட்டவர்களுக்கும் 207 "**उदाराः**" (உதாரா:) என்று குணங்கொள்ளும் வ்யா

---

(தன்னை ஸ்நேஹித்தார்க்குத் தானொருவனுமே யென்று துடங்கி வாக்யத்வயத்தாலே). ஸ்நேஹித்தவர்களுக்குத் தானொருவனுமே விஷயமாகாத போது வருகிற ஹாநியேதென்னவருளிச் செய்கிறார் (தன்னை ஸ்நேஹித்தவனென்றுதுடங்கி).

ஈச்வரன் எல்லாரிடத்திலும் ஸ்நேஹியாதபோது அவனுக்கு வருகிற ஹாநி யேதென்னவருளிச்செய்கிறார் (தானெல்லாரையும் ஸ்நேஹியாநுகிலென்று துடங்கி). குணாந்தரங்களிற்காட்டில் இந்த வாத்ஸல்ய குணத்துக்குண்டான வைபவத்தை அருளிச்செய்கிறார் (நிரவதிக வாத்ஸல்ய ஜலதே) என்று துடங்கி.

(ஸ்வரூபத்தை விளாக்குலை கொண்டு கிடக்கும்) என்றது-ஸ்வரூபத்தையெல்லாம் தானே வ்யாபித்துக் கொண்டிருக்கு மென்றபடி. "வாத்ஸல்ய ஜலதே" என்று இந்த குணத்தை ஜலதியாகச் சொல்லுகையாலே ஸமுத்ரத்துக்குள்ளே கிடக்கிற ரத்நங்கள்போலே குணாந்தரங்களெல்லாம் ஏததந்தர்க்கதமாயிருக்கு மென்றபடி.

எல்லாத்தையும் விளாக்குலைகொண்டு தான் மேலாயிருக்கிறபடி எப்படி யிருக்கிற தென்னவருளிச் செய்கிறார் (ஸ்வரூபந்தானித்யாதி). ஸ்வரூப ஸாத்ருச்ய ராஹித்யத்தாலும் குணஸாத்ருச்ய ராஹித்யத்தாலும் பலித்த தென்னென்னவருளிச்செய்கிறார் (அந்த ஸாத்ருச்யேத்யாதி).

மோஹத்தை உடையவன். (அன்பன்) உபக்ரமத்திலே, "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனென்னப்பன்" என்று ஶீலஸௌலப்யஸ்வாமித்வங்களை உபாதாநம் பண்ணி, உபஸம்ஹாரத்திலே வாத்ஸல்யகுணத்தோடே தலைக்கட்டுகிறார். அவை ஒரு தட்டு, இது ஒருதட்டிறே; இத்தைப்பற்றவிறே 201 "शीलादिगुणसंपन्नः सर्वलोकैकवत्सलः" (ஶீலாதிகுண ஸம்பந்நஸ் ஸர்வலோகைகவத்ஸல:) என்று ரிஷிகளும் சொல்லிற்று.

(அன்பன் றன்னை யடைந்தவர்கட்கெல்லாமன்பன்) இப்படி ஸர்வலோக வத்ஸலனான ஸர்வேச்வரனுடைய குணத்துக்குத் தோற்று 61 "गुणैर्दास्यमुपागतः" (குணைர்த்தாஸ்யமுபாகத:) என்று அடிமைபுக்கு அவன் திருவடிகளை உபாயத்வேந வரணம் பண்ணியிருக்கும் ஸாத்விகவர்க்கத்துக்கு நல்லராயிருக்குமவர்.

அவனுக்கு எல்லாரோடும் பந்தமுண்டாகையாலே எல்லாரையும் ஸ்நேஹிக்கும்; இவர், /"பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கண்டீர்-என்னையாளும் பரமர்" என்றிருக்குமவ

அன்பனென்றதுக்கு ஆச்ரயணகாலத்தில் தோஷமே பச்சையாகக் கொண்டு அங்கீகரிக்குமென்றார்கீழ். அங்ஙனன்றிக்கே, அந்த தோஷந் தன்னிலும் வைத்துக்கொண்டு தன்னையாச்ரயித்தவநந்தரம் புறப்பே. சில வற்றை ஆசைப்படுகை மிகவும் க்ரூரமாகையாலே, அந்த தோஷத்தையும் குணமாகக்கொள்ளும் வ்யாமோஹத்தை உடையவனென்கிறார் (தன்னைப் பற்றி என்று துடங்கி). இந்தவர்த்தத்தில் அன்பனென்று வ்யாமோஹத்தைச் சொல்லுகிறது.

உபக்ரமத்திலே மூன்று குணங்களைச்சொல்லி, உபஸம்ஹாரத்திலே ஒரு குணத்தையிட்டு உபஸம்ஹரிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (அவை ஒருதட்டித்யாதி). ஈச்வரபரமான இரண்டாமர்த்தத்தை அருளிச்செய்கிறார் (இப்படி ஸர்வலோகேத்யாதி). அவனைப்போலே எல்லாரிடத்திலும் ஸ்நேஹித்திராதே, ஸாத்விகவர்க்கத்துக்கே நல்லராயிருக்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (அவனுக்கெல்லாரோடும் ஸம்பந்தமுண்டாகையாலே என்று துடங்கி). அவனுக்கு ஸ்வரூபப்ரயுக்தமாய் வருகையாலே, இவரைப் போலே §"எண்ணுதமாறிடத்தை எண்ணுதபோதெல்லாமினியவாறு"

/ திருவாய் 3-7-1.  § பெரியதிரு 11-6-3.

ராய்த்து. இவரைப்போலே வைராக்ய பூர்வகமான ஸ்நேஹமன்றே அவனது. அவனுக்கு எல்லாரோடும் ஸ்வரூபநிபந்தந ஸம்பந்தம். இவரது உபாதிநிபந்தந ஸம்பந்தம். (எல்லாமன்பன்) அவர்களுடைய ஜாத்யாதிநியமம் பாராதே தத்ஸம்பந்தமே ஹேதுவாக நல்லராயிருக்குமவர். ||"கும்பிநரகர்களேத்துவரேலும்-எம்தொழுகுலம் தாங்கள்" /"எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும், மணிவண்ணற்காளென்றுள் கலந்தாரடியார் தம்மடியாரெம்மடிகள்" என்றிருக்குமவர்.

(அன்பன்) §"அவனடியார், நணிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க" என்று பகவதநுபவஸுகத்தை விட்டேயாகிலும் வைஷ்ணவ ஸமவாய ஸம்ச்லேஷரஸராயிருக்குமவர். (அடைந்தவர்கட்கெல்லாமன்பன்) அவனை சேஷியாக வரிக்கவுமாம், பந்துத்வேந வரிக்கவுமாம், உபாயத்வேந வரிக்கவுமாம், உபேயத்வேந வரிக்கவுமாம், இவருக்கு ஆதரிக்க வேண்டுவது ஏதேனுமொரு ஸம்பந்தமாய்த்து.

(தென்குருகூரித்யாதி) இவருக்கு இப்படி பகவத்பாகவத விஷயத்தில் ஸ்நேஹத்துக்கு ஊற்றுவாய் திருநகரியில் பிறப்பாய்த்து; துறைவாய்ப்பாலே பயிரும் வாய்க்குமிறே; இவருக்கு

---

என்கிறபடியே பகவத்விமுகரான ஸம்ஸாரி சேதநர் விஷயத்தில் விரக்தி பூர்வகமாய் வருகிற ஸ்நேஹமன்றே என்றபடி.

கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (அவனுக்கெல்லாரோடும் ஸ்வரூபநிபந்தநமென்று துடங்கி). உபாதிநிபந்தநமென்கிறவிடத்தில், உபாதியாவது பாகவதத்வம். எல்லாமென்ற சப்தத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவர்களுடைய ஜாத்யாதி நியமம் பாராதேயென்றுதுடங்கி). (எல்லாம்) என்றது எல்லாருக்குமென்றபடி. அன்பனென்று பதோபாதாநம்பண்ணி, பாகவதர்களிடத்தில் ஆழ்வாருக்குண்டான ப்ராவண்யாதிசயத்தை அருளிச்செய்கிறார் (அவனடியார் நணிமாக்கலவி என்றுதுடங்கி). அடைந்தவரென்ற பதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவனை சேஷியாகவரிக்கவுமாமென்றுதுடங்கி).

அவர், ப்ரணவநமஸ்ஸுக்களிரண்டிற் சொல்லுகிற பகவத்பாகவத விஷயங்களில் ப்ரவணராயிருப்பர். இவர் மத்யமபதமான நமஸ்ஸிலே

|| திருவாய் 3-7-8. / திருவாய் 3-7-9. § திருவாய் 8-10-7.

காதல்கடல் புரையவிளைவிக்கைக்கடி அந்த நிலப்பண்பாய்த்து; (நகர்) அந்நகர வாஸத்தாலேயாய்த்து இவர் ஸாராஸார விவேக ஜ்ஞராய்த்து. (நம்பி) இப்படி ஆத்மகுணபூர்ணரான ஆழ்வார்.

(அன்பனாய்) இப்படி இவருடைய பகவத் ஜ்ஞாநபக்த்யாதிகளாகிற ஆத்மகுணம் கண்டாய்த்து இவருக்கு ஸ்நேஹம் பிறந்தது. (அன்பனாய் மதுரகவி) அவருக்கு பகவத் ப்ரேமம் ஸ்வரூப ப்ரயுக்தமாய் /"ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்" என்று நிரூபகமாகமானாப்போலே, இவருக்கும் ஆழ்வாருக்கு நல்லரானவ ரென்று நிரூபகம். அவர் ப்ரணவநமஸ்ஸுக்களிரண்டிலும் நிஷ்டராய்ப் போருவர்; இவர் மத்யமபதத்திலே நிஷ்டராயிருப்பர்.

(மதுரகவி) அவர் தத்விஷயத்தைக் கவிபாடுகையாலே †"என்னவிலின்கவி" என்றாப்போலே இவரும் ஆழ்வாரைக் கவிபாடுகையாலே தம்மை மதுரகவி என்கிறார். (நம்பிக்கன்பனாய் மதுரகவி) நெஞ்சுக்குப்பணி ஆழ்வார்பக்கல் ஸ்நேஹமாய், வாய்க்குப்பணி அவருடைய குணஸ்தோத்ரமே ஆனவர்.

(சொன்னசொல்) அவர் ப்ரபந்தீகரித்த இந்த ஸப்தஸந்தர்ப்பத்தை. (சொன்னசொல்) இதுவுமொரு சொல்லேயென்று விஸ்மிதராகிறார். (நம்புவார்) இத்தையாசைப்படுமவர்கள். இவ்வர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணிவிடுதல் செய்கையன்றிக்கே, இதிலே நசையுடையராய் இவ்வியலிலே எப்போதும் பரிசயிப்பது, இதுக்குள்ளோடுகிற ஆழ்வாருடைய ப்ரபாவங்களிலே வித்தராவது, இப்ரபாவத்தை எப்போதும் ஒருவர் சொல்லக்கேட்க ஆசைப்படுவதாய், இப்படி நசைபண்ணிப்போருவார்.

---

நிஷ்டராயிருப்பரென்றபடி. ஆழ்வார் ஈச்வரனைக் கவிபாடுகையாலே "இனியகவி" என்றாப்போலே, இவரும் ஆழ்வாரைக் கவிபாடுகையாலே "மதுரகவி" என்கிறார்.

---

/ திருவாய் 2-1-11. † திருவாய் 3-9-1.

(நப்புவார்) பகவத் ப்ரபாவத்திற்காட்டில் ஆழ்வார் ப்ர பாவத்தை விரும்புவார். "ஆழ்வார் ப்ரபாவம் சொன்னவிது கைதவமன்று, ஸத்யம்." என்று இவ்வர்த்தத்தைத் தங்களுக்குத் தஞ்சமாக விச்வஸித்திருப்பார். (பதிவைகுந்தம் காண்மினே) அவர்களுக்கு வஸ்தவ்யபூமி பரமபதம்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்.

---

நம்புவாரென்றதுக்கு இரண்டுபொருள்; அதாவது ஆசைப்படுமவ ரென்னுதல். அன்றிக்கே விச்வஸித்திருக்குமவரென்னுதல், ஆசைப்படு மவரென்றது விரும்புமவர்களென்றபடி. விரும்பும் ப்ரகாரத்தை அருளிச் செய்கிறார் (இவ்வர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணி விடுதலென்று துடங்கி).

அரும்பதம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# கண்ணிநுண்சிறுத்தாம்பு ஸகலவ்யாக்யான ப்ரமாணத்திரட்டு

1. ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: ।
பக்திச்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி ॥

[ஸ்வாமியே! தேவரீரிடத்தில் எனக்கு மேலான அன்பானது எப்போதும் நிலைநிற்கிறது; வீரரே! (உம்மிடத்தில்) பக்தியும் நித்யமாயிராநின்றது. என் நினைவு ஸ்ரீவைகுண்டநாதனிடத்திலும் செல்லுகின்றதில்லை.]

2. மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் ।
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

[என்னுடைய வம்சத்தவர்களுக்கு எப்போதும் தாய்தந்தையும், மாதரும், மக்களும், பெருஞ்செல்வமும், மற்றுமுள்ள எல்லாமும், எந்த ஆழ்வாருடைய திருவடியிணையேயோ, நமக்கு முதல்வரும், குலபதியுமான அவருடைய மகிழமலராலே அலங்கரிக்கப்பட்டதும், ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை உடையதுமான அந்தத் திருவடியிணையைத் தலையால் வணங்குகிறேன்.]

3. ஸ து மேதாவிநௌ த்ருஷ்ட்வா வேதேஷு பரிநிஷ்டிதௌ ।
வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: ॥

[அந்த வால்மீகிபகவான் மேதாவிகளாய், வேதங்களில் தேர்ந்தவர்களான அவர்களைக்கண்டு, வேதத்தை விவரிப்பதற்காக அவர்களைச் சேர்த்துக்கொண்டார்.]

4. ஸ ஜகாம வநம் வீர: ப்ரதிஜ்ஞாமநுபாலயந் ।
பிதுர் வசநநிர்தேசாத் கைகேய்யா: ப்ரியகாரணாத் ॥

1. ரா-உத் 40-15. 2. ஸ்தோ-ர-5. 3. ரா-பா 4-6. 4. ரா-பா 1-24.

[வீரரான அந்த ராமர் ப்ரதிஜ்ஞையைப் பரிபாலித்துக்கொண்டு, பிதாவினுடைய ஆஜ்ஞையாலும், கைகேயிக்கு ப்ரியமாயிருக்கையாலும் வனத்திற்குச் சென்றார்.]

5. அகஸ்த்யவசநாச்சைவ ஜக்ராஹைந்த்ரம் ஶராஸநம் ।
கட்கஞ்ச பரமப்ரீதஸ்தூணீ சாக்ஷயஸாயகௌ ॥

[அகஸ்தியருடைய நியமனத்தின் பேரில் ராமபிரான் இந்திரனுடைய வில்லையும், கத்தியையும், குறையாத அம்புகளையுடைய இரு தூணிகளையும் ஏற்றுக்கொண்டான்.]

6. தத: ஸுக்ரீவவசநாத்தத்வா வாலிநமாஹவே ।
ஸுக்ரீவமேவ தத்ராஜ்யே ராகவ: ப்ரத்யபாதயத் ॥

[அதற்குப்பின் சுக்கிரீவன் சொன்னதற்கிணங்கி வாலியைச் சண்டையில் கொன்று சுக்கிரீவனையே அவனுடைய ராஜ்யத்தில் நிலைநிறுத்தினான்.]

7. தர்ஶயாமாஸ சாத்மாநம் ஸமுத்ர: ஸரிதாம் பதி: ।
ஸமுத்ரவசநாச்சைவ நளம் ஸேதுமகாரயத் ॥

[நதிகளின் பதியான கடலரசன் ராமபிரான் முன் தோன்றினான். அக்கடலரசன் சொன்னபடி நளனைக்கொண்டு அணை கட்டுவித்தான் ராமபிரான்.]

8. குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே ।
க்ருதார்த்தோऽஹம் பவிஷ்யாமி தவ சார்த்த: ப்ரகல்பதே ॥

[என்னைக் கைங்கர்யபரனாக வைத்துக்கொள்ளும். இதில் தவறொன்றுமில்லை. (இதனால்) நானும் தன்யனாவேன். உம்முடைய காரியமும் நடைபெறும்.]

9. பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே ।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச்ச தே ॥

---

5. ரா-பா 1-42. 6. ரா-பா 1-70. 7. ரா-பா 1-80.
8. ரா-அ 31-24. 9. ரா-பா 31-25.

[நீர் வைதேஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும், தூங்கும் போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.]

10. ராஜ்யம் ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம் ।
ப்ரதிஜாநாமி தே வீர மாபூவம் வீரலோகபாக் ॥

[வீரனே! கடலுக்குக் கரைபோலேயுள்ள நான் உம்முடைய அரசையும் ரக்ஷிக்கக்கடவேன். (அப்படி செய்யவில்லையாகில்) "உம் ராஜ்யத்திலேயே வாழக்கடவேனல்லேன், வீரரான தசரதர் சென்ற உலகத்திற்குச் செல்லக்கடவேன்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன்.]

11. தம் மத்தமாதங்க விலாஸகாமீ
கச்சந்த மவ்யக்ரமநா மஹாத்மா ।
ஸ லக்ஷ்மணோ ராகவமிஷ்டசேஷ்டோ
ரரக்ஷ தர்மேண பலேந சைவ ॥

[மதங்கொண்ட யானையினுடையது போன்ற நடையையுடையவனும், (ராமபிரானைத்தவிர வேறொன்றில்) ஈடுபடாத மனத்தையுடையவனும், மஹாபுருஷனும், ராமகைங்கரியத்தையே இனிதாகக்கொண்டவனுமான லக்ஷ்மணன், (தனக்குமுன்) செல்லும் இராமபிரானை தர்மத்தாலும், பலத்தாலும் ரக்ஷித்தான்.]

12. கச்சதா மாதுலகுலம் பரதேந ததாऽநக: ।
ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத: ॥

[பாபமற்றவனும், நித்யசத்ருவான இந்த்ரியங்களையும் ஜயித்தவனும் அன்பினால் தூண்டப்பட்டவனுமான சத்ருக்னன் மாமன் வீட்டுக்குச்செல்லும் பரதனால் அழைத்துச் சொல்லப்பட்டான்.]

13. பரத இதி ராஜ்யஸ்ய பரணாத்
[ராஜ்யத்தைப் பரித்து(தாங்கி)நின்றதாலே 'பரதன்' எனப்படுகிறான்.]

14. ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி

10. ரா-அ 23-27. 11. ரா-கி 1-128. 12. ரா-அ 1-1.
13. சாகுந்தலம்-7. 14. முண்டகம் 3-1-3.

[பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தவுடன், ப்ரஹ்மஜ்ஞானியானவன், புண்யபாபங்களை விட்டு, ப்ரக்ருதிஸம்பந்தமற்றவனாய், (புருஷோத்த மனுடன்) மேலான ஸாம்யத்தை அடைகிறான்.]

15. ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்

[வடிவழகு, வண்மை, குணங்கள் முதலியவற்றால் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் அபஹரிக்கும் ராமனை.]

16. மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥

[என்னிடம் நிலைத்த மனத்தையுடையவர்களாய் என்னிடமே தங்கள் உயிரை வைத்தவர்களாய், (என்னுடைய குணங்களை) ஒருவருக்கொருவர் அறிவிப்பவர்களாய், என்னை எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பவர்களாய், ஸந்தோஷிக்கிறார்கள்; ஆநந்திக்கிறார்கள்.]

17. தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:

[யாதொரு பரமபதத்தில் ஸாத்யர்கள் எனப்படும் தேவர்கள் இருக்கிறார்களோ, அந்தப் பரமபதத்தை அவர்கள் மஹிமை யுடையவர்களாய் அடைகிறார்கள்.]

18. த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந் ॥

[அர்ஜுனா! முக்குணங்களில் ஒன்றொன்றை அதிகமாகவுடைய புருஷர்களுக்காக ஏற்பட்டது வேதங்கள்; நீ ஒன்றோடொன்று கலந்த முக்குணங்களற்றவனாய், ஸத்வகுணத்தையே பெருக்கிக் கொள்வாயாக; ஸுகது:க்காதிகளாகிற ஸாம்ஸாரிக ஸ்வபாவங்க ளற்றவனாய், எப்போதும் ஸத்வத்திலேயே நிலைநிற்பவனாய், இல்லாத புறப்பொருள்களை அடைவது, இருப்பவற்றை ரக்ஷிப்

15. ரா-அ 3-29. 16 கீதை 10-9. 17. பு-ஸூ. 18. கீதை 2-45.

பது என்னுமிரண்டுமில்லாதவனாய், (உட்பொருளான) ஆத்ம ஸ்வரூபத்திலேயே ஈடுபாடுடையவனாக ஆவாயாக.]

19. ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம் ப்ராஹ்மம் ஸந்யாஸிநாம் ஸ்ம்ருதம்।
யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்ம ஸந்தோஷகாரிணாம் ॥
ஏகாந்திந: ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹியே।
தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய: ॥

[இல்லற தர்மத்தை அனுஷ்டிப்பார்க்கு ப்ரஜாபதிலோகமும், துறவறதர்மத்தை அனுஷ்டிப்பார்க்குப் பிரமனின் உலகமும், தன் ஆத்மாவில் இனிமைகாணும் கைவல்ய நிஷ்டனுக்கு அழியாததான கைவல்யஸ்தானமும், எப்போதும் ப்ரஹ்மத்தை தியானிக்கும் ஏகாந்திகளான யோகிகளுக்கு, நித்யஸூரிகள் எப்போதும் அனுபவிக்கும் மேலான பரமபதமாகிற ஸ்தானமும் அடையத் தக்கதாகிறது.]

20. த்ரயோ குணாஸ் த்ரைகுண்யம்-ஸத்வரஜஸ்தமாம்ஸி।
ஸத்வரஜஸ்தம: ப்ரசுரா: புருஷா: த்ரைகுண்யசப்தேந உச்யந்தே।
தத்விஷயா வேதா: ॥

[ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற முக்குணங்களும் த்ரைகுண்யம் என்று சொல்லப்படுகின்றன; அம்முக்குணங்களை அதிகமாகக் கொண்ட புருஷர்கள் இங்கு 'த்ரைகுண்யர்' எனப்படுகின்றனர். அவர்களுக்காக இருப்பவை வேதங்கள்.]

21. கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத: ।
[எல்லா அறங்களினுள்ளும், எந்த அறம் மிகச்சிறந்ததென்று தேவரீர் நினைக்கிறீர்?]

22. ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோதிகதமோ மத: ।
யத் பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந்நர: ஸதா ॥
[மனிதன் பக்தியோடு தாமரைக்கண்ணனை துதிகளால் எப்போதும் அர்ச்சிப்பதாகிற இதுவே எல்லா அறங்களிலும் மேலான அறம் என்று என் நினைவு.]

---

19. வி-பு 1-6-37, 38. 20. கீதாபாஷ்யம் (2-45)
21&22. ஸஹஸ்ரநாமாத்யாயம்.

23. மர்யாதாநாம் ச லோகஸ்ய கர்த்தா காரயிதா ச ஸ:
[உலகத்தின் வரம்புகளைச் செய்பவனும், செய்விப்பவனும் ராம பிரானே.]

24. ஸ ப்ராது: சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: ।
ஸீதாமுவாசாதியஸா ராகவஞ்ச மஹாவ்ரதம் ॥
[ரகுகுலத்தை உகப்பிப்பவனும், மிகுந்த கீர்த்தியை உடையவனுமான அந்த லக்ஷ்மணன், தமையனின் திருவடிகளை நன்றாகப் பிடித்துக்கொண்டு ஸீதையையும், (ஆச்ரிதஸம்ரக்ஷணமான) பெரிய விரதத்தையுடைய ராகவனையும் பார்த்துச் சொன்னான்.]

25. தத: ஶிரஸி க்ருத்வா து பாதுகே பரதஸ்ததா ।
ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட: ஶத்ருக்நேந ஸமந்வித: ॥
[பிறகு, சத்ருக்னனோடு கூடிய பரதன் தன் தலையில் ராமபாதுகைகளை வைத்துக்கொண்டு, மிகவுகந்தவனாய் அப்போதே தேரில் ஏறினான்.]

26&27. புஷ்யே ஜாதஸ்து பரதோ மீநலக்நே ப்ரஸந்நதீ: ।
ஸார்ப்பே ஜாதௌ ச ஸௌமித்ரீ குலீரேऽப்யுதிதே ரவௌ ॥
[தெளிந்த அறிவையுடைய பரதன் மீனலக்னத்தில் புஷ்ய நக்ஷத்திரத்தில் பிறந்தான். சுமித்திரையின் புத்திரர்களான லக்ஷ்மண சத்ருக்னர்கள் கடகலக்னத்தில் ஆயில்ய நக்ஷத்திரத்தில் பிறந்தனர்.]

28. அச்வ இவ ரோமாணி விதூய பாபம்
சந்த்ர இவ ராஹோர் முகாத் ப்ரமுச்ய ।
தூத்வா ஶரீரமக்ருதம் க்ருதாத்மா
ப்ரஹ்மலோகமபிஸம்பவாமீத்யபிஸம்பவாமீதி ॥
[குதிரை மயிர்களை உதிர்ப்பதுபோல், பாபத்தை விட்டு ராஹுவின் வாயிலிருந்து மீண்ட சந்திரன்போல் சரீரத்தை விட்டு, நித்தியமான ப்ரஹ்மலோகத்தை கிருதார்த்தனாயிருந்துகொண்டு அடையக்கடவேன்.]

---

23. ரா-ஸு 35-11. 24. ரா-அ 31-2. 25. ரா-அ 113-1.
26&27. ரா-பா 20-13. 28. சாந் 8-13-1.

29. ஸ்ருஷ்டஸ் த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே ।
ராமே ப்ரமாதம் மா கார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி ॥

[குழந்தாய்! நீ வனத்தில் வஸிப்பதற்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய்; உன்னுடைய ஸுஹ்ருந்த்தான ராமனிடம் மிகவும் அன்பு பூண்டவனாயிருக்கிறாய்; உன் தமையனாகிய ராமன் நடந்து செல்லுகையில், (அந்த நடையழகில் ஈடுபட்டு) (அவனை ரக்ஷிப்பதில்) கவனமில்லாமல் இருந்துவிடாதே.]

30. ஜக்ராஹ பரதோ ரச்மீந் ஶத்ருக்நச் சத்ரமாததே ।
லக்ஷ்மணோ வ்யஜநம் தஸ்ய மூர்த்நி ஸம்பர்யவீஜயத் ॥

[ராமபிரானுடைய தேர்க்குதிரையின் கடிவாளங்களை பரதன் பிடித்துக்கொண்டான். சத்ருக்னன் (ராமனுக்குக்) குடைபிடித்தான். அந்த ராமபிரானுடைய திருமுடியில் லக்ஷ்மணன் விசிறியால் விசிறினான்.]

31. ராமமேவாநுசிந்தயந்

[ராமனையே நினைத்துக்கொண்டு.]

32. ஸ்வதந்த்ர: கர்த்தா

[ஒரு செயலில் ஸ்வாதந்திரியமுள்ளவனாகக் கருதப்படுமவனே கர்த்தாவாவான்.]

33. கதா ந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா ।
சத்ருக்நேந ச வீரேண த்வயா ச ரகுநந்தந ॥

[ரகுகுலக் குழந்தாய்! மஹாத்மாவான பரதனோடும், வீரனான சத்ருக்னனோடும், உன்னோடும் நான் என்றுதான் கூடி வாழப் போகிறேனோ?]

34. ததஸ்ய த்ரிவிதஸ்யாऽபி து:க்கஜாதஸ்ய வை மம ।
கர்ப்பஜந்மஜராத்யேஷு ஸ்தாநேஷு ப்ரபவிஷ்யத: ॥
நிரஸ்தாதிஶயாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணம் ।
பேஷஜம் பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா ॥

---

29. ரா-அ 40-5. 30. ரா-யு 131-28. 31. ரா 32. அஷ்டாத்யாயி 1-4-54. 33. ரா-ஆ 16-40. 34. வி. பு 6-5-58&59.

[கர்ப்பம், பிறப்பு, கிழத்தனம் முதலிய அவஸ்தைகளில் உழலும் என்னுடைய (ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும்) மூன்றுவிதமான துக்கஸமூஹத்திற்கு, தனக்கு மேலில்லாத ஆநந்தரூபமான ஸுகமாயிருக்கையையே லக்ஷணமாக உடையதும், துக்கமற்றதும், முடிவற்றதுமான பகவத்ப்ராப்தியே மருந்தாக எண்ணப்படுகிறது.]

35. தஸ்மாத் தத்ப்ராப்தயே யத்ந: கர்த்தவ்ய: பண்டிதைர் நரை: ।
தத்ப்ராப்திஹேதுர் ஜ்ஞாநஞ்ச கர்ம சோக்தம் மஹாமுநே ॥

[மாமுனிவரே! கீழ்க்கூறிய காரணத்தாலேயே அந்த பகவானை அடைய அறிவாளிகளான மனிதர்களால் முயற்சி செய்யப்பட வேண்டும். அவனை அடைவதற்கு ஞானமும், கர்மமும் உபாயங்களாகச் சொல்லப்படுகின்றன.]

36. மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:

[நாராயணன் தாயாகவும், தந்தையாகவும், தன்னுடன் பிறந்தவனாகவும், தங்குமிடமாகவும், மோக்ஷோபாயமாகவும், நண்பனாகவும், மோக்ஷத்தில் அடையப்படுமவனாகவுமிருப்பவன்.]

37. யேந யேந வியுஜ்யந்தே ப்ரஜா: ஸ்நிக்தேந பந்துநா ।
ஸ ஸ பாபாத்ருதே தாஸாம் துஷ்யந்த இதி குஷ்யதாம் ॥

[குடிகள் எந்த எந்த அன்புமிக்க உறவினரை இழக்கின்றனரோ, (ஸ்த்ரீக்குப் பதியாயிருக்கும்) பாபவுறவைத்தவிர அந்த அந்த உறவினராக துஷ்யந்தனேயிருப்பான் என்று கோஷிக்கப்படட்டும்.]

38. கதிர் பர்த்தா ப்ரபுஸ் ஸாக்ஷீ நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவப்ரளயஸ்தாநம் நிதாநம் பீஜமவ்யயம் ॥

[அடையுமிடமும், தாங்கி நிற்பவனும், நியமிப்பவனும், (அனைத்தையும்) நேரே காண்பவனும், இருப்பிடமும், உபாயமும், நண்பனும், (ஓவ்வொருவர்க்கும்) உற்பத்திக்கும், அழிவுக்கும்

35. வி-பு (6-5-60) 36. ஸுபால 16
37. சாகுந்தலம் 6-23. 38. கீதை 9-18.

ஸ்தானமாயிருப்பவனும், உற்பத்திக்கும், ப்ரளயத்திற்கும் விஷய மாகும் வஸ்துக்களும், அழியாத காரணமும் நானே.]

39. மாத்ருதேவோ பவ। பித்ருதேவா பவ।
ஆசார்யதேவோ பவ। அதிதிதேவோ பவ॥

[அகிலஜகந்மாதாவான பிராட்டியையும், அழிவற்ற தந்தையான அச்சுதனையும், (அறியாதன அறிவித்த) ஆசாரியனையும், விருந் தாரும் பெருந்தக்கோரான வைஷ்ணவர்களையும் தெய்வமாகக் கொள்வாயாக.]

40. உபாயே க்ருஹரக்ஷித்ரோச் ஶப்தச் ஶரணமித்யயம்।
வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தைகவாசக:॥

['ஶரணம்' என்னும் இந்த வார்த்தை, உபாயம், வீடு, காப் பாற்றுபவன் என்னும் அர்த்தங்களில் உபயோகிக்கப்படுகிறது. இப்போது இது 'உபாயம்' என்னும் அர்த்தத்தையே சொல்லு வதாயிருக்கிறது.]

41. அதிதிர் யத்ர பக்நாஶோ க்ருஹாத் ப்ரதிநிவர்த்ததே।
ஸ தஸ்மை துஷ்க்ருதம் தத்வா புண்யமாதாய கச்சதி॥

[யாதொரு வீட்டினின்றும் விருந்தாளி விருப்பம் நிறைவேறப் பெறாதவனாய்த் திரும்புகின்றானோ, அந்த விருந்தாளி வீட்டுக் காரனுக்குத் தன் பாபத்தைக்கொடுத்து, அவனுடைய புண்ணி யத்தை எடுத்துக்கொண்டு செல்கின்றான்.]

42. யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ।
தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந:॥

[எவனுக்குப் பரமபுருஷனிடம் மேலான பக்தியுளதோ, பரம னிடம்போலே ஆசாரியனிடமும் மேலான பக்தியுளதோ, அப்படிப்பட்ட மஹாத்மாவுக்குச் சொல்லப்பட்டால்தான் இந்த அர்த்தங்கள் பொருள்படும்.]

---

39. தைத்-ஶீக்ஷா 11-2. 40. அஹிர்புத்ந்யஸம்ஹிதை 37-29.
41. வி-பு 3-9-15; 3-11-66. 42. ச்வே 6-23.

43. அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே ।
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

[(அசேனத்தைப்போலல்லாமல்) விகாரம் அற்றவனாகவும், (ஸம்ஸாரி சேதனனைப்போலல்லாமல்) அசுத்தி இல்லாதவனாகவும், (முக்தாத்மாவைப் போலல்லாமல்) நித்ய சுத்தனாகவும், (நித்ய ஸூரிகளைப் போலல்லாமல்) தனக்குமேல் ஒருவனற்றவனாகவும், எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் திவ்யமங்களவிக்ரஹத்தை உடையவனாகவும், ஸர்வவ்யாபியாகவும், எல்லாவற்றையும் ஜயிப்பவனாகவுமுள்ள பகவானுக்கு (நமஸ்காரம்).]

44. ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேஶ:
ஸம்ஸார மோக்ஷஸ்திதி பந்தஹேது:

[ப்ரக்ருதிக்குப், ஜீவனுக்கும் ஸ்வாமியாய், குணங்கள் நிறைந்தவனாய், ஸம்ஸாரம் விடுபடுவதற்கும், நிலைநிற்பதற்கும் கட்டுவதற்கும் காரணமாயிருப்பவன் பரமாத்மாவே.]

45. இத்யுக்த்வாத நிஜம் கர்ம ஸா சகார குடும்பிநீ ॥

[ 'துறுதுறுக்கைத்தனமுள்ளவனே! உன்னால் முடியுமாகில் இப்போது போ' என்று, குடும்பினியான அவள் தன் வீட்டு வேலையைச் செய்யலுற்றாள்.]

46. ஸ கல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்ம-
லோகமபிஸம்பத்யதே । ந ச புநராவர்த்ததே । ந ச புநராவர்த்ததே ॥

[அந்த முமுக்ஷுவானவன் தன் ஆயுள் முடியும்வரையில் இப்படி வாழ்ந்து (ஆயுள் முடிந்தபின்) ப்ரஹ்மத்தின் உலகை அடைகிறான். மறுபடி இங்கு திரும்பிவருகிறதில்லை.]

47. ந வா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவதி
ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி

---

43. வி-பு 1-2-1. 44. ச்வே 6-16. 45. வி-பு 5-6-15.
46. சாந் 1-15-1. 47. ப்ருஹ 6-5-6.

[எல்லாப் பொருள்களின் விருப்பத்திற்காக எல்லாம் இனியவை யாகின்றனவல்ல; ஆத்மாவின் விருப்பத்திற்கே எல்லாம் இனியவை யாகின்றன.]

48. ரஸோ வை ஸ:। ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி।
கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்।
யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்। ஏஷ ஹ்யேவாநந்தயாதி।

[ரஸ (ஆநந்த) ஸ்வரூபனென்றோ அந்தப் பரமபுருஷன். ரஸஸ்வரூபனான அவனை அடைந்து (இந்த ஜீவன்) ஆநந்தத்தை உடையவனாகிறான். பிரகாசிப்பவனும், ஆநந்த ஸ்வரூபனுமான இப்பரம புருஷன் இல்லாவிடில் எவன் இவ்வுலகிலுள்ள ஸுகத்தையோ, மோக்ஷ ஸுகத்தையோ அடையமுடியும்? (ஆகையால்) இவனே (ஜீவனை) ஆநந்திப்பிக்கிறான்.]

49. வைகுண்டசரணாம்போஜஸ்மரணாம்ருதஸேவிந:

[வைகுந்தனின் திருவடித்தாமரையிணையின் நினைவாகிற அமுதத்தைப் பருகுமவர்கள்.]

50. கச்சதாம் தூரமத்வாநம் த்ருஷ்ணாமூர்ச்சித சேதஸாம்।
பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்॥

[நெடுவழி நடப்பவர்களும், தாஹத்தால் மயங்கிய நெஞ்சையுடையவர்களுமான அவர்களுக்குத் தாமரைக்கண்ணனின் திருநாம ஸங்கீர்த்தனவமுதமே கட்டுச்சோறாகும்.]

51. வாஸுதேவோऽஸி பூர்ண:

[ஜ்ஞாநாதிகுணங்கள் ஆறும் நிறைந்த பரவாஸுதேவனாயிருக்கிறாய்.]

52. க்ருஷிர் பூவாசக: ஶப்தோ ணச்ச நிர்வ்ருதிவாசக:।
விஷ்ணுஸ் தத்பாவயோகாச்ச க்ருஷ்ண இத்யபிதீயதே॥

['க்ருஷி' ஶப்தம் (க்ருஷி விஷயமான) பூமியைச் சொல்லும் சொல். 'ண:' என்பது ஆநந்தத்தைக்குறிக்கும் சொல். ஆநந்தத்துக்கு

48. தைத்-ஆந-7. 50. காருட புராணம் 220-16.

விளைநிலமாயிருக்கும் அந்தன்மையை உடையவனாகையால் விஷ்ணுவானவர் 'க்ருஷ்ணன்' என்று சொல்லப்படுகிறார்.]

53. பக்திக்ராஹ்யோ ஹி கேஶவ:
[பக்திக்குக் கட்டுப்படுமவன் கேசவன்.]

54. அபங்குர பக்திபவ்ய:
[அசையாத பக்திக்கே வசப்படுமவன்.]

55. பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்த்வத: ।
தத்தோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தததந்தரம் ॥
[ஸ்வரூபஸ்வபாவங்களில் நான் எவனோ, குணவிபூதிகளில் நான் எவ்வளவு பட்டவனோ, அப்படிப்பட்ட என்னை பக்தியினால் உள்ளபடி அறிகிறான். என்னை உள்ளபடியறிந்து அதற்குப்பின் பக்தியினாலேயே என்னுள் நுழைகிறான்.]

56. பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥
[அர்ஜுனா! எதிரிகளை அழிப்பவனே! ஒருபலனை எதிர்பாராத பக்தியினாலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.]

57. புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வநந்யயா ।
யஸ்யாந்தஸ்ஸ்தாநி பூதாநி யேந ஸர்வமிதம் ததம் ॥
[பார்த்தனே! யாவனொருவனுக்குள் ஸகல பூதங்களும் உள்ளனவோ எவனால் இதெல்லாம் வியாபிக்கப்பட்டதோ, அந்தப்பரமபுருஷன் வேற்றிடம் செல்லாத பக்தியினாலேயே அடையத்தக்கவன்.]

58. நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந ।
யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ் தஸ்யைஷ ஆத்மா
விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ॥

---

55. கீதை 18-55. 56. கீதை 11-54. 57. கீதை 8-22.
58. கட 1-2-23.

[இந்தப்பரமாத்மா (பக்தியற்ற) ச்ரவணத்தினாலும், மனனத்தினாலும், தியானத்தினாலும் அடையத்தக்கவனல்லன். எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ, அவனாலேயே அடையத்தக்கவன்; அவனுக்கு இந்தப் பரமாத்மா தன்னுடைய திவ்யமங்களவிக்ரஹத்தை (ஸ்வரூபத்தை) காட்டுகிறான்.]

59. அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ

[வெகு சீக்கிரமாக பகவானை உகப்பிக்கும் அஞ்ஜலி மேலான அடையாளமாயிருக்கிறது.]

60. க்ருதாபராதஸ்ய ஹி தே நாந்யத் பச்யாம்யஹம் க்ஷமம் ।
அந்தரேணாஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத் ॥

[(ராமனிடம்) அபராதம் செய்த உனக்கு, கைகூப்பி லக்ஷ்மணனை உகப்பிப்பதைத் தவிர வேறு பிராயச்சித்தத்தை நான் காண்கிறேனல்லேன்.]

61. அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:

[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய குணங்களால் அடிமைப்பட்டவன்.]

62&63. பஞ்சசக்திமயே திவ்யே ஸுத்தஸத்வே ஸுகாகரே ।
த்ரிபாத்விபூதௌ பகவாநீச்வர்யா பரமேச்வர: ॥
நித்யமுக்தைக போக்யோऽஸௌ மோததே பகவாந் ஹரி: ॥

[பஞ்சசக்திமயமாய், அப்ராக்ருதமாய், சுத்தஸத்வகுணமயமாய், ஸுகத்திற்கு இருப்பிடமான பரமபதத்தில் ஈச்வரியான பிராட்டியோடுகூட பரமபுருஷனாய், ஜ்ஞாநாதிபூர்ணனான இந்த ஹரி நித்யமுக்தர்களுக்கு அநுபாவ்யனாயிருக்கிறான்.]

64. அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:
கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா: ।

---

59. பரத்வாஜஸம்ஹிதை. 60. ரா-கி 32-17.
61. ரா-கி 4-12. 64. ர-ஸ்த 2-41.

வரத நிஜேச்சயைவ பரவாநகரோ: ப்ரக்ரு
மஹதபிமாநபூதகரணாவலிகோரகிணீம் ॥

[வரந்தரும் பெருமானே! பிரளயகாலத்தில் அசேதனத்தைக்காட்டிலும் வாசியற்றவராய் உழலுகின்ற ஜீவராசிகளை இந்திரியங்களோடும் சரீரங்களோடும் சேர்க்கத் திருவுள்ளமிரங்கியவனாய், தன் ஸங்கல்பவசப்பட்டவனாய், மூலப்ரக்ருதியை, மஹான், அஹங்காரம், பஞ்சபூதங்கள், இந்திரியங்கள் ஆகிய இவற்றின் வரிசையாகிற அரும்புகளையுடையதாப்படி பண்ணினாய்.]

65. விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் ।
பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மங் ஹஸ்தபாதாதிஸம்யுதா ॥

[ப்ராஹ்மணரே! கைகால் முதலியவைகளுடன் கூடியதும், விசித்திரமானதுமான தேகமாகிற இச்செல்வம், ஸர்வேச்வரனுக்கு ஸமர்ப்பிப்பதற்காக ஆதிகாலத்திலேயே செய்யப்பட்டிருக்கிறது.]

66. ஹர்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ
மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி ।
தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம்
தத்ரைவ கேऽபி சபலா: சலபீபவந்தி ॥

[கருணைக்கடலான எம்பெருமான் (அஜ்ஞானமாகிற) இருளை நீக்கிக்கொள்ளவும், நன்மை தீமைகளை ஆராய்ந்து அறிவதற்கும், (இருட்டைப் போக்கடிப்பதற்கும், உள்ளவற்றையும், இல்லாதவற்றையும் ஆராய்ந்தறிவதற்கும் ஸாதனமான விளக்கைப்போன்ற வேதத்தைக்கொடுக்கிறான். பாக்யவான்கள், அந்தத் திருவிளக்கைக்கொண்டு, அந்த ஸர்வேச்வரனைக்கண்டு அநுபவிக்கிறார்கள்; சில சபலர்கள் அந்த விளக்கிலேயே விட்டில் பூச்சியைப்போல் விழுந்து மடிகிறார்கள்.]

67. உத்பத்யதே யதா லோகே துளஸீ கந்தஸம்யுதா

[எப்படி உலகில் துளஸியானது வாஸனையோடு கூடவே உண்டாகிறதோ]

65. ஸ்ரீவிஷ்ணுதத்வம் 6. 66. ர-ஸ்த 2-1.

68. நாஹம் புருஷகாரேண ந சாப்யந்யேந ஹேதுநா।
கேவலம் ஸ்வேச்சையாவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந॥

[நான் புருஷகாரத்தாலோ, அல்லது வேறொரு காரணத்தாலோ, வல்லாமல், என் விருப்பத்தால் மாத்திரமே ஒரு சேதனனை ஒரு போது கடாக்ஷிக்கிறேன்.]

69. பால ஆஷோடஶாப்தாத்து மூகபாவம் கமிஷ்யதி

[குழந்தையான நம்மாழ்வார் பதினாறுவயது வரையில் ஊமையாயிருப்பார்.]

70. அவ்யுச்சிந்நாஸ் ததஸ் த்வேதே ஸ்ருஷ்டிஸ்தித்யந்தஸம்யமா:

[(உலகை) ஆக்கல், அளித்தல், அழித்தல் என்னும் இந்த நியமங்கள் இடைவிடாமல் ஏற்படுவன.]

71. மத்பக்தஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ்சாநுமோதநம்।
ஸ்வயமப்யர்ச்சநஞ்சைவ மதர்த்தே டம்பவர்ஜநம்॥
மத்கதாச்ரவணே பக்தி: ஸ்வரநேத்ராங்கவிக்ரியா।
மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி॥
பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே।
ஸ விப்ரேந்த்ரோ முநி: ஸ்ரீமாந் ஸ யதி: ஸ ச பண்டித:॥
தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்॥

[(1) என் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யம், (2) என்னை ஆராதனம் செய்வதை ஆமோதித்தல், (3) தானே என்னைப் பூஜித்தல், (4) என் விஷயத்தில் ஆடம்பரமற்றிருத்தல், (5) என் கதைகளைக் கேட்பதில் அன்பு, (6) (என் கதைகளைக்கேட்கும்போது) குரல் தழதழத்தும், கண்ணீர் மல்கியும், உடம்பு மயிர்க்கூச்செறிந்து கொண்டுமிருக்கை, (7) எப்போதும் என்னை நினைத்திருக்கை, (8) என்னிடம் வேறு ஒரு ப்ரயோஜனத்தையும் கேளாதிருக்கை, என்னும் இந்த எட்டு விதமான பக்தியானது எந்த மிலேச்சனிடமும் காணப்படுகிறதோ, அவனே ப்ராஹ்மணச்ரேஷ்டன்; அவனே முனிவன்; அவனே தனவான்; அவனே பண்டிதன்;

---

71. காருடம் (219-6....10)

அவனுக்கு ஞானத்தை உபதேசிக்கலாம்; அவனிடமிருந்து ஞானோபதேசமும் பெறலாம். அவன் என்னைப்போல் பூஜிக்கத் தக்கவன்.]

72. உதாரஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்

[இவர்கள் எல்லாரும் உதாரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தாரகன்) என்று என் ஸித்தாந்தம்.]

73. ததோऽகில ஜகத் பத்மபோதாயாச்யுத பாநுநா।
தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா॥

[மஹாத்மாவாகிற அச்யுத சூரியன், அனைத்துலகமாகிற தாமரை மலருவதற்காக தேவகியாகிற கீழைத்திக்கில் தோன்றினன்.]

74. யத்கோ ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாராயணோ வஸதி யத்ர ஸஶங்கசக்ர:।
யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:
தஸ்மை நமோ வகுளபூஷண பாஸ்கராய॥

[(இருளைப்போக்கும் சூரியனுடைய ஆயிரம் கிரணங்களைப்போலே) எவருடைய ஆயிரம் திருவாய்மொழிப்பாசுரங்களும் மனிதர்களின் அகவிருளைப் போக்குகின்றனவோ, (சூரியமண்டலத்திற்போலே) நாராயணன் சங்கசக்கரங்களோடு கூடியவனாய், எவரிடத்தில் வஸிக்கிறானோ, (வேதத்திற்காணும் சூரியமண்டலத்தை வணங்குவதுபோலே) எவருடைய பிறப்பிடமான குருகூரை, ('குருகூர்ச் சடகோபன்' முதலான பாசுரங்களில்) காதிற்கேட்ட மாத்திரத்தில் அந்தணர்கள் வணங்குகின்றனரோ அப்படிப்பட்ட வகுளாபரணரான நம்மாழ்வாராகிய சூரியனுக்கு நமஸ்காரம்.]

75. தேவமிவாசார்யமுபாஸீத

[பரமாத்மாவைப்போலே ஆசாரியனையும் உபாஸிக்கக்கடவன்.]

76. 39—வது ப்ரமாணம் காண்க.

---

72. கீதை 7-18. 73. வி-பு 5-3-1. 74. பராங்குசாஷ்டகம். 75. ஆபஸ்தம்பதர்மஸூத்ரம்.

